# பதிற்றுப் பத்தந்தாதி

---

## திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி.

அஃதாவது திருக்கருவைப்பிரான்மீது இயற்றப்பட்ட பதிற்றுப்பத்தந்தாதியாகிய நூல் என்பதாம். திரு என்னும் அடையடுத்த கருவையென்பது பாண்டிநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்று, பத்து+பத்து=பதிற்றுப்பத்து என "ஒன்று முதலீரைந்தாயிரங் கோடி, யெண்ணிறையளவும் பிறவரிற்பத்தின், ஈற்றுயிர்மெய்கெடுத்தின்னு மிற்றும், ஏற்பதேற்குமொன்பது மினைத்தே." என்னுஞ் சூத்திரவிதிப்படி இற்றுச்சாரியை யேற்றுப்புணர்ந்தது. இது எண்ணலளவையாகுபெயராய் நூலுறுப்பாகிய செய்யுளையுணர்த்திநின்றது. அந்தாதியாவது முன்னின்ற செய்யுளின் ஈற்றடியின் இறுதி எழுத்தாயினும், அசையாயினும், சீராயினும், அடியாயினும் பின்வருஞ் செய்யுளின் முதலடிக்கு ஆதியாகவரத் தொடுக்கப்படுவது, அந்தம்+ஆதி எனப்பிரிக்க.

## காப்பு.

### அறுசீர்க்கழிநெடில் ஆசிரிய விருத்தம்.

ஆனகருவைப் பதிற்றுப்பத்தந்தாதிச் சொல்லலங்கன்முற்றும், ஞானவுருவாங்களஙீச னளினசரண மிசைச்சாத்தத், தானவருவி பொழிதடக்கைத் தறுகட்சிறுகட் புகர்முகத்துக், கூனலிளவெண் பிறைகோட்டுக்குணக்குஞ்சரத்தினடி தொழுவாம்.

(இ-ள்.) ஞான உரு ஆம் களஙீசன் - ஞானவடிவமாகிய களஙீசரது, நளினம் - தாமரைமலர்போன்ற, சரணமிசை - திருவடியின்மீது, ஆன - அவர்விஷயமாகச் சமைக்கப்பட்ட, கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி-திருக்கருவைப்பதிற்றுப் பத்தந்தாதியாகிய, சொல் அலங்கல் முற்றும் - சொல்மாலைமுழுதும், சாத்த - அணிதற்பொருட்டு, தானம் அருவிபொழி-மதநீராகிய அருவியைப்பொழிகின்ற, தடம்கை - பெரியதுதிக்கையையும், தறுகண் - அஞ்சாமையையும், சிறுகண் - சிறியகண்களையும், புகர்முகத்து - புள்ளிகளோடு கூடிய முகத்தையும், கூனல்-வளைவாகிய, இளமை - இளமைபொருந்திய

வெள்பிறை - வெண்பிறைபோன்ற ஒற்றைக்கொம்பினையும் உடைய, குணக்குஞ்சரத்தின் - குணவிநாயகரது, அடி - திருவடியை, தொழுவாம் - (யாம்) வணங்குவோம். எ-று.

சைவசமயிகள் யாவரும் தாம் யாதாயினுமோர் நூல் செய்யத் தொடங்கினால் அந்நூல் இடையூறின்றி யினிது முடிதற்பொருட்டு, நூன்முகத்தில் விநாயகவணக்கங் கூறுதல் பெருவழக்காதலால், இந்நூலாசிரியரும் அவ்வாறே கூறினர். எல்லா அவயவங்களினுஞ் சிறந்த அவயவமாகிய தலை யானைத்தலையாயிருத்தலால், இவரைக் குஞ்சரமென்றார். குணக்குஞ்சரம் - குணவிநாயகர். இது கருவைத்திருப்பதியிலுள்ள விநாயகர்க்குச் சிறப்புத்திருநாமம். இவ்வாறே, தில்லையிலுள்ள விநாயகர்க்குக் கற்பக்விநாயகர் என்னுந் திருநாமமும், மதுரையிலுள்ள விநாயகர்க்குச் சித்திவிநாயகர் என்னுந் திருநாமமும், முதுகுன்றிலுள்ள விநாயகர்க்கு ஆழத்துப்பிள்ளையார் என்னுந் திருநாமமும், திருவொற்றியூரிலுள்ள விநாயகர்க்குக் குணாலயவிநாயகர் என்னுந் திருநாமமும் வழங்குதல்காண்க.

சொல்மாலை-கவிமாலை. இது தன்னின் வேறாகிய மலர்மாலைகளினுஞ் சிறந்ததாதலால் இதனைச் சாத்தத்துணிந்தனர். இறைவன் ஞானவுருவினனாதலால், "ஞானவுருவாங்களவீசர்" என்றார். திருக்கருவைச் சிவபெருமான் திருவடியின்மேல் இந்தச் சொன்மாலையைச்சாத்த, குணவிநாயகர் எனக்குத் துணைசெய்யவேண்டுமென்பது கருத்து. தானவுருவி உருவகம். அலங்கல் தொழிலாகுபெயர். அடி பண்பாகுபெயர்.

## நூல்.

### அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

(1.) சீரார்கமலச்சேவடியென்சிந்தையிருத்தியுனதுதிருப்
பேராயிரமுமெடுத்தோதிப்பெம்மான்கருவையெம்மானென்
றாராவமுதமுண்டவர்போலனந்தானந்தத்தகநெகிழ
ஆராவின்பமறிவித்தாயறியேனிதற்கோர்வரலாறே.

(இ-ள்.) சீர்ஆர் - மேன்மைபொருந்திய, கமலம் - தாமரைமலர்போன்ற, சேவடி - உன்திருவடியை, என்சிந்தை இருத்தி-என் மனத்திலிருத்தி, உனது திருப்பேர் ஆயிரமும் - உன்திருநாமங்கள் ஆயிரத்தையும், எடுத்து ஓதி - எடுத்துச்சொல்லி; பெம்மான் - பெம்மானே, கருவை எம்மான் - திருக்கருவையெம்மானே, என்று - என்றுதுதித்து, ஆரா அமுதம் உண்டவர்போல்-தெவிட்டாத அமிர்தத்தை உண்டவர்போல, அனந்த ஆனந்தத்து - முடிவற்ற ஆனந்தத்தினால், அகம்நெகிழ - மனமுருகும்வண்ணம், ஆரா இன்பம்-தெ

ருக்காத ஆனந்தநிலையை, அறிவித்தாய் - உணர்த்தினை, இதற்கு- இப்படி நீசெய்ததற்கு, ஓர்வாராலாது அறியேன் - ஒருகாரணமுணர்ந் திலேன். எ-று.

வாரா இன்பம் எனக்கொண்டு இதுவரையில் சேராத இன்பம் எனினுமமையும். இறைவனே, உன்திருவடியை என்மனத்திலிரு த்தி, உன்திருநாமங்கள் ஆயிரத்தையும் எடுத்தோதி முடிவற்ற ஆகந் தத்தினால் மனநெகிழும்படி இன்பநிலையையறிவித்தாய், இதற்கு ஒருகாரணமுணர்ந்திலேன் என்பது கருத்து. கமலம்-நீரை அலங் கரிப்பது. பெம்மான், எம்மான் என்பன மான் ஈற்று ஆண்பாற் படர்க்கைப்பெயர்கள், பெம்மான் பெருமான் என்பதன் மரூஉ. எம்மான் என்பதில் பகுதி யாம், இந்தப்பகுதி படர்க்கையில் தன் மைவந்த வழுவமைதி. அனந்தானந்தம் தீர்க்கசந்தி. வரல் ஆறு- வருதலின்வழி. அதாவது காரணம்.

(2.) ஆறுக்காமக் கொடியகனலைவர் மூட்டவலமனம்
நீறுய்வெந்துகிடப்பேனை நின்றாள் வழுத்தநினைவுதந்து
மாறுநேயத்திரவுபகன்மறவாதிருக்கவரமளித்தாய்
சீறுடரவமுடித்தசடைக்கருவைவாழுஞ்செழுஞ்சுடரே.

(இ-ள்.) சீறு - சீறுகின்ற, ஆடு - படமெடுத்தாடுகின்ற, அர வம் - பாம்பை, முடித்த - தரித்த, சடை-சடையையுடைய, கருவை வாழும் - திருக்கருவையில் வாழ்கின்ற, செழுசுடரே - செழுமையா கிய சோதியே, ஆறு - தணியாத, கொடிய - கொடுமையாகிய, கா மக்கனல் - காமத்தீயை, ஐவர்மூட்ட-ஐவர் மூள்வித்தலால், அவலம் மனம்-வருந்துகின்ற என்மனமானது, வெந்து நீறுஆய் கிடப்பேனை- வெந்து நீறய்க்கிடக்கின்ற எனக்கு, நின்தாள்வழுத்த - உன்திருவடி யைத் துதிக்க, நினைவுதந்து - நினைவைக்கொடுத்து, மாறுநேயத்து- இடையறாத அன்பினால், இரவு பகல் - இரவிலும் பகலிலும், மற வாது இருக்க - உன்னை மறவாதிருக்கும்படி, வரம் அளித்தாய்- வரத்தையும் அருளினை, (இதற்குக்காரணம் யாதோ அறிகிலேன்.)

இறைவனே, கொடிதாகிய காமத்தீயால் வெந்துகிடக்கின்ற எனக்கு, உன்திருவடியைத் துதித்தற்குரிய நினைவையுண்டாக்கி, உன்னை மறவாதிருக்கும்படி வரத்தையுங் கொடுத்தாய், இதற்குக் காரணம் யாதோ அறிகிலேன் என்பது கருத்து. ஐவர் தொகைக் குறிப்புச்சொல். இது காமக்கொடியகனல் என்ற குறிப்பால் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் பஞ்சேந்திரியங்களையுணர்த்தி யது. மூட்ட காரணப்பொருளதாகிய பிறவினை இறந்தகாலச்செய வெனெச்சம். தன்வினையில் மூள எனவரும். சீறு, ஆடு என வினை

த்தொகை இரண்டடுக்கி அரவம் என்னும் செய்பவனாகிய ஒருபெயர் கொண்டன. அரா என்பது ஈறு குறுகி உகரமேற்று அரவு என நின்று, பின் அம் சாரியைபெற்று அரவம் எனவந்தது. ஈறுகுறுகி உகரமேற்றதற்குச் சூத்திரம். நன் - உயிர்-22. வாழும் என்னுஞ் செய்யுமென்வாய்பாட்டுப்பெயரெச்சம் நிகழ்காலமுணர்த்திநின்றது.

(3.) சுடரேவலியத்தடுத்தாண்டதுணையேபிறவித்தொடுகுழிவீழ்
இடரேயகலக்களா நீழலிருந்தகோவே யெம்பெருமான்
உடலேயோம்பித்திரியுமெனையுன்னை நினைக்கப்பணித்தவருட்
கடலேயுனையன்றொருதெய்வங்காண வழுத்தக்கடவேனே.

(இ-ள்.) சுடரே - சோதியே, வலிய தடுத்து ஆண்ட - வலிய வந்து என்னைத் தடுத்தாட்கொண்ட, துணையே - என்னுயிர்த்துணையே, பிறவி - பிறவியாகிய, தொடுகுழிவீழ்-(என்னால்) தோண்டப்பட்ட பள்ளத்தில் வீழ்கின்ற, இடர் அகல - துன்பம் நீங்கும்படி, களாநீழல் - திருக்களா நிழலின்கண், இருந்தகோவே - எழுந்தருளியிருந்த இறைவனே, எம்பெருமான் - எம்பெருமானே, உடலே ஓம்பித்திரியும் என்னை - உடம்பையே பாதுகாத்துத்திரிகின்ற என்னை, உன்னைநினைக்க பணித்த - உன்னை நினைக்கும்படி நியமித்த, அருள் கடலே - கருணைக்கடலே, உன்னை அன்று-உன்னையன்றி, ஒருதெய்வம் - வேறொருதெய்வத்தை, காண வழுத்த கடவேனே - நான் காணவும் துதிக்கவும் கடமையுடையேனே. எ-று.

உடம்பையே பாதுகாத்துத்திரிந்த என்னை, உன்னை நினைக்கும்படி நியமித்த அருட்கடலே, உன்னையன்றிப் பிறதெய்வங்களைக் காணவும் துதிக்கவுமாட்டேன் என்பது கருத்து. வலிய குறிப்பு வினையெச்சம். தொடு வினைத்தொகை வினைச்சொல். தொட்ட, தொடுகின்ற, தொடும் எனவிரியும். இது குழி என்னும் செயப்படுபொருள் கொண்டது. வீழ் என்பதை வினைத்தொகை வினையாகக் கொள்ளுதலேயன்றி, முதனிலைத் தொழிற்பெயராகக் கொண்டு வீழ்தலாகிய இடர் எனப் பண்புத்தொகையாகவும் கொள்ளலாம். எம்பெருமான் விளிப்பெயர். அன்றி என்னும் எதிர்மறைக்குறிப்பு வினையெச்சம் செய்யுளாகையால் அன்று எனத்திரிந்துவந்தது. அவ்வாறு திரிந்ததற்குச் சூத்திரம். நன்-உயிர்-23. கடவேன் கடமை என்னும் பண்படியாகப்பிறந்த தன்மை யொருமைக் குறிப்பு வினைமுற்று. வழுத்தக் கடவேன் என ஒருசொல்லாகக்கொண்டு இடப்பொதுமையும் பாற்பொதுமையும் நீக்கிவந்த வியங்கோள் என்பாருமுளர்.

(4.) வேனிற்சிலைவேடொடுகணைக்கும்விளங்குமகளிருள்ளங்கவற்றும்
பானற்கொடியவிழிவலைக்கும்பற்றாய்வருந்தியனுதினமும்
ஈனத்துயரக்கடலழுந்துமென்னையும்பொருளாவடிமைகொண்ட
ஞானத்துருவேதமிழ்க்கருவைநம்பாபொதுவினடித்தோனே.

(இ-ள்.) சிலை-கருப்புவில்லையுடைய, வேனில்வேள் - வசந்தகாலமன்மதன், தொடு - பிரயோகிக்கின்ற, கணைக்கும்-புட்பபாணங்களுக்கும், விளங்கும் - பிரகாசிக்கின்ற, மகளிர் - மாதருடைய, பானல் - கருங்குவளைமலர்போன்ற, உள்ளம் கவற்றும் - மனத்தைவருத்துகின்ற, கொடிய - கொடுமையாகிய, விழிவலைக்கும்-கண்ணாகிய வலைக்கும், பற்று ஆய் - இலக்காகி, வருந்தி - துன்புற்று, அனுதினமும் - நாள்தோறும், ஈனத்துயரக்கடல் அழுந்தும் - இழிவாகிய துன்பக்கடலில் அழுந்துகின்ற, என்னையும் - அடியேனையும், பொருள்ஆ - ஒருபொருளாக, அடிமைகொண்ட - அடிமைகொண்டருளிய, ஞானத்து உருவே - ஞானவடிவே, தமிழ் கருவை-தமிழ்வழங்குந் திருக்கருவையில் எழுந்தருளிய, நம்பா - நம்பனே, பொதுவில் நடித்தோனே - அம்பலத்தில் திரு நிருத்தம் செய்தவனே. எ-று.

மன்மதபாணத்துக்கும், மாதர்விழிக்கும் இலக்காகி வருந்தி துன்பக்கடலில் அழுந்து மென்னை ஒருபொருளாக்கி அடிமை கொண்ட ஞானரூபனே, உன்பெருங்கருணையிருந்தவாறென்னையென்பது கருத்து. கவற்றும் பிறவினை செய்யுமென்வாய்பாட்டுப் பெயரெச்சம். தன்வினையில் கவலும் எனவரும். மன்மதனுக்குக் கணை-மலர், வில்-கரும்பு, நாண்-வண்டு. அம்மலர்க்கணைகளாவன :—தாமரை, மா, அசோகு, முல்லை, நீலம் என்பன. பானல் என்பது விழியென்பதனோடு உவமைத்தொகையாய் நின்றது. மகளிர் பன்மை விகுதியேற்ற பெண்பாற்படர்க்கைப்பெயர். இவ்வாறே வில்லிகள் என ஆண்பாற்படர்க்கைப்பெயரும் பன்மை விகுதிபெற்றுவரும். நம்பா விளிப்பெயர். எழுவாய் நம்பன்.

(5.) நடித்தேன்பொய்க்கூடெடுத்தவமேநன்னாள்கழியவிந்நாளில்
படித்தேனுனதுதிருநாமம்பண்டைவினையைப்பற்றறுத்தேன்
பிடித்தேன்பிறவிக்கடனீந்தப்பெரியபுணையாவுனதடியை
முடித்தேனுள்ளத் தெண்ணமெல்லாங் கருவைவாழு முன்னோனே.

(இ-ள்.) கருவைவாழும் முன்னோனே - திருக் கருவையில் வாழ்கின்ற முன்னவனே, பொய்க்கூடு எடுத்து - பொய்யாகிய சரீரத்தைத்தாங்கி, அவமே-வீணாகவே, நல்நாள்கழிய - நல்லநாட்கள் கழியாநிற்க, நடித்தேன் - திரிந்தேன், இந்நாளில் - இந்நாளில், உனது திருநாமம்படித்தேன் - உன்திருநாமத்தைப் படனம்பண்ணி

னேன், பண்டைவினையைப்பற்று அறுத்தேன்-பழவினைகளைத் தொடர்பறுத்தேன், பிறவிக்கடல்நீந்த - பிறவியாகிய கடலை நீந்துதற்கு, பெரியபுணைஆ - பெரியமரக்கலமாக, உனது அடியை-உன்திருவடியை, பிடித்தேன் - பற்றினேன், உள்ளத்து எண்ணம் எல்லாம்-என் மனத்தினிடத்தனவாகிய எண்ணங்களையெல்லாம், முடித்தேன் - முடித்துக்கொண்டேன். எ-று.

திருக்கருவை முதல்வனே, பொய்யுடம்பெடுத்து வீணாள்கழித்தேன், இப்போது உன் திருநாமத்தையுச்சரித்து பழவினையைப்பற்றறுத்தேன், பிறவிக்கடலை நீந்துதற்குப் பெரியபுணையாக வுன்திருவடியைப்பற்றினேன், என் எண்ணங்களெல்லாம் கைகூடப்பெற்றேன் என்பதுகருத்து. வீடடைதற்குரிய மானுடதேகம் கிடைக்கப்பெற்றநாள் ஆகையால் நன்னாள் என்றார். முன்னமே உன்திருநாமத்தைப் படிக்கப்பெற்றிலேன் என்பார் "இந்நாளிற்படித்தேனுனது திருநாமம்" என்றார். பண்டைவினை என்றது சஞ்சித பிராரத்தவினைகளை. புணை தொழிலாகுபெயர்.

(6.) முன்னைப்பிறவித்தவப்பயனோமுழுதுமறியாமூடனிவன்
என்னக்கருத்திலிரக்கமோயாதோவறியேனிரவுபகல்
கன்னற்பாகிற்கோற்றேனிற்கனியிற்கனிந்தகவிபாட
அன்னத்தொகுதிவயற்கருவையாண்டானென்னையாண்டதுவே

(இ-ள்.) இரவுபகல் - இரவினும் பகலினும், கன்னல்பாகின் - சர்க்கரைப்பாகினும், கோற்றேனின் - கோற்றேனினும், கனியின்-முக்கனியினும், கனிந்த - சுவைமுதிர்ந்த, கவிபாட - கவிபாடும்படி, அன்னத்தொகுதி - அன்னப்பறவையின் கூட்டம்நெருங்கிய, வயல்-கழனிகள்சூழ்ந்த, கருவை ஆண்டான் - திருக்கருவாபுரியிறைவன், என்னை ஆண்டது - என்னையாண்டருளினதற்குக் காரணம், முன்னைப்பிறவி - முற்பிறப்பில் நான்செய்த, தவப்பயனோ - தவத்தின் பயன்தானோ, (அன்றி) இவன் - இவன், முழுதும் அறியாமூடன்-ஒன்றுமறியாதமூடன், என்ன - என்று, கருத்தில் இரக்கமோ - திருவுளத்தில் இரக்கமோ, யாதோ - எதுவோ, அறியேன், உணர்ந்திலேன். எ-று.

கருவையிறைவன் என்னையாண்டதற்குக் காரணம் முற்பிறப்பில் யான்செய்த தவத்தின்பயனோ, அவனது பெருங்கருணையோ அறிகிலேன் என்பது கருத்து. கன்னற்பாகு திரிபினுக்கத் தற்கிழமைப்பொருளதாகிய ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். கோற்றேன் ஏழாம்வேற்றுமை உருபும் பயனுமுடன்றொக்கதொகை. கோலில் கட்டிய தேன் எனவிரியும். பாகின், தேனின், கனி

யின் என்பவைகளிலுள்ள ஐந்தனுருபுகள் எல்லைப்பொருளன. அன்னத்தொகுதி ஒன்றன்கூட்டத் தற்கிழமைப்பொருளதாகிய ஆறும் வேற்றுமைத்தொகை. ஆண்டான் என்றது இறைவனை. ஆன்மாக்கள் அடிமை என்னப்படுவர். ஆண்டான் அடிமை என்பது சைவ சாம்பிரதாயத்தொடர். ஆண்டதுவே எனக் குற்றியலுகரம் உயிரின்முன் கெடாமல் வந்தது.

(7) ஆண்ட குரவ னவானை யல்லற் பிறவி யறுப்பானை, வேண்டும் பதவிதருவானை வெளிவீட் டின்ப மளிப்பானைத், தூண்டல்செய்யா மணிவிளக்கைத் தொழின்மூன் றியற்றுந் தொல்லோனைக், காண்டற்கரிய பேரொளியைக் களாவி னிழற்கீழ்க்கண்டேனே

(இ-ள்.) ஆண்டகுரவன் ஆவானை - என்னையாண்டருளின தேசிகோத்தமனவானை, அல்லல்பிறவி அறுப்பானை - துன்பத்துக்கிடமாகிய பிறப்பைச் சேதிப்பவனை, வேண்டும் பதவி தருவானை - விரும்பும்பதவிகளைக் கொடுத்தருள்வோனை, வெளிவீட்டு இன்பம் அளிப்பானை - தேஜோமயமாகிய முத்தியின்பத்தை யருள்செய்வோனை, தூண்டல்செய்யா மணிவிளக்கை - தூண்டுதல்செய்யவேண்டாத ரத்நதீபத்தை, தொழில்மூன்று இயற்றும் தொல்லோனை-முத்தொழில்களையுஞ் செய்யும் பழையோனை, காண்டற்கு அரிய பேர் ஒளியை - காணுதற்கருமையாகிய பெரியசுடரை, களாவின்நிழல் கீழ் - திருக்களாநிழலில், கண்டேன் - தரிசித்தேன். எ-று.

முத்தொழில்-சிருட்டி, திதி, சங்காரம் என்பன. குருமூர்த்த முதலாகப் பலவகையானும் எனக்குபகரித்த இறைவனைக் களாநிழலின்கண்ணே கண்டுகொண்டேன் என்பது கருத்து. சிவபிரான் என்னும் ஒருபொருள்குறித்த ஆண்ட குரவனவானை முதல் காண்டற்கரிய பேரொளியை என்பதிறுகிய தொடர்மொழிகள் கண்டேனே என்னும் ஒருவினைகொண்டன. சூத்திரம், நன் - பொது-41. திருக்கருவையில் களாச்செடியின்கீழ் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுக்கு முகலிங்கநாதர் என்றுபெயர். முகலிங்கநாதர்-திருமுகம் விளங்கிய லிங்கசொரூபமாகிய இறைவர். இத்திருக்கோலம் வியக்தாவியக்தம் என்னப்படும். வெளி-ஒளி.

(8) கண்டகண்கள் புனல்பாயக்களிப்பாயுள்ளங்கரையழிய
விண்டமொழியுநாக்குழறவிம்மிமேனிமயிர்பொடிப்பப்
பண்டைவசம்போய்ப்பரவசமாய்ப்பரமானந்தத்தெளிநறவம்
உண்டுதெவிட்டாவருள்புரிந்தான்கருவைவாழுமுரவோனே.

(இ-ள்.) கருவைவாழும் உரவோன் - திருக்கருவையில்வாழ்கின்ற அறிவுருவன், கண்ட கண்கள் புனல்பாய - தன்னைத்தரிசித்த

கண்களில் நீர்பெருகவும், உள்ளம்களிப்பாய் - மனங்களித்து, கரை அழிய - வரம்புகெடவும், விண்டமொழியும் நா குழற - வெளிப் படப்பேசுகின்ற சொல்லும் நாவும் குழறவும், மேனிவிம்மி - உடல் பூரித்து, மயிர்பொடிப்ப - உரோமஞ்சிலிர்க்கவும், பண்டைவசம் போய் - முன்னையவசமழிந்து, பரவசம் ஆய் - பரவசப்பட்டு, பரம ஆனந்தம் - பரமாநந்தமாகிய, தெளிநறவம் உண்டு தெவிட்டா-தெ ளிந்ததேனையுண்டு தெவிட்டாமைக்குக் காரணமாகிய, அருள்புரிந் தான் - தன்திருவருள்புரிந்தான். எ-று.

கருவையில் வாழ்கின்ற சிவபெருமான், கண்ணீர்பாய்தல் முத லான குணங்கள் எனக்குண்டாகச்செய்து, பரமாநந்தத்தேனையுண்டு தெவிட்டாதிருக்கும்படி அருள்செய்தான் என்பது கருத்து. கண் கள் என்பதனோடு புனல் என்பதும், புனல் என்பதனோடு பாய என் பதும் புணர்கையில் ளகரமும் லகரமும் இயல்பானதற்குச் சூத்தி ரம். நன்-மெய்-26. இதில் "வலிவரினியல்புந் திரிபுமாவன வுள பிற" என்றாராயினும் எழுவாய்த்தொடரில் இயல்பும், பண்புத்தொ கை, உவமைத்தொகை, வினையெச்சத்தொடர்களில் திரிபுமா‌ எனக்கொள்க. கரையழிதல் - அளவுகடத்தல். பரமானந்தத்தெ நறவுமுண்டு தெவிட்டாமையாவது இறைவனது கலியாணகுண‌ களை அநுபவிக்குந்தோறும் புதுமையாகத்தோன்றுகையால் மேலு மேலு மநுபவிக்கவேண்டுமென்னுமவா.

(9.) உரகாபரணத்திருமார்புமுமையொப்பனையாளிடப்புறமும்
சிரமாலிகையும்புரிசடையுஞ்செய்யவாயுங்கறைமிடறும்
வரதாபயமுமழுமானும்வயங்குகரமுமலரடியும்
கருவாபுரியான்வெளிப்படுத்திக்காட்சிகொடுத்துநின்றானே.

(இ-ள்.) கருவாபுரியான்-திருக்கருவாபுரியையுடைய இறை வன், உரகம் ஆபரணம் - சர்ப்பாபரணத்தையணிந்த, திருமார்பும்- தன்திருமார்பையும், உமை - உமாதேவியாகிய, ஒப்பனையாள் - ஒப் பனையம்மையமர்ந்த, இடப்புறமும் - இடதுபாகத்தையும், சிரமாலி கையும் - தலைமாலையையும், புரிசடையும் - கட்டப்பட்ட சடையை யும், செய்யவாயும் - செவந்தவாயையும், கறைமிடறும் - விஷகண் டத்தையும், வரத அபயமும் - வரத அபயங்களும், மழுமானும்-மழு வும் மானும், வயங்குகரமும்-விளங்குகின்ற கைகளையும், மலர் அடி யும் - தாமரைமலர்போன்ற திருவடியையும், வெளிப்படுத்தி-வெளி யாக்கி, காட்சிகொடுத்து நின்றான் - காட்சிதந்துநின்றருளினான்.

கருவாபுரியிறைவன், தன்திருமார்பு முதலியவற்றை வெளிப் படுத்தி எனக்குக் காட்சிதந்தருளினான் என்பது கருத்து. சிவபெரு

மான் அராவையும் மழுவையும் மானையும் அணிந்தசெய்தி:—தாருகாவனத்தில் சிவபிரான் தம்மை மதியாத முனிவர் மடந்தையரைப் பிக்ஷாடனகோலமாய்வந்து கற்பழிக்க, அது பொறாது அம்முனிவர்கள் சிவபிரானைக்கொல்ல யாகஞ்செய்து அந்த யாகத்தில் தோன்றிய அரா, புலி, சூலம், மான், பூதம், துடி, நகுவெண்டலை, தீ இவைகளை அப்பெருமான் மேல்விடுக்கப் பெருமானும் அவற்றின் வலியடக்கி, அணிமுதலிய அலங்காரப்பொருள்களாகத் தரித்தனர் என்பது. ஒப்பனையாள் திருக்கருவைப்பிரானது தேவியார் திருநாமம். ஒப்பனையாராகிய உமாதேவியார் இடப்பாகம்பெற்ற செய்தி :—பிருங்கிமுனிவர் சிவபிரானை மாத்திரம் வலம்வருவதைக் கண்ட உமாதேவியார் தம்நாயகனை நோக்கி என்னை வலம்வராமைக்குக்காரணம் யாதென்று கேட்க, சிவபெருமான் இஷ்டசித்திபெற விரும்புவோர் உன்னையும், மோக்ஷம்பெற விரும்புவோர் என்னையும் வலம்வருவார் என்றார், அஃதுணர்ந்த உமாதேவியாரும் சிவபிரானோடு பிரியாதிருக்கத் தவஞ்செய்து இடப்பாகம் பெற்றார் என்பது. உரகம்-மார்பால் நகர்வது. வரதம்-வரங்கொடுத்தல், அபயம்-அஞ்சேலென்றல்.

(10) நின்றநிலையுஞ்செய்தொழிலுநினைத்தகுறியும்வழிபாடும்
ஒன்றுபதமும்பதங்கடந்தவுண்மைப்பொருளு மறியேனை
இன்றுன்னடியருடன் கூடவெண்ணம்புரிந்தவினியவருள்
நன்றுநன்றுதமிழ்க்கருவைநம்பாவும்பர்நாயகனே.

(இ - ள்.) தமிழ்க்கருவைநம்பா - தமிழ்க்கருவாபுரிநம்பனே, உம்பர் நாயகனே - தேவர்பிரானே, நின்றநிலையும் - நின்றநிலையையும், செய்தொழிலும் - செய்தற்குரியதொழிலையும், நினைத்தகுறியும் - நினைத்தற்குரிய நினைவையும், வழிபாடும் - வழிபாட்டையும், ஒன்றுபதமும் - பொருந்துதற்குரியபதத்தையும், பதம்கடந்த - பதங்களைக்கடந்த, உண்மைப்பொருளும் - மெய்ப்பொருளையும், அறியேனை - அறியாத என்னை, இன்று - இப்பொழுது, உன் அடியாருடன்கூட-உன்னடியாருடன்கூடும்படி, எண்ணம்புரிந்த-திருவுளம் பற்றின, இனிய அருள் - இனிதாகிய உன்திருவருளானது, நன்று நன்று - அழகிது அழகிது. எ-று.

கருவைநாயகனே, நின்ற நிலைமுதலிய வொன்றையுமறியாத என்னை, உன்னடியாருடன் கூட்டின உன்திருவருள் அழகிது என்பது கருத்து.

வழிபாடு முதனிலைதிரிந்த தொழிற்பெயர். பகுதி வழிபடு. அறியேன் தன்மை யொருமை எதிர்மறை வினையாலணையும்பெயர்.

நன்று நன்று என்று மடுக்கு உவகைக்கண்வந்தது. உம்பர்-சுவர்க்க லோகவாசிகள். இவ்வுலகவாசியர் இம்பர் எனப்படுவார்.

எழுசீர்க்கழிநெடி லாசிரிய விருத்தம்.

(11) நாயகன் முகுந்தன் சததளப் பொகுட்டி னான்முக னென்ன வீற் றிருக்கும், தூயவன் கருவைக் களாநிழ லமர்ந்தோன்றுணை யடிப் புகழினை வழுத்தி, மாயிரு ஞால மெடுத்தெடுத்தேத்த வரம் பெறு மதுரநா வலர்கள், சேயிரு விசும்பிற் கற்பகநீழற் செல்வமும் வேண்டுவ திலையே.

(இ-ள்.) நாயகன் - சிவபெருமான், முகுந்தன் -விண்டு, சத தளப்பொகுட்டில் நான்முகன் - நூறு இதழ்களையுடைய தாமரை மலர்ப்பொகுட்டில் வீற்றிருக்குஞ் சதுர்முகன், என்ன-என்றுசொல் லும்படி, வீற்றிருக்கும் - வீற்றிருக்கின்ற, தூயவன் - பரிசுத்தன், கருவை - கருவாபுரியில், களாநிழல் அமர்ந்தோன் - களாநிழலில் எழுந்தருளியிருப்பவன், (அவனது) துணை அடி - இரண்டுதிருவடி களின், புகழினைவழுத்தி - சீர்த்தியைத்துதித்து, மா இருஞாலம்- மிகப்பெரியவுலகமானது, எடுத்து எடுத்து ஏத்த - எடுத்து எடுத்துத் துதிக்க, வரம்பெறும் - வரம்பெற்ற, மதுரநாவலர்கள் - மதுரகவி பாடும் நாவலர்கள், சேய் இருவிசும்பில் - தூரமாகிய பெரியவிண் ணுலகிலுள்ள, கற்பக நீழல் செல்வமும் - கற்பகமரநீழலில் வீற் றிருத்தற்குரிய பெருஞ்செல்வத்தையும், வேண்டுவது இல்லை - விரு ம்புதல் இல்லை. எ-று.

திருமால் முதலிய தேவர்களாகவுமிருக்கிற கருவைநாயகனது அடியார்கள் இந்திரபதத்தையும் விரும்பமாட்டார்கள் என்பது கரு த்து. முகுந்தன் - மோட்சவின்பத்தையும், இவ்வுலகவின்பத்தை யும் தருபவன். மா இரு-ஒருபொருட்பன்மொழி. சேய் மைவிகுதி கெட்டு நின்ற பண்புப்பெயர். கற்பகம் இந்திரலோகத்திலுள்ள பஞ்சதருக்களில் ஒன்று. பஞ்சதருக்களாவன :—அரிசந்தனம், கற்ப கம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம் என்பன. நாவலர் - நாவால் வல்லவர், நாவில்வல்லவர் என இரண்டு பொருளால் மயங்கிய தொ டர்மொழி ஒரு சொற்றன்மைப்பட்டு நின்றது. விசும்பு இடவாகு பெயர்.

(12) வேண்டுவ தொன்றி தமியனைப் பிறப்பும் வெந்தழ னரகிடை விழினும், காண்டகு சிறப்பி னரம்பையர் சூழக் கற்பக நீழல்வை கிடினும், தூண்டகு சுடரே களாநிழ லமர்ந்த சோதியே கருவை நாயகனே, ஆண்டகாய் நினது திருவடிக் கமலத்தன்பெனு மழி விலாப் பொருளே.

(இ - ள்.) தூண்தகுசுடரே - யாவர்க்கும் பற்றுக்கோடாகப் பொருந்திய ஒளியே, களாநிழல் அமர்ந்தசோதியே - திருக்களாநிழலில் அமர்ந்தசோதியே, கருவைநாயகனே-கருவாபுரிக்கிறைவனே, ஆண்தகாய் - ஆண்டகையே, தமியன் - தமியேன், எப்பிறப்பும்- எந்தப்பிறப்பிலும், வெந்தழல்நரகிடைவிழினும்-வெவ்விய நெருப்பெரிகின்ற நரகத்தில் வீழ்ந்தாலும், காண்தகுசிறப்பின் - காணத்தக்க சிறப்பினையுடைய, அரம்பையர்சூழ - தெய்வப்பெண்கள்சூழ, கற்பகநீழல்வைகிடினும்-கற்பகநிழலில் இருந்தாலும், வேண்டுவது- விரும்புவது, ஒன்று-ஒன்றுண்டு, (அதுயாதெனின்) நினது-உனது, திருவடிக்கமலத்து அன்பு என்னும்-திருவடித்தாமரையின்மீது செய்தற்குரிய அன்பென்கிற, அழிவு இல்லா பொருளே - அழிவற்ற பொருளே. எ-று.

கருவைநாயகனே, அடியேன்வேண்டுவதொருபொருளுண்டு, அது என்னெனின், நரக சுவர்க்கங்களில் எதையடைந்தாலும், உன் திருவடிக்கு அன்புசெய்தலாகிய அழிவற்றபொருளேயென்பது கருத்து. ஆண்டகை என்னும் உயர்திணை ஆண்பால் குறித்துநின்ற ஆறும்வேற்றுமைத் தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயரின் ஐகாரம் ஆய் எனத்திரிந்து விளியாயிற்று. தமியன் தமி என்னும் பண்படியாகப்பிறந்த ஆண்பாற்படர்க்கைப் பெயர். பகுதி - தமி (தனிமை), தன்மையில் படர்க்கைவந்த இடவழுவமைதி. பிறப்பும், விழினும், வைகிடினும் என்பவைகளில் உள்ள உம்மைகள் முறையே முற்றும்மையும் இழிவு சிறப்பும்மையும், உயர்வு சிறப்பும்மையுமாம். காண என்னும் செயவெனெச்சம் அகரவீறு தொகுத்தலாய்க் காண் எனவந்தது. ஒன்று எண்ணலளவையாகுபெயர்.

(13) அழிவிலாப் பொருளே பழமறைக்கொழுந்தே யலையெறி யமு
தவா ரிதியே, ஒழிவிலா தருளுங் சற்பகக் கனியேயொப்பனை
மைப்பரந் தெறிக்கும், விழியினாலுருகி யொருபுறமளித்த விமலனே
கருவையம் பரனே, இழிவிலாய் புணையாய் பிறவியங்கடனின்றேற
நான் பெற்றதுன் பதமே.

(இ-ள்.) அழிவு இல்லாபொருளே-அழிவற்றபொருளே, பழமறைக்கொழுந்தே - பழமையாகிய வேதத்தின்முடிவே, அலை எறி அமுதவாரிதியே - அலைவீசாநின்ற அமிர்தசாகரமே, ஒழிவு இல்லாது அருளும்-இடையறாமற்கொடுக்கின்ற, கற்பகக்கனியே-கற்பகமரத்தின்கனியே, ஒப்பனை - ஒப்பனையம்மையின், மைபரந்து எறிக்கும்-அஞ்சனமெழுதி விசாலித்து ஒளிவீசுகின்ற, விழியினால் உருகி-

கண்ணினுலுருகி, ஒருபுறம் அளித்த - ஒருபாகத்தைக்கொடுத்த, விமலனே-பரிசுத்தனே, கருவை - திருக்கருவையிலெழுந்தருளிய, அம்-அழகிய, பரனே - மேலோனே, பிறவிகடல் நின்று - பிறவிக்கடலினின்றும், ஏற - முத்திக்கரையிலேறும்பொருட்டு, இழிவு இல்லா-இழிவற்ற, புணை ஆ - மரக்கலமாக, நான்பெற்றது - நான்பற்றினது, உன்பதமே - உன் திருவடியே. எ-று.

திருக்கருவைப்பெருமானே, பிறவிக்கடலைக்கடப்பதற்குப் பெரும்புணையாக நான்பற்றினது உன்திருவடியையே என்பது கருத்து. அம்ருதம் என்னும் வடமொழி அமுதம் எனத்திரிந்தது. இவ்வாறு திரிவதனை தற்பவம் என்பர். விமலன்-மலநீக்கமுடையவன். வி என்னும் உபசர்க்கை எதிர்மறை குறித்துநின்றது. மலம் மூன்று; அவை :—ஆணவம், காமியம், மாயை. புணை முதனிலைத்தொழிலாகுபெயர். பிறவிக்கடலினின்றுங் கரையேற்றி முத்தியிற்சேர்ப்பது இறைவன் திருவடியே யாதலின் தேற்றேகாரங்கொடுத்து "நான் பெற்ற துன்பதமே" என்றார். "பிறவிப்பெருங்கடல் நீந்துவர் நீந்தார் இறைவனடி சேராதார" என்றார் திருவள்ளுவரும்.

(14) உன்பத மேத்தித்துன்பவே ரறுக்க வுலகினிற் றிருவுடன்வாழு, மன்பதைக்கெல்லா மெய்திடுந் தரமோ வலியவந் தென்னைத்தடுத்தாண்டுள், அன்புவந் தொருவ ரறிந்திடா வறிவு மறிவுறுத் தருளினை யதற்கு, முன்பெது புரிந்தேன் கருவையம்பதிவாழ் முதல்வனே முக்கண்வா னவனே.

(இ - ள்.) கருவையம்பதிவாழ்முதல்வனே - திருக்கருவாபுரியில் வாழ்கின்ற முதல்வனே, முக்கண்வானவனே - முக்கட்டேவனே, உன்பதம் ஏத்தி - உன்திருவடியைத்துதித்து, துன்பவேர் அறுக்க - துன்பத்தின் வேரைக்களைய, உலகினில்-உலகத்தில், திருவுடன்வாழும் - செல்வத்தோடுவாழ்கின்ற, மன்பதைக்கு எல்லாம்-மக்கள்கூட்டத்துக்கெல்லாம், எய்திடும்தரமோ - அடையப்படுந்தரமோ, வலியவந்து - வலிய எழுந்தருளி, என்னைத் தடுத்தாண்டு-என்னைத் தடுத்தாட்கொண்டு, உள்அன்புவந்து - உள்ளன்புண்டாகி, ஒருவர் அறிந்திடா அறிவும் அறிவுறுத்து அருளினை-ஒருவரும் அறியாத அறிவையும் எனக்கறிவுறுத்தி அருளினை, அதற்கு - அப்படி நீசெய்தற்கு, முன்பு எதுபுரிந்தேன் - முற்பிறப்பில் எத்தவஞ்செய்தேன். எ-று.

கருவைப்பதிவாழ்முதல்வனே ; உன்திருவடியைத் துதித்துத் துன்பத்தை வேரறுக்க உலகத்துள்ள உயிர்த்தொகுதிக்கு இசையுமோ, என்னை வலியவந்தாண்டருளி ஞானத்தையருள்செய்தனை,

அப்படி நீ செய்தற்குக் காரணமாக, நான் முற்பிறப்பில் எத்தவத்து செய்தேனே என்பது கருத்து. இறைவனுக்கு முக்கண்கள் சோம சூரியாக்கினிகள். மன்பதை, பைஞ்ஞீல் என்பன மக்கட்கூட்டத்தை யுணர்த்தும் பன்மைக்கேயுரியபெயர்கள். வலிய குறிப்புவினையெச்சம். அறிவுறுத்தி பிறவினை இறந்தகாலவினையெச்சம். தலைவியில் அறிவுற்று எனவரும். முன்பு முற்பிறப்பை உணர்த்தலால் காலவாகுபெயர். "தவமும் தவமுடையார்க்காகும்" என்பர் ஆதலால் "முன்பு எது புரிந்தேன்" என்றார்.

(15) வானெரி யறல்கான் மண்ணெனப் பகுக்க வரும்பெரும பூதமோ ரைந்தும், ஆனமுக் குணமுங் கரணமோர் நான்கு மனைத்துமா யாதியீறின்றி, ஊனுறையுடலுக் குயிருமாயுயிருக்குணர்வுமா யொன்றினுந் தோயா, ஞானநா யகனே கருவையம்பரனே நானறிந் துரைக்குமா றெவனே.

(இ-ள்.) வான் - ஆகாயம், எரி - அக்கினி, அறல் - நீர், கால் வாயு, மண் - பூமி, எனப்பகுக்கவரும் - என்று பகுத்தறியவருகிற, பெருபூதம் ஓர் ஐந்தும் - பஞ்சமஹாபூதங்களும், ஆன முக்குணமும் - ஆகிய முக்குணங்களும், கரணம் ஓர்நான்கும் - காரணங்களொருநான்கும், அனைத்தும் ஆய் - மற்றுமுள்ள எல்லாமாகி, ஆதி ஈறு இன்றி - முதலிறுதிகளின்றி, ஊன் உறை உடலுக்கு உயிரும் ஆய் - மாமிசம்பொருந்திய உடலுக்கு உயிராகியும், உயிருக்கு உணர்வும் ஆய் - உயிருக்கு உணர்வாகியும், ஒன்றினும் தோயா - ஒன்றினும் பொருந்தாத, ஞானநாயகனே - ஞானநாதனே, கருவை அம்பரனே - திருக்கருவைப்பரமனே, நான் அறிந்து உரைக்கும் ஆறு - நானறிந்து புகழும்விதம், எவன் - யாது. எ-று.

கருவைநாயகனே, ஆகாயமுதலியவாகி நீயே நிலைபெற்றிருத்தலால் நான் உன்னையறிந்து புகழும் வகையாது என்பது கருத்து. முக்குணங்களாவன :—சாத்துவிகம், இராசசம், தாமசம் என்பன. ஞானம், அருள், தவம், பொறை, வாய்மை, மேன்மை, மோனம், ஐம்பொறியடக்கல் என்னும் இவ்வெட்டும் சாத்துவிககுணத்தின் காரியங்களாம். மனவூக்கம், ஞானம், வீரம், தவம், தருமம், தானம், கல்வி, கேள்வி என்னும் இவ்வெட்டும் இராசசகுணத்தின் காரியங்களாம். பேருண்டி, நெடுந்துயில், சோம்பு, நீதிவழு, ஒழுக்கவழு, வஞ்சம், மறதி, பொய், கோபம், காமம், கொலை என்னும் இப்பதினொன்றும் தாமசகுணத்தின் காரியங்களாம். கரணம் நான்காவன :—மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பன. இவற்றின் தொழில்கள் முறையே நினைத்தலும், ஆராய்தலும், நிச்சயித்தலும், தொழில் முயற்சியுமாம். எவன் அஃறிணையிருபாற்கும் பொதுவாகிய குறிப்பு வினைமுற்று.

(16) எவனுயிர்க் குயிரா யெள்ளுமெண் ணெய்ம்போ லெங்கணு மிடையறு நின்றான், எவனனைத் துலகு மீன்றுகாத் தழிக்க விறை மைசான் மூவுரு வெடுத்தான், எவன்முத லிடையீ றின்றியெஞ் ஞான்று மீறிலா மறைமுடி யிருப்பான், அவனெனைப் புரக்கத் திரு க்களா நீழலமர்ந்தருள் புரிந்த காரணனே.

(இ-ள்.) உயிர்க்கு உயிர் ஆய் - உயிர்க்குயிராகி, எள்ளும் எண் ணெய்ம்போல் - எள்ளும் எண்ணெய்ம்போல, எங்கணும்-எவ்விடத் தும், இடை அறு நின்றான் - நீக்கமற நின்றவன், எவன் - யாவன், அனைத்து உலகும்-எல்லாவுலகங்களையும், ஈன்று-படைத்து, காத்து- ரட்சித்து, அழிக்க - சங்கரிக்க, இறைமைசால் - தலைமைமிகுந்த, மூவுரு எடுத்தான் - மூன்றுருவங்களை யெடுத்தவன், எவன்-யாவன், முதல் இடை ஈறு இன்றி - முதலும் நடுவும் இறுதியும் இல்லாமல், எஞ்ஞான்றும்-எக்காலத்தும், ஈறு இல்லா-முடிவில்லாத, மறைமுடி இருப்பான்-வேதத்தின் முடிவிலிருப்பவன், எவன்-யாவன், அவன்- அந்தச் சிவபெருமானே, என்னைப்புரக்க - என்னைக்காக்க, திருக் களா நீழல் அமர்ந்து-திருக்களாநிழலை விரும்பியெழுந்தருளி, அருள் புரிந்த-அருள்செய்த, காரணன் - உலககாரணன். எ-று.

உயிர்க்குயிராயிருத்தல் முதலிய குணங்களையுடையவன் எவ னோ, அவன்தான் என்னைக் காத்தற்பொருட்டுக் களாநிழலில் அமர் ந்திருப்பவன் என்பது கருத்து. இடையறு ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம். இருப்பான் என்பதில் பகரவிடைநிலை தன்மை உணர்த்தியது.

(17) காரண மேதென் றறிகிலேன் றமியேன் கற்றல மனத்தினைக் கரைத்து, வாரணி முலையாளொப்பனையோடு மழவிடைமேலெழுந் தருளி, நாரண னறியாத் திருவுருக் காட்டி நல்லருள் சுரந்துவாழ் வித்தான், பூரணன் கருவைக் களாநிழ லமர்ந்த புண்ணியன் விண் ணவர்க் கிறையே.

(இ-ள்.) பூரணன் - எவ்விடத்தும் நிறைந்திருப்பவன், கரு வைக்களாநிழல் அமர்ந்த புண்ணியன் - திருக்கருவைக்களாநிழலில் எழுந்தருளிய புண்ணியவான், விண்ணவர்க்கு இறை - தேவர்களுக் குத்தலைவன், (அவன்) தமியேன் - தமியேனது, கல்தலம் மனத் தினைக் கரைத்து - கல்லைநிகர்த்த வன்மனத்தையும் உருக்கி, வார் அணிமுலையாள்-கச்சையணிந்த தனங்களையுடையவளாகிய, ஒப்பனை யோடு-ஒப்பனையம்மையுடன், மழவிடைமேல் எழுந்தருளி - இளமையாகிய இடபத்தின்மீது எழுந்தருளி, நாரணன் அறியா - திரு மாலும் அறியாத, திருவுருக்காட்டி - திருவுருவைக்காண்பித்து, நல் அருள்சுரந்து வாழ்வித்தான் - நல்ல அருள்பெருகி என்னைவாழ்வித் தருளினான், காரணம் ஏது என்று அறிகிலேன் - (இப்படி அவன் செய்தற்குக்) காரணம் யாதென்று உணர்கிலேன். எ-று.

கருவைப்புண்ணியன, என்கல்லொத்தமனத்தையுங்கரைத்து, திருமாலுமறியாத தன் திருவுருவை உமாதேவியோடு எனக்குக் காட்சிதந்தருளி, அருள்சுரந்து என்னைவாழ்வித்தான், இதற்குக்காரணம் யாதோ அறிகிலேன என்பது கருத்து. இறை தொழிலாகுபெயர். இற பகுதி, ஐ தொழிற்பெயர் விகுதி, பகுதியீற்று அகரக்கேடு கடைக்குறை. ஐ வினைமுதற்பொருள் விகுதி யெனினும் ஒக்கும். இதன்பொருள் மூலப்பகுதியையும் அதன்காரியமாகிய உலகையும் கடந்து நிறபவன என்பது. கடவுள் என்னுஞ்சொல்லுக்கும் இதுவேபொருள். கலதலம்-கைத்தலம் எனபதுபோலவந்த ஒற்றுமைப் பொருளதாகிய ஆறும்வேற்றுமைத் தொகை. அனறிப் பணபுத் தொகையெனினுமாம. மழ உரிசசொல் சிவபெருமான் ஆரோகணித்தருளும விடைக்கு நந்திதேவர் என்றுபெயர். இவர் தருமதேவதையின் மூர்த்தமென்பர். அறிகிலேன் எதிர்மறைத் தன்மையொருமைவினைமுற்று. அறி பகுதி, கில் ஆற்றலுணர்தலும் விகுதி, ஏன் தன்மை யொருமை வினைமுற்று விகுதி. இதில் எதிர்மறை ஆகாரவிகுதி புணர்ந்துகெட்டது.

(18) விண்ணவர் மகுட கோடிவீழ்ந் திறைஞ்சும் விரைமலர்ச் சேவடி மிசையே, உண்ணிறை காத லன்புற்ன றுருக வுலையிடு மெழுகென வுருக்கிக், கண்ணினீர் வாரக் கருவையம் பரனே கடவுளே யென்றெடுத் தேத்தப், புண்ணியம புரிந்தேனிப்பெரும்பேறு பூதலத் தெவர்பெறு வாரோ.

(இ-ள்.) விண்ணவர்-தேவர்கள், மகுடகோடி - மகுடகோடிகளுடன், வீழ்ந்து இறைஞ்சும் - வீழ்ந்துவணங்குகின்ற, விரைமலர் - மணமுள்ள தாமரைமலர்போன்ற, சேவடிமிசையே - திருவடியினமீதே, உள்நிறைகாதல் அன்புற்னறு உருக - மனத்தினகண் நிறைந்த ஆசையும் அன்பும் நிலைதது உருகும்படி, உலை இடும் மெழுகு என உருக்கி - உலைக்களத்திலிட்ட நெருப்புப்போல வுருகப் பண்ணி, கண்ணில்நீர்வார - கண்களில்நீரொழுக, கருவை அம்பரனே - திருக்கருவையிலெழுந்தருளிய அழகியபரனே, கடவுளே - தெய்வமே, என்று எடுத்து ஏதத-என்று உயர்த்தித்துதிக்க, புண்ணியம் புரிகதேன் - புண்ணியத்தைச்செய்தேன், இப்பெரும்பேறு-இத்தப்பெரும்பேற்றினை, பூதலத்து - உலகத்தில், எவர்பெறுவார் - யாவர் அடைவார்கள். எ-று.

தேவர்கள் வணங்குதற்குரிய திருக்கருவை இறைவனது திருவடிக்கன்புசெய்துருகி வாழ்ததுதற்கு நானென்ன புண்ணியம்செய்தேன், இப்படிப்பட்டபெரும்பயனை, உலகததில்யார் பெறுவார் என்

பது கருத்து. பெயர்ச்சொல் ஏகாரத்தின் முன் வகரமும், இடைச்சொல் ஏகாரத்தின்முன் யகரமும்உடம்படுமெய்யாகத் தோன்றுவதாயினும் செம்மையின் விகாரமொழியாகிய சே என்பதன்முன் உயிர்வரின் சேவடி, சேயிருவிசும்பு என யகர வகரங்களிரண்டும் தோன்றும்; வார காரணகாரிய முணர்த்தாமையின் நிகழ்காலச் செயவெனெச்சம். அம்பரன் என்பதை ஒரு மொழியாகக்கொண்டு ஆகாயத்தின் வடிவானவனே எனினும் ஆம். பேறு முதனிலை திரிந்த தொழிலாகுபெயர். பூதலம் எனபதற்கிலக்கணம் மேற்செய்யுளில் கற்றலம் என்பதற்கு உரைத்தாங்குரைத்துக்கொள்க.

(19) பெறுவது நினது திருவடிக்கமலம் பேசுவதுன்றிருநாமம், உறுவது நினது திருவுரு வெளியா முணர்வதுன் னருளலா துண்டோ,
மறுவறு சிறப்பின் மாசிலா மணியே வரதனே சிவ பெருமானே,
குறுமுனி பரவக் களாநிழ லமர்ந்த கொடிமதிற் கருவையா திபனே.

(இ-ள்.) மறு அறு சிறப்பின் - குற்றமற்ற சிறப்பையுடைய, மாசிலாமணியே - தோஷரஹிதமான ரத்நமே, வரதனே - அழகனே, சிவபெருமானே - சிவபிரானே, குறுமுனிபரவ - அகத்திய முனி வழிபட, களாநிழல் அமர்ந்த-திருக்களாநிழலி லெழுந்தருளிய, கொடி - கொடிகள்கட்டின, மதில் - மதில்சூழ்ந்த, கருவை ஆதிபனே - திருக்கருவையிறைவனே, பெறுவது - யான்பெறற்குரியது, நினதுதிருவடிக்கமலம்-உன் திருவடித்தாமரையே, பேசுவது- யான் பேசுதற்குரியது, உன்திருநாமம்-உன்திருநாமமே, உறுவது - யான் சேவித்தற்குரியது, நினதுதிரு உருவெளி ஆம் - உன் திருவுருவின் வெளிப்பாடேயாகும், உணர்வது-யான் அறிதற்குரியது, உன் அருள் அல்லாது உண்டோ - உன்னருளேயன்றி வேறு பொருளுண்டோ.

திருக்கருவைக்கதிபனே, நான் பெறுதற்குரியது உன்திருவடித்தாமரையே, நான் பேசுதற்குரியது உன் திருநாமமே, நான் சேவித்தற்குரியது உன் திருவுருவெளியே, நான் அறிதற்குரியது உன்னருளே என்பது கருத்து. பெறுவது, பேசுவது, உறுவது, உணர்வது என்பன ஒன்றன் படர்க்கை எதிர்காலவினையாலணையும் பெயர்கள். மறு அறு, மாசு இலா இவ்விரண்டும் எழுவாய்த் தொகாநிலைத்தொடர்கள்.

(20) ஆதவன் மதிபா ரனல் வெளி புனல்கா லருமறை யெச்சனென் றெட்டுப், பேதமா முருவா யருவமாய் நிறைந்த பெற்றியா லுற்றுநா னுன்னை, ஏதிலு லுணர்வே னுணருமா றருளா யிளநிலாப் பசுங்கொழுந் தணிந்த, சோதியே கருவை யொப்பனை களபத் துணைமுலை தழுவுகா தலனே.

(இ-ள்.) இளநிலா பசுங்கொழுந்து அணிந்தசோதியே - இளமையாகிய பசுமையுள்ள பிறைக்கொழுந்தைத்தரித்த ஒளியே, கருவை - திருக்கருவையிலுள்ள, ஒப்பனை - ஒப்பனையம்மையின், களபம் - கலவைச்சாந்து பூசப்பெற்ற, துணைமுலை - இருதனங்களையும், தழுவு - தழுவிய, காதலனே - நாயகனே, ஆதவன் - சூரியன், மதி - சந்திரன், பார்-பூமி, அனல் - நெருப்பு, வெளி - ஆகாயம், புனல் - நீர், கால் - காற்று, அருமறை எச்சன் - அருமையாகிய ரஹஸ்யமென்கிற ஆன்மா, என்ற - என்றுசொல்லப்பட்ட, எட்டுப்பேதம் ஆம் உரு ஆய்-எண்வகை வேறுபாடாகிய உருவங்களாகி, அருவம் ஆய்-அருவமாகி, நிறைந்தபெற்றியால் - நிறைந்த தன்மையால், நான் - அடியேன், உன்னை உற்று - உன்னைப்பொருந்தி, எதிறல் உணர்வேன் - யாதினால் உணரக்கடவேன், உணரும் ஆறு அருளாய் - அறியும்வழியை அருள்செய்யாய், எ-று.

கருவைநாயகனே, சூரியன் முதலாக எல்லா வுருவங்களுமாகி, அருவமாயும் நீ நிறைந்திருக்கும் தன்மையால், நான் எப்படியறிந்துய்வேன் என்பதுகருத்து. சிவபெருமான் ஆதவன்முதலிய எண்வகைப்பேத உருவினன் ஆகையால் அஷ்டமூர்த்தி எனப்படுவன். ஒப்பனை-அலங்காரம், இது பார்வதிக்குப் பண்பாகுபெயர். பருமையின் விகாரமொழியாகிய பார் என்பதும் பண்பாகுபெயர்.

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

(21) காதலுற்றிட மனநிலைபெற்றிடக் கனிந்திடக்களி கூரப்
போதமுற்றிட யானெனதென் றிடும்புலைச் செருக்கறமாற
நாதன்முத்தமிழ்க் கருவையம்பரனென நாத்தழும்புற வோதி
ஓதிமற்றுநான் பெற்றதையிற்றென வுரைத்திட முடியாதே.

(இ-ள்.) காதல் உற்றிட - ஆசை அதிகரிக்கவும், மனம் நிலை பெற்றிட - மனம் நிலைபெறவும், கனிந்திட - நெகிழவும், களிகூர - களிப்புமிகவும், போதம் உற்றிட-ஞானம்பொருந்தவும், யான் எனது என்றிடும்-யான் எனது என்கிற, புலைசெருக்கு-நீசமாகியசெருக்கு, அறமாற - முழுதும் நீங்கவும், நாதன் - இறைவன், முத்தமிழ் - முத்தமிழும் வழங்குகின்ற, கருவையம்பரன் என - திருக்கருவைப் பரனேயென்று, நாதழும்பு உற ஓதி ஓதி - நாவினிடத்துத்தழும் புண்டாம்படி யோதி யோதி, நான்பெற்றதை - நானடைந்தபேற்றை, இற்று என உரைத்திட முடியாது - இத்தன்மைத்தென்று சொல்லமுடியாது. எ-று.

ஆசை யதிகரித்தல் முதலியவற்றைப்பெற்றுக் கருவைப்பரனே என்று துதித்துத் துதித்து நான் பெற்ற பேற்றை இத்தன்

மைத்தென்று சொல்லமுடியாது என்பது கருத்து. யான் என்கிற அகங்காரமும் எனது என்கிற மமகாரமும் பிறவிக்கேதுவாகலின் யானெனதென்னும புலைச்செருக்கு என்றார். "யானெனதென்னும செருக்கறுப்பான் வானோர்க் - குயர்ந்தவுலகம் புகும்" என்றார் திருவள்ளுவரும். முத்தமிழ்-இயல், இசை, நாடகம். இற்று இன் என்னும் இடைச்சொ லடியாகப்பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு வினைமுற்று. விகுதி று. இதன் பன்மை இன்ன.

(22) முடிகடந்ததுககன கோளகைநெடு முகட்டினுக் கப்பாலும்
அடிகடந்தது பாதள மேழினுக்கப்புறத் தனலோடும்
தொடிகடந்த கைகடந்தன திகந்த மாறொல்புகழ்க்க ளாவீசன்
பொடிகடந்த பான்மேனியன் றிருநடமபுகலுதற் கெளிதாமோ.

(இ-ள்.) ககனகோளகை - அண்டகோளகையின், நெடுமுகட்டினுக்கு அப்பாலும் - நெடியமுகட்டுக்கப்புறத்தும், முடிகடந்தது - திருமுடிதாண்டிச் சென்றது, பாதலம் ஏழினுக்கு அப்புறத்து-பாதாளலோகம் ஏழுக்கப்புறத்தும், அடிகடந்தது - திருவடிதாண்டிச்சென்றது, அனலோடு தொடிகள் தந்த கை-மழுவோடும் உடுக்கையைத் தாங்கியகைகள், திகந்தம் - திசைகளின்முடிவை, கடந்தன - தாண்டிச்சென்றன, ஆல் - ஆதலால், தொல்புகழ் - பழைய புகழைபுடைய, களா ஈசன் - திருக்களவீசன், பொடிகள்தந்தபால் மேனியன்-வெண்பொடிபூசப்பட்டதனால் வெள்ளியதிருமேனியையுடையவன், (அவனது) திருநடம் - திருநடனத்தின் ஏற்றத்தை, புகலுதற்கு - யான் சொல்லுதற்கு, எளிது ஆமோ - எளிதாகுமோ. எ-று.

களவீசனது திருமுடி அண்டமுகட்டையும், அடிபாதாளமேழையும், கைகள் திசைகளையுங் கடந்தனவென்றால், அவனது திருநடனத்தின் பெருமை சொல்லுதற் கெளிதாகுமோ என்பது கருத்து. இவ்வாறு திருநடஞ்செய்தல் சர்வசங்காரகாலத்தில். பாதாளலோகம் ஏழாவன:—அதலம், விதலம், சுதலம், தராதலம், ரசாதலம், மகாதலம், பாதாளம் என்பன. திகந்தம் என்பதை திக்கு அந்தம் எனப்பிரிக்க. திக்=திசை. ஆல் ஆதலால்என்பதன் மரூஉ; அன்றி அசையெனினுமாம். எளிது எளிமை என்னும் பண்படியாகப் பிறந்த ஒன்றன்படர்க்கைக் குறிப்பு வினைமுற்று.

(23) எளியன் புன்றொழிற் பாதகன் மாதரா ரிளமுலை வளம்வேட்ட, களியன் றீக்குண வஞ்சக னெஞ்சனுங் கருநகலைக் கனாவித்து, வெளியில் வந்துநின் பொன்னடி சென்னியின் மிலைக்தெனை யாட்கொண்ட, அளிகனிந்தநின் னருட்குண முரைப்பதா ரருங்களா வமர்ந்தோனே.

(இ-ள்.) அருகளா அமர்ந்தோனே-அருமையாகிய திருக்களா நிழலில் அமர்ந்தவனே, எளியன் - எளியவன், புல்தொழில்பாதகன் - இழிதொழிலையுடையபாதகன், மாதரார் - மாதருடைய, இளமுலைவளம் வேட்டகளியன் - இளமுலைகளின் வளப்பத்தை விரும்பிய களிப்புடையேனது, தீக்குணம் - கொடிய குணமமைந்த, வஞ்சகநெஞ்சு என்னும் - வஞ்சமனமென்கிற, கருங்கல்லை - கரிய கல்லை, கரைவித்து - உருகப்பண்ணி, வெளியில்வந்து - வெளிப்பட்டுவந்து, நின்பொன் அடி - உன்பொன்னடியை, சென்னியில் மிலைந்து - சிரத்திற்சூடி, என்னை ஆட்கொண்ட - என்னை யடிமைகொண்ட, அளிகனிந்த - கருணைமுதிர்ந்த, நின்அருட்குணம் - உன் அருட்குணத்தை, உரைப்பது - சொல்லுவது, ஆர்-யாவர், எ-று.

களாநிழலமர்ந்தவனே, என் வஞ்சமனமாகிய கருங்கல்லைக் கரைத்து, நீ வெளிவந்து, உன்திருவடியை என்சிரமீது சூட்டி என்னையாட்கொண்டருளின உன்னருட்குணத்தைப் புகழவல்லார் யாவர் என்பது கருத்து. மாதரார் பண்படியாகப்பிறந்த பெயர். மாதர் - அழகு. இவ்வாறன்றிச் சுரும்பர், வண்டர் என்பனபோல போலிபெற்றமாதர் என்னும் பெண்பாற் படர்க்கைக்குற்றியலுகர மொழிபன்மை விகுதிபெற்று மாதரார் என வந்தது எனினுமாம். வேட்ட இறந்தகாலப்பெயரெச்சம். வேள் பகுதி, ட் இறந்தகால இடைநிலை, ளகரம் டகரமானது சந்தி, அ பெயரெச்சவிகுதி.

(24) அமரர்மாதவர் முனிவரர் திரண்டுநின் றனுதினந்தொழு தேத்
தமராநூபுரப் பொற்சரணைத்திடத் தமியனுக்கருள் செய்தான் [தும்
குமரனாலடுஞ் சூர்ப்பகைதடிந்தவன் கொள்ளைவண்டின மார்க்கும்
கமலவாவியும் பொங்கருஞ்சூழ் திருக்கருவையெம் பெருமானே.

(இ-ள்.) குமரனால் - முருகனைக்கொண்டு, அடும் - கொல்லுதற்குரிய, சூர்ப்பகை - சூரனாகியபகைவனை, தடிந்தவன் - கொன்றவன், கொள்ளை - மிகுதியாகிய, வண்டு இனம் ஆர்க்கும் - வண்டின் கூட்டம் முழங்குகின்ற, கமலவாவியும் - தாமரைத்தடாகங்களும், பொங்கரும் - சோலைகளும், சூழ் - வளைந்த, திருக்கருவை எம்பெருமான் - திருக்கருவையி லெழுந்தருளிய எம்பெருமான், அமரர் - தேவரும், மாதவர் - மாதவரும், முனிவரர் - முனிசிரேட்டரும், திரண்டுநின்று-கூடிநின்று, அனுதினம் - நாள்தோறும், தொழுது ஏத்தும் - வணங்கித்துதிக்கின்ற, தமரம் - ஒலியையுடைய, நூபுரம் - சிலம்பணிந்த, பொன்சரண் ஏத்திட - பொன்போலுந் திருவடியைத் துதிக்கும்வண்ணம், தமியனுக்கு அருள்செய்தான் - தமியேனுக்கு அருள்புரிந்தான், எ-று.

கருவையெம்பெருமான், தேவர்முதலியோர் திரண்டுநின்றுவணங்கித் துதிக்கின்ற தன் திருவடியை அடியேன் துதிக்கும்வண்ணம் எனக்கருள்செய்தான் என்பதுகருத்து. சூர்ப்பகை இருபெயரொட்டுப் பண்புத்தொகை. தடிந்தவன் என்னும் இறந்தகால ஆண்பாற் படர்க்கை வினையாலணையும் பெயரில் பகுதி - தடி. அமரர் - மரணமில்லாதவர்; இது மங்கலவழக்கு. முனி - கடவுளை மனனஞ் செய்பவன். வரர் வரம் என்னும் பண்படியாகப்பிறந்த பலர்பாற் படர்க்கைப்பெயர்.

(25) கருவை யம்பர னம்பர மேனியன் கடவுளர் காணுத
உருவை யம்பிகை பெறப்பகுத் தளித்தவ ¦னொன்னலர் புரநீற்றப்
பெருவை யம்பெனக் கண்ணனை யுடையனென் பிழைபொறுத்தழியாத
திருவை யம்புவிச் சிறப்பொடு மளித்தவன் றிருக்களாவுடையோனே.

(இ-ள்.) கருவை அம்பரன் - திருக்கருவையிலெழுந்தருளிய அழகிய பரன், அம்பரம் மேனியன்-ஆகாயத்தையே திருமேனியாகவுடையவன், கடவுளர் காணுத - தேவர்கள் காணவொண்ணுத, உருவை - தன்திருவுருவத்தை, அம்பிகைபெற - உமாதேவிபெறும்படி, பகுத்து அளித்தவன் - பகிர்ந்துகொடுத்தவன், ஒன்னலர் புரம்நீற்ற- பகைவரது முப்புரத்தை நீறுசெய்ய, பெரு-பெரிதாகிய, வை - கூர்மைபொருந்திய, அம்பு என-பாணமாக, கண்ணனை உடையன்-திருமாலையுடையவன், என் பிழைபொறுத்து - என்குற்றத்தைப் பொறுத்தருளி, அழியாதிருவை-என்றும் அழியாத செல்வத்தை, அம்புவிச்சிறப்பொடும் - நிலவுலகச்சிறப்புடன், அளித்தவன்-கொடுத்தருளினவன், திருக்களாவுடையோனே-திருக்களாநிழலையுடையவனே.

அழியாச்செல்வம் என்றது மோக்ஷத்தை. என்பிழைகளைப் பொறுத்து அழியாத செல்வத்தையும் இவ்வுலகச்சிறப்பையுங் கொடுத்தருளினவன் திருக்களா நாயகனே என்பது கருத்து. ஒன்னலர் ஒன்றலர் என்பதின் மரூஉ. இது எதிர்மறைப்படர்க்கைப் பலர்பால் வினையாலணையும்பெயர். ஒன்று பகுதி, அல் எதிர்மறை விகுதி.

உகரக்கேடு சந்தி, அர் பலர்பால் விகுதி. பகைவர் மனத்தோடுபொருந்துதல் இல்லாதவர் என்பது பொருள். நீற்ற காரியப்பொருட்டாகிய எதிர்காலப் பிறவினைச் செயவெனெச்சம். தன் வினையில் நீற எனவரும். தன்வினைப்பகுதி நீறு, பிறவினைப்பகுதி நீற்று. திரிபுரமழிக்கத் திருமாலை அம்பாகக்கொண்டசெய்தி:—இரும்பு வெள்ளி பொன் இவற்றாலாகிய திரிபுரத்தில் வாழ்பவருடைய கொடுமைக்கஞ்சி முறையிட்ட தேவர்களது முறைப்பாட்டுக்கிரங்கி, சிவபெருமான் சந்திரசூரியர்கள் சக்கரங்களாகவும் வேதங்கள் குதிரை

களாகவும் பிரமன் சாரதியாகவும் அமைந்த பூமியாகிய ரதத்தின் மேல் ஆரோகணித்து மேருவை வில்லாகவளைத்துக்கொண்டு அதற்கு ஆதிசேடனாகிய நாரியை யமைத்து வாயுவைச் சிறகாகவும் அக்கினியை அம்பாகவும் திருமாலை அவ்வம்பின் கூர்வாயாகவும் கொண்டனர் என்பது.

(26) உடைய மென்றுதம் மக்களை மனைவியை யொக்கலைப் பெருவாழ்வை, அடைய நல்குசீர்ச் செழும்பொருண் முதலிய வனைத்தையு நினைப்பாரோ, விடையின் மேல்வரு திருக்களா நாயகன் விரைமலர்ச் செழுங் கொன்றைத், தொடையல் வேணியா னடியவர்க் கன்பொடு தொண்டுசெய் மனத்தாரே.

(இ - ள்.) விடையின்மேல்வரு - இடபத்தின்மீதேறிவருகிற, திருக்களாநாயகன் - திருக்களவீசன், விரை - மணந்தங்கிய, செழுங்கொன்றைமலர் தொடையல்-செழுமையாகிய கொன்றைமலர்மாலையையணிந்த, வேணியான்-சடையையுடையவன், (அவனது) அடியவர்க்கு - அடியவர்க்கு, அன்பொடு - நேயத்தோடு, தொண்டுசெய் மனத்தார்-அடிமைசெய்யும் மனத்தையுடையவர், உடையம் என்று-யாம் உடையேம் என்று, தம்மக்களை - தம்மக்களையும், மனைவியை-மனையாட்டியையும், ஒக்கலை - சுற்றத்தாரையும், பெருவாழ்வை-பெருவாழ்க்கையையும், அடையநல்கு - எல்லாவற்றையும் கொடுத்தற்குரிய, சீர்-மேன்மையமைந்த, செழும்பொருள் முதலிய அனைத்தையும்-செழுமையாகிய பொருள் முதலிய எல்லாவற்றையும், நினைப்பாரோ - நினைப்பார்களோ, எ-று.

திருக்களாநாயகனது அடியார்க்குத் தொண்டுசெய்யவேண்டுமென்னும் விருப்பமுடையவர், தம்மனைவி மக்கள் முதலியவற்றை ஒருபொருளாக மதிப்பரோ மதியார் என்பது கருத்து. தொடையல் தொழிலாகுபெயர். தொடு பகுதி, ஐ தொழிற் பெயர் விகுதி, அல் விகுதி மேல்விகுதி, உகரக்கேடு சந்தி. வேணியான் சினையடியாகப்பிறந்த ஆண்பாற் படர்க்கைப்பெயர். உடையம் உடைமை என்னும் பண்படியாகப்பிறந்த தன்மைப்பன்மைக் குறிப்பு வினைமுற்று. ஒக்கல் தொழிலாகுபெயர். ஒ பகுதி, க் சந்தி, கு சாரியை, உகரக்கேடு சந்தி, அல் தொழிற்பெயர் விகுதி. மக்கள் பன்மைக்கேயுரிய உயர்திணையிருபாலுக்கும் பொதுவான படர்க்கைப்பெயர்.

(27) மனத்தை யான்றினம் வணங்குவன் மின்னென வைகலுநிலையற்ற, தனத்தை வாழ்வினை நிலையென மதித்துழ லாசையிற் றளராமே, புனத்து ழாய்முகில் போற்றிடுங் கருவைவாழ் புண்ணியன் பாலற்காச், சினத்த காலனை யுதைத்தவன் பங்கயச் சேவடி வுணங்கென்றே,

(இ - ள்.) மின்என - மின்னலைப்போல, வைகலும் - தினந்தோறும், நிலைபற்ற - நிலையில்லாத, தனத்தை-பொருளையும், வாழ்வினை - வாழ்க்கையையும், நிலை என மதித்து உழல் - நிலையென்று மதித்து உழல்கின்ற, ஆசையில் தளராமே - ஆசையிற்சிக்கித் தளர்வடையாமல், புனம் - புனத்திலுள்ள, துழாய் - துளசிமாலையைத் தரித்த, முகில்-மேகவண்ணனாகிய திருமால், போற்றிடும்-வணங்குகின்ற, கருவைவாழ்புண்ணியன் - திருக்கருவையில் வாழ்கின்றபுண்ணியன், பாலற்கு ஆ - பாலகனுக்காக, சினத்தகாலனை-கோவித்து வந்த யமனை, உதைத்தவன் - உதைத்தவன், (அவனது) பங்கயம்-தாமரைமலர்போன்ற,சேவடிவணங்கு என்று-திருவடியைவணங்குவாயென்று, மனத்தை - என்னெஞ்சை, யான் தினம் வணங்குவன்-நான்தினந்தோறும் வணங்குவேன், எ-று.

நிலையற்றசெல்வ முதலியவற்றை நிலையென்று மதித்துழன்று தளராமல், கருவாபுரிப்புண்ணியனது திருவடியை வணங்கக் கடவாயென்று என்மனத்தை நாடோறும் யான் வணங்காநின்றேன் என்பதுகருத்து. தளராமே எதிர்மறை வினையெச்சம். சினத்த சினம் என்னும் பண்படியாகப்பிறந்த குறிப்புப்பெயரொச்சம். காலனை உதைத்தசெய்தி:—மிருகண்டமுனிவர் புத்திரனில்லாமையால் சிவபெருமானைநோக்கித் தவஞ்செய்ய, அப்பிரான் பிரசன்னமாகி, உனக்கு ஒரு புத்திரன் உண்டாவான் அவன் பதினறுவயது மட்டும் உயிர்பிழைத்திருப்பான் என்று வரம் தந்துபோதலும், அப்படியே பிறந்து சிவநேசம்முதிர்ந்து சிவார்ச்சனைசெய்து கொண்டிருந்த அம்மார்க்கண்டேயர்மேல் நமன் பாசம்வீசுதலும் சிவபிரானுக்குக் கோபம் பிறந்து நமனை யுதைத்துத்தள்ளினர் என்பது. இதுகாரணத்தால் சிவபிரானுக்குக் காலகாலன் என்றுபெயர் வழங்கும். பங்கஜம் - சேற்றில்முளைப்பது.

(28) வணங்கெனத்தலை யளித்தனை யென்புகழ் வாழ்த்தென நாத்தந்தாய், இணங்கெனத்திருக் கூட்டமுங் காட்டினை யினிப்பெறும் பேறுண்டோ, துணங்கை யிட்டுவெம் பேய்க்கணங்குதித்திடச் சுடலையா டரங்காகக், கணங்கள் போற்றநின்றுடிய குழகனே கருவையம் பெருமானே.

(இ - ள்.) வெம் - கொடிய, பேய்கணம் - பேய்க்கூட்டம், துணங்கையிட்டு - துணங்கைக்கூத்தாடி, குதித்திட - குதியாநிற்க, சுடலை - மயானத்தையே, ஆடரங்குஆக - ஆடரங்காகக்கொண்டு, கணங்கள்போற்ற - சிவகணங்கள் வணங்க, நின்றுஆடியகுழகனே-நின்றுடிய அழகனே, கருவையம்பெருமானே - திருக்கருவைப்

பெருமானே, வணங்கு என - என்னை வணங்காயென்று, தலை அளித்தனை-எனக்குத்தலையைக்கொடுத்தாய், என்புகழ்வாழ்த்துஎன-என்புகழைவாழ்த்தக்கடவையென்று, நாதந்தாய் - எனக்கு நாவைக் கொடுத்தாய், இணங்குஎன-இணங்கக்கடவையென்று, திருக்கூட்டமும் காட்டினை - திருக்கூட்டத்தையும் காட்டினை, இனி - இனி, பெறும் - யான் பெறுதற்குரிய, பேறு உண்டோ - பேறுஉளதோ.

கருவைப்பெருமானே, உன்னைவணங்குதற்குத் தலையைத்தந்தனை, உன்புகழைவாழ்த்த நாவைத்தந்தனை, நான் இணங்குதற்கு உன்னடியார் திருக்கூட்டத்தைத் தந்தனை, இதனினும் எனக்குப்பெறுதற்குரிய வேறுபேறு யாது என்பது கருத்து. பேய்க்கணம் ஒன்றன் கூட்டத்தற்கிழமைப் பொருளதாகிய ஆறும் வேற்றுமைத்தொகை. துணங்கைக்கூத்து- இருகையையும் முடக்கி பழுப்புடையொற்றியாடும் ஓர்கூத்து. ஆடு அரங்கு வினைத்தொகை நிலைத்தொடர். இறைவனை வணங்கித்துதித்து அடியாரோடு கூடிக் களித்தலையே தேகமெடுத்தற்குப் பயனென்று கொண்டவராதலால் "வணங்கெனத் தலையளித்தனை" முதலியவாகக்கூறினர். "கோளில் பொறியிற்குண மிலவே யெண்குணத்தான்-தாளை வணங்காத்தலை" என்றார் திருவள்ளுவரும்.

(29) பெருமை சான்றநின் றிருவெழுத் தைந்துமே பெரும்புணையெனப்பற்றி, அருமை சான்றவிப் பவக்கடல் கடக்குமா றாசையிற் றுணிகின்றேன், இருமை யின்பமு மடியவர்க் கூட்டிடு மிறைவனே யெம்மானே, தரும மூர்த்தியே யொப்பனை வனமுலை தழுவுதிண் புயத்தானே.

(இ-ள்.) இருமை இன்பமும் - இருமையின்பங்களையும், அடியவர்க்கு ஊட்டிடும் - அடியார்க்கு உண்பிக்கிற, இறைவனே - தலைவனே, எம்மானே-எம்பெருமானே, தருமமூர்த்தியே - தருமசொரூபனே, ஒப்பனை வனமுலைதழுவு - ஒப்பனையம்மையின் அழகாகிய தனங்களைத் தழுவுகின்ற, திண்புயத்தானே - வலிமையுள்ள தோள்களையுடையவனே, பெருமைசான்ற - பெருமைநிறைந்த, நின்திருவெழுத்து ஐந்துமே - உன் திருப்பஞ்சாக்கரத்தையே, பெரும்புணை எனப்பற்றி-பெரியமரக்கலமாகப்பற்றி, அருமைசான்ற - (யாவரும் கடத்தற்கு) அருமைமிகுந்த, இப்பவக்கடல் கடக்கும் ஆறு - இந்தப் பிறவிக்கடலைக் கடக்கும் வண்ணம், ஆசையின் துணிகின்றேன்- ஆசையால் துணியாநின்றேன். எ-று.

ஒப்பனை கொழுநனே ; உன் திருவெழுத்தைந்தையும் பெரும் புணையாகப்பற்றி இப்பவக்கடலைக்கடக்கத் துணியாநின்றேன் என்

பது கருத்து "அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின்றேனை" என்றார் திருவாதவூரடிகளும். சான்ற சால் என்னும் உரிச்சொலடி யாகப்பிறந்த இறந்தகாலப் பெயரொச்சம்.

(30) தானை யெண்டிசை முக்கணு முச்சுடர் தழைசடை கதிர்க்கற் றை, மேனி வெங்கன லாடிட முலகெலாம் வெந்தொழி புறங்காடு; சேனைவெங் கொலைப் பேய்க்கண மென்னினத் திருக்களா வமர்ந் தோனை, வான நாடரும் பூதலத் தடியரும் வணங்குவ தெவ்வாறே.

(இ-ள்.) தானை - ஆடையாவது, எண்திசை-எட்டுத்திசையே, முக்கண்ணும் - மூன்றுகண்களும், முச்சுடர்-முச்சுடர்களே, தழை சடை - செழித்தசடையாவது, கதிர்க்கற்றை-மின்னற்றொகுதியே, மேனி - திருமேனியாவது, வெம்கனல் - கொடுமையாகிய நெருப் பே, ஆடிடம்-ஆடிடமாவது, உலகு எல்லாம் வெந்து ஒழி புறங் காடு - உலகமுழுதும் வெந்தழிகின்ற மயானமே, சேனை - படையா வது, வெம்கொலை பேய்க்கணம் - கொடிய கொலைத்தொழிலை யுடைய பேய்க்கூட்டமே, என்னின்-என்றால், அ-அந்த, திருக்களா அமர்ந்தோனை-திருக்களா நிழலில் அமர்ந்த சிவபெருமானை, வான நாடரும் - விண்ணுலகத்தாரும், பூதலத்து அடியரும் - பூமியிலுள்ள அடியார்களும், வணங்குவது எவ்வாறு - (வந்து) தொழுவது எவ் வண்ணம். எ-று.

எண்டிசை முதலியவற்றை ஆடைமுதலியவாகக் கொண்டிருத் தலால் அந்தத் திருக்களாவமர்ந்தோனது திருவுருவத்தை அளவு செய்து வணங்குதல் எவர்க்கும் அரிது என்பது கருத்து. தழை சடை, ஆடிடம் வினைத்தொகை நிலைத்தொடர்கள். கதிர்க்கற்றை, பேய்க்கணம் ஒன்றன் கூட்டத்தற் கிழமைப்பொருளதாகிய ஆறும் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்கள். கதிர் என்பது இவ்விடத்து மின்னலை யுணர்த்தி நின்றது. "பொலிந்திலங்கும் மின்வண்ண மெவ்வண்ண மவ்வண்ணம் வீழ்சடை" என்றார் சேரமான் பெருமா ளுயனாரும்.

கலிவிருத்தம்.

(31) எவ்வ முற்ற திரிமல மிற்றது
செவ்வி ஞானத் திருக்கண் டிறந்தது
கொவ்வை வாயுமை கொண்கன் கருவையான்
பவ்வ நஞ்சமுண் டான்கழல் பாடவே.

(இ - ள்.) கொவ்வைவாய் உமை - கோவைக்கனிபோன்ற அதரத்தையுடைய உமாதேவிக்கு, கொண்கன் - நாயகன், கருவை யான - திருக்கருவைப்பதியையுடையவன், பவ்வம் நஞ்சம் உண்

டான் - பாற்கடலிற்றோன்றிய நஞ்சைப்பருகினவன், (அவனது) கழல்பாடவே - திருவடியைப் புகழ்ந்துபாடினமாத்திரத்தில், எவ்வம் உற்ற - துன்பத்துக்கேதுவாயிருக்கிற, திரிமலம் இற்றது-மும்மலம் அற்றொழிந்தது, செவ்வி ஞானத் திருக்கண் திறந்தது-அழகாகிய ஞானமென்கிற திருக்கண் திறந்தது. எ-று.

மும்மலங்களாவன - ஆணவம், மாயை, காமியம் என்பன. மும்மலம் அறுத அளவும் ஞானம் உதயமாகாதென்பது தோன்ற, "திரிமலமிற்றது செவ்விஞானத் திருக்கண்டிறந்தது" என்றார். கருவைப்பிரான் திருவடியைப் புகழ்ந்தளவில் என்மும்மலத்தொடர்ச்சியற்று, ஞானக்கண் திறந்தது என்பது கருத்து. கொவ்வை முதலாகுபெயர். கலா - கலை, சீதா - சீதை என்பனபோல உமா என்னும் வடமொழி உமை எனத்திரிந்தது. நஞ்சம் என்பதில் அம்சாரியை. திரிமலம் இற்றது பால் வழுவமைதி. சூத்திரம்-நன்-பொது-29. செவ்வி பண்புப்பெயர்.

(32) பாடினேன் புகழ் பங்கயச் சேவடி
சூடி னேன்கரு வாபுரிச் சோதியை
நாடி னேனவ னானெனும் வேறறக்
கூடி னேனடி யார்திருக் கூட்டமே.

(இ-ள்.) புகழ்பாடினேன்-(அவனது) கீர்த்தியைப் புகழ்ந்து பாடினேன், பங்கயம்சேவடி - தாமரைமலர்போலும் திருவடியை, சூடினேன் - சிரசில் அணிந்துகொண்டேன், கருவாபுரிசோதியை-திருக்கருவாபுரியில் எழுந்தருளியிருக்கிற ஒளியை, அவன் நான் என்னும் வேறு அற - அவன் நான் என்னும் வேற்றுமை ஒழிய, நாடினேன் - ஆராய்ந்தேன், அடியார் திருக்கூட்டம் - அடியார்களுடைய திருக்கூட்டத்தை, கூடினேன் - சேர்ந்தேன். எ-று.

கருவாபுரிச் சோதியைப்பாடினேன், அவன் திருவடியைச் சிரத்தணிந்தேன், அவன் நான் என்னும் வேற்றுமையொழிய ஆராய்ந்தேன், அவனது அடியார் திருக்கூட்டத்தைக்கூடினேன் என்பது கருத்து. சேவடி என்பதற்கு 18 - ஆம் செய்யுளுரையில் புணர்ச்சியிலக்கணம் கூறப்பட்டது. பங்கயம்+சேவடி உரு உவமைத்தொகை நிலைத்தொடர். "அவன் நானெனும் வேறற நாடுவோர்" சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் என்னும் சிவபதவி நான்கனுள் மேலாகிய சாயுச்சியபதம் பெறுவர். சாலோகம்-கடவுளுலகத்தில் வாழ்தல். சாமீபம் - கடவுள்சமீபத்தில் வாழ்தல். சாரூபம்-கடவுளுருப் போன்றுவாழ்தல். சாயுச்சியம் - கடவுளோடு ஒன்றி

வாழ்தல். அடியார் திருக்கூட்டம், ஒன்றன் கூட்டத்தற்கிழமைப் பொருளதாகிய ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்.

(33) கூட்ட மிட்ட கருவி குலைந்துடல்
சேட்டை யற்றுள் ளறிவு சிதையுமுன்
நாட்ட மூன்றுடை நாதன் முகலிங்கன்
தாட்டு ணைக்கம லந்தலைக் கொண்மினே.

(இ - ள்.) (உலகத்தோரே) கூட்டம் இட்ட - கூட்டமாகக் கூடிய, கருவிகுலைந்து - கருவிகள் நிலைகெட்டு, உடல்சேட்டை அற்று - உடம்பின் அசைவு ஒழிந்து, உள் அறிவு சிதையுமுன்-உள்ளிடத்தே அறிவு கெடுமுன்னே, நாட்டம் மூன்று உடை - மூன்று கண்களை உடைய, நாதன் - இறைவனாகிய, முகலிங்கன்-முகலிங்கனது, தாள் துணை கமலம் - இரண்டு திருவடித்தாமரைகளை, தலைகொள்மின் - சிரத்தில் ஏற்றுக்கொள்ளுங்கள். எ-று.

உலகத்தாரோ, இந்தச் சரீரம் விழுமுன்னமே, முகலிங்கனது திருவடியிணையைச் சிரத்தில் ஏற்றுக்கொள்ளுங்கள் என்பது கருத்து. கூட்டமிட்ட கருவி குலைதல் என்றது தோல், இரத்தம், இறைச்சி, மேதை, எலும்பு, மச்சை, சுவேதநீர் என்னும் எழுவகைத் தாதுக்களும் வலிகெடுதலை. நாட்டம் கருவிப்பொருள் உணர்த்தும் அம் விகுதிபெற்ற தொழிற்பெயர். இது ஆகுபெயராய்க் கண்ணையுணர்த்தினது. நோக்கம் என்பதும் இது.

(34) தலைக்கொள் வெண்டலை மாலையன் றண்ணிலா
மிலைக்குந் தென்கரு வாபுரி வேதியன்
புலைக்கு ரம்பையு டம்பிற் குடிபுகுந்
தலைக்கு நெஞ்சமொ ழித்தெனை யாள்வனே.

(இ-ள்.) தலைக்கொள் - சிரசிலணிந்த, வெள்தலை மாலையன்-வெண்மையாகிய தலைமாலையையுடையவன், தண் - குளிர்ச்சிபொருந்திய, நிலா - பிறையை, மிலைக்கும் - சூடுகின்ற, தென்கருவாபுரி வேதியன் - தென்கருவாபுரியி லெழுந்தருளியிருக்கிற அந்தணன், (அவன்) புலை-முடைநாற்றமுள்ள, குரம்பை-கூடாகிய, உடம்பில்-(என்) உடலின்கண், குடிபுகுந்து - குடியாயெழுந்தருளி, அலைக்கும்-வருத்துகின்ற, நெஞ்சம் ஒழித்து-மனத்தைநசிப்பித்து, என்னை ஆள்வன் - என்னை ஆண்டருளுவன். எ-று.

கருவாபுரி வேதியன் என்னுடம்பிற் குடிபுகுந்து என்னையாண்டருளுவன் என்பது கருத்து. வேதியன் குடிபுகுந்து, ஒழித்து, ஆள்வன் என வினை முடிக்க. 43-ஆம் செய்யுளில் "பழமையாம்

வாதனையிற் படிந்த மனப்பந்தத்தின் விளைவினாற்றலை மயங்கி வேறுவேறுருவெடுத்து" என்றார். இச்செய்யுளில் அந்த மனப்பந்தத்தை யொழித்தாண்டருள வேண்டுமென்றற்கு "அலைக்கு நெஞ்ச மொழித்தெனையாள்வன்" என்றார்.

(35) என்னை யாள்பவ னென்னுள் ளிருப்பவன்
தன்னை யான்றொழத் தண்ணளி தந்தவன்
பொன்னை யாளும்பு யன்றொழ நின்றவன்
கன்னி பாகன் கருவைக் கிறைவனே.

(இ-ள்.) என்னை ஆள்பவன் - என்னை ஆள்வோனும், என் உள் இருப்பவன் - என்மனத்தின்கண் வீற்றிருப்பவனும், தன்னை யான் தொழ - தன்னை நான் வணங்க, தண் அளிதந்தவன் - தனது தண்ணிய கிருபையைச்செய்தவனும், பொன்னை ஆளும்புயன் தொழ நின்றவன்-திருமகளைத் தழுவுகின்ற புயங்களையுடையவனாகிய திருமால் வணங்கும்படி நின்றவனும், (யாவன் எனின்) கன்னிபாகன்-உமாதேவிபாகனாகிய, கருவைக்கு இறைவனே - திருக்கருவாபுரிக்கு இறைவனாயிருக்குஞ் சிவபெருமானே. எ-று.

என்னையாள்பவனும், என்மனத்தில் வீற்றிருப்பவனும், தன்னை நான் வணங்கும்படி தனது தண்ணிய கிருபையைச்செய்தவனும், திருமகள் கொழுநனாகிய திருமால் தொழநின்றவனும், கருவாபுரிக் கிறைவனாகிய சிவபெருமானேயென்பது கருத்து. என்னுளிருப்பவன் என்பதை "மலர்மிசை யேகினான்" என்னும் திருக்குறளானுமுணர்க. தன்னையான்றொழத் தண்ணளிதந்தவன் என்பதை "அவனருளாலே அவன்றாள்வணங்கி" என்னும் திருவாசகத்தாலுமுணர்க.

(36) இறைவ னெங்கணும் யாவையு மானவன்
பிறைய ணிந்த சடிலன் பெருந்தகை
கறையி லங்கு மிடற்றன் கருவையான்
மறைய நின்றெனை யாண்டதெம் மாயமே.

(இ-ள்.) இறைவன் - தலைவனும், எங்கணும் - எவ்விடத்தும், யாவையும் ஆனவன் - எல்லாப்பொருள்களுமாயிருப்பவனும், பிறை அணிந்த சடிலன் - பிறையைத்தரித்த சடையையுடையவனும், பெருந்தகை - பெருந்தன்மையுடையோனும், கறை இலங்கும் மிடற்றன்-விஷம்பிரகாசிக்கிற கண்டத்தையுடையவனும், கருவையான்-திருக்கருவைப் பதியையுடையவனுமாகிய சிவபெருமான், மறைய நின்று - மறைவாகநின்று, என்னை ஆண்டது - என்னை ஆட்கொண்டது, எம்மாயமே - எவ்வகையாகிய மாயமோ. எ-று.

கருவாபுரிநாயகன் என்னுள்ளத்துள்ளே மறைந்துநின்று என்னையாண்டருளினது என்ன மாயமோ என்பது கருத்து. பெருந்தகை பண்புத் தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை ஆண்பாற் படர்க்கைக் காரணப்பெயர்.

(37) மாய வல்லிரு ணீங்க மனத்திடைத்
தூய ஞானச் சுடர்விளக் கேற்றிய
நாய கன்கள வீச னரைமயிர்ப்
பாயு மால்விடை யான்பர மேட்டியே.

(இ-ள்.) மாயம் - மாயமாகிய, வல் இருள்நீங்க-வலிய இருள் நீங்கும்படி, மனத்திடை - என்மனத்தின்கண், தூய - பரிசுத்தமாகிய, சுடர் - ஒளியுள்ள, ஞானவிளக்கு ஏற்றிய - ஞானதீபத்தை ஏற்றிய, நாயகன் - நாயகனானவன், களவீசன்-திருக்களாவீசனும், நரைமயிர் - வெண்மையாகிய மயிரையுடைய, பாயும் - பாய்கின்ற, மால் - பெரிய, விடையான் - இடபத்தையுடையவனுமாகிய, பரமேட்டியே-பரமேட்டியே. எ-று.

மனத்திருள்கெட ஞானமாகிய தீபத்தைத் தந்தவன் பரமேட்டியென்பது கருத்து. தூய தூய்மை என்னும் பண்படியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம். ஞானவிளக்கு உருவகம். பரமேட்டி-உயர்ந்த இடத்திலிருப்பவன்.

(38) பரமெ னக்குனை யன்றியோர் பற்றிலேன்
சரம முற்றிய போதிற் றருவையோ
கருவை நிற்குங் களாமுத லேமறைச்
சிரமி ருக்குந் திருவடிச் செல்வமே.

(இ-ள்.) கருவை - திருக்கருவையில், நிற்கும்-நிலைபெற்றிருக்கிற, களா - திருக்களாநீழலில் எழுந்தருளிய, முதலே - முதல்வனே, பரம் எனக்கு - உடற்பாரத்தோடுகூடிய எனக்கு, உன்னையன்றி - உன்னையல்லாமல், ஓர்பற்று இலேன் - ஒரு ஆதரவும் உடையேனல்லேன், (ஆதலால்) மறைசிரம் இருக்கும்-வேதத்தின் முடிமீதிருக்கின்ற, திருவடிசெல்வம் - உன்திருவடியாகிய செல்வத்தை, சரமம்முற்றியபோதில் - சரமகாலம்நேர்ந்தபோது, தருவையோ - கொடுத்தருள்வையோ. எ-று.

திருக்கருவைக் களாநிழலில் எழுந்தருளியிருக்கிற முதல்வனே, வேதமுடியில் வீற்றிருக்கின்ற உன்றிருவடியை, என்னிறுதிக்காலத்தில் தந்தருள்வையோ என்பதுகருத்து. உடலைவெறுத்தவராதலால் அதனைப்பாரமெனப் பொருள்படுஞ் சொல்லாற்கூறி

ணர். சரமம்-முடிவு, இங்கு உயிர் உடலோடுகூடிவாழும் வாழ்க்கையின்முடிவை யுணர்த்தியது. தருவை - எதிர்கால முன்னிலை யொருமை வினைமுற்று. பற்று என்பதின் ஈற்றில் இழிவு சிறப்பும்மை தொகுத்தல். பற்றிலேன் எழுவாய்த்தொகாநிலைத்தொடர்.

(39) செல்வ மீயுஞ் சிறப்பு மளித்துளத்
அல்ல றீர்க்கு மறிவை யுதவிடும்
கல்வி நல்குங் கதிதரும் பொற்கிரி
வல்வி லான்கள வீசனை வாழ்த்தவே.

(இ-ள்.) பொன்கிரி-பொன்மலையாகிய, வல்வில்லான்-வலிய வில்லையுடையவனுகிய, களவீசனை - திருக்களாநாயகனை, வாழ்த்த-வழுத்த, (அவன்), செல்வம் ஈயும் - செல்வத்தைக் கொடுப்பான், சிறப்பும் அளித்து - மேன்மையையும்கொடுத்து, உள்ளத்து அல்லல்தீர்க்கும் - மனத்துன்பத்தையும் நீக்குவன், அறிவை உதவிடும்- ஞானத்தைக்கொடுப்பன், கல்விநல்கும் - கல்வியைக்கொடுப்பன், கதிதரும் - மோக்ஷத்தையும் கொடுப்பன், எ-று.

களவீசனை வாழ்த்தினுல் அவன் செல்வமுதலிய யாவையும் கொடுத்தருளுவன் என்பதுகருத்து. வழுத்த என்னும் காரணப் பொருட்டாகிய இறந்தகாலச்செயவெனெச்சம் ஈயும், தீர்க்கும், உதவிடும், நல்கும், தரும் என்னும் ஆண்பால்குறித்த செய்யுமென் வாய்பாட்டு வினைமுற்றுகளைக்கொண்டு முடிந்தது.

(40) வாழ்வை நம்பி மதிகெட்டுக் கும்பியில்
வீழ்புன் மாந்தர்க் குறுதி விளம்புவேன்
தாழ்ச டைக்கள வீசன் றனலயம்
சூழ்தல் சூழிற் றுறக்கங் கிடைக்குமே.

(இ-ள்.) வாழ்வைநம்பி - (இந்தப் பிரபஞ்ச) வாழ்க்கையை நம்பி, மதிகெட்டு - அறிவழிந்து, கும்பியில்வீழ்-நரகத்திற்சென்று விழுகின்ற, புல்மாந்தர்க்கு-அற்பமனிதருக்கு, உறுதிவிளம்புவேன்-உறுதிமொழி ஒன்றைச்சொல்லுகின்றேன், (அது என்னெனின்) தாழ்சடை - நீண்டசடையையுடைய, களவீசன்தன் - திருக்களாநாதனது, ஆலயம்-திருக்கோயிலை, சூழ்தல்-வலம்வருதலை, சூழின்-எண்ணிணுல், துறக்கம்-சுவர்க்க இன்பம், கிடைக்கும் - வாய்க்கும்.

இந்தப்பிரபஞ்ச வாழ்வைநம்பி அறிவழிந்து நரகத்தில் வீழ்கின்ற அற்பமனிதருக்கு உறுதிமொழியைக் கூறுவேன், அது என்னெனின், களவீசனது ஆலயத்தை வலம்வரவேண்டுமென்று நினைத்தளவில், சுவர்க்க இன்பங்கிடைக்கும் என்பதாம். கெட்டு செயப்படுபொருள் குன்றியவினையாதலால், மதிகெட்டு எழுவாய்த்

தொடர் என்க. மாந்தர் நித்தியபகுவசனம். உறுதி தொழிலாகு பெயர். தாழ்சடை, இதில் "யரழமுன்னர்க்கசதப வல்வழியியல்பு மிகலுமாகும்" என்றவிதிப்படி வினைத்தொகை யாதலால் சகரம் இயல்பாயிற்று. அல்வழி இயல்பும் மிகலும் என்றார் ஆயினும், எழுவாய்த்தொடர் உம்மைத்தொகை வினைத்தொகைகளில் இயல்பும், பண்புத்தொகை உவமைத்தொகைகளில் மிகுதலும் கொள்க.

தரவு கொச்சகக் கலிப்பா.

(41) கிடைத்தபொருள் கரத்திருக்கக் கிடைத்திலவென் றயர்வார்
படைத்த நினதருள்பெற்றும் பெற்றிலர்போற் பரிவுற்றேன்[போல்
முடைத்தலையிற் பலிகொள்ளு முகலிங்கா முகிழ்த்தநிலாச்
சடைத்தலையாய் நின்மாயம் யானுணருந் தரத்ததோ.

(இ-ள்.) கிடைத்தபொருள் - கையிற்கிடைத்தபொருள்கள், கரத்து இருக்க - கையிலிருக்கவும், கிடைத்தில என்று - கிடைத்திலவென்று, அயர்வார்போல் - தளர்ச்சி அடைபவர்போல, படைத்த - பெற்ற, நினது அருள் பெற்றும் - உன்னருளைப் பெற்றிருந்தும், பெற்றிலர்போல் - பெறாதவர்போல, பரிவுற்றேன் - வருந்தினேன், முடைத்தலையின்-புலால்நாற்றமுள்ள தலையோட்டினால், பலிகொள்ளும் - பலியேற்கின்ற, முகலிங்கா - முகலிங்கனே, முகிழ்த்தநிலா - குறைந்த சந்திரனை, சடைத்தலையாய் - சடையின்கண் உடையவனே, நின்மாயம்-உன்மாயமானது, யான் உணரும் தரத்ததோ - யான் அறியும் தரத்தை உடையதோ, எ-று.

பெற்றபொருள்கள் கையிலிருக்கவும் கிடைத்திலவென்று தளர்பவர்போல, உன்னருளைப்பெற்றும் பெறாதவர்போல வருந்தினேன், முகலிங்கனே, உன்மாயமானது நான் உணருந் தரத்ததோ என்பது கருத்து. முகிழ்த்த இறந்தகாலத்தெரிநிலைப்பெயரொச்சம். முகிழ்த்தல் - குவிதல். இங்கு கிரணம் குறைதலுக்காயிற்று. தரத்தது-தரம் என்னும் பண்படியாகப்பிறந்த ஒன்றன்பாற் குறிப்புவினைமுற்று. முடைத்தலையில் பலியேற்றசெய்தி :—தன்னைப் பிரமமென்று அகங்கரித்த பிரமனுடைய செருக்கடக்கும் பொருட்டு சிவபெருமான் வைரவமூர்த்தியை உண்டாக்க, அவ்வைரவமூர்த்தியைக்கண்டு பிரமனுடைய நடுச்சிரம் நகைக்க, வைரவர் அதனைக்கொய்து கரத்தேந்தி முனிவர் முதலியோர் பால்பலியேற்றனர் என்பது.

(42) உணராத நின்னிலையை நீயுணர்த்த வுணர்ந்ததற்பின்
புணராத தாடலையிற் புணர்ந்ததெனப் புகழோங்கத்
தணவாமலெனையுனக்குத் தந்தருகி யிரண்டற்றேன்
பணராசச்சிலம் பணிந்த பழமறையெம்பெருமானே.

(இ-ள்.) பணராசன் - ஆதிசேஷனாகிய, சிலம்பு அணிந்த - சிலம்பைத்தரித்த, பழமறை - பழமையாகிய வேதங்களால் பிரதிபாதிக்கப்படுகிற, எம்பெருமானே - எம்மிறைவனே, உணராத - (யாவராலும்) அறியப்படாத, நின்நிலையை - உன்நிலைமையை, நீ உணர்த்த - நீ அறிவிக்க, உணர்ந்ததற்பின் - அறிந்தபிறகு, புணராத - கிடைக்காத, தாள்-உன்திருவடி, தலையில் புணர்ந்தது என - என் சிரத்தில்பொருந்திற்றே என்று, புகழ் ஓங்க - உன் கீர்த்தி உயரும்படி, தணவாமல் - நீங்காமல், என்னை-என்னை, உனக்குத்தந்து - உனக்குக்கொடுத்து, உருகி-மனமுருகி, இரண்டு அற்றேன்-இரண்டற்றொழிந்தேன். எ-று.

நாகராஜனாதலால் ஆதிசேடனை பணராஜன் என்றார். உணரப்படாத வுனது நிலையையுணர்ந்தபின், உன்திருவடி என்சிரத்திற்பொருந்திற்றேயென்று உன்புகழோங்கும்படி என்னையுனக்குத்தந்து இரண்டற்றொழிந்தேன் என்பது கருத்து. பணம் - படம். பணமுடையகாரணம்பற்றிச் சர்ப்பத்திற்குப் பணி என்றுபெயர் வழங்கும். நாகங்களை ஆபரணமாகப்பூண்டகாரணத்தால் சிவபிரானுக்கு நாகபூஷணன் என்றுபெயர். உணர்ந்ததற்பின் இறந்தகாலவினையெச்சம், பின் இறந்தகாலவினையெச்சவிகுதி. இவ்வாறன்றி உணர்ந்த அதன்பின் என்பது உணர்ந்ததற்பின் எனப் பெயரொச்சத் தகரவீறு தொகுத்து நின்றதெனினுமமையும். இரண்டறுதலாவது - அவன் நான் என்னும் வேற்றுமையறச் சிவத்திற்கலத்தல். 32-ஆம் செய்யுளில், "அவனுனெனும் வேறறக்கூடினேன்" என்பதும் இக்கருத்துப்பற்றியே வந்தது.

(43) பழமையாம் வாதனையிற் படிந்தமனப் பந்தத்தின்
விழைவினுற் றலைமயங்கி வேறுவே றுருவெடுத்துச்
சுழல்குயவன் றிகிரியைப்போற் பவக்கடலிற் சுழல்வேனே
மழவிடையாய் பால்வண்ண வானவர்தங் கோமானே.

(இ-ள்.) மழவிடையாய் - இளமையாகிய இடபத்தையுடையவனே, பால்வண்ண - பால்வண்ணனே, வானவர்தம் கோமானே - தேவர்பிரானே, பழமை ஆம்-பழமையாகிய, வாதனையில்-ப்ரபஞ்சவாசனையில், படிந்த - அழுந்திய, மனப்பந்தத்தின் - மனக்கட்டினது, விழைவினுல்-விருப்பத்தால், தலைமயங்கி - தலைமயக்கங்கொண்டு, வேறு வேறு உரு எடுத்து - வேறுவேறு ரூபங்களெடுத்து, சுழல் - சுழல்கின்ற, குயவன் - குயவனுடைய, திகிரியைப்போல் - சக்கரம் சுழல்வதுபோல, பவக்கடலில் - பிறவியாகிய கடலில், சுழல்வேனே - நான் சுழல்வேனே. எ-று.

பால்வண்ணனே, பழமையாகிய பிரபஞ்சவாசனையிற் றோய்ந்த மனப்பிணிப்பினால் மயங்கி வெவ்வேறு வடிவங்களெடுத்து, சுழலாநின்ற குயவனது சக்கரம்போலப் பிறவிக்கடலிற் சுழல்வேனோ என்பது கருத்து. அவாவே பிறவிக்கு ஏதுவாகலின் "பழமையாம் வாதனையில் படிந்த மனப்பந்தத்தின் விழைவினால் தலைமயங்கி வேறு வேறு உருவெடுத்து" என்றார். இதனை நாயனாரும் "அவாவென்ப எல்லாவுயிர்க்கு மெஞ்ஞான்றுந்-தவாஅப் பிறப்பீனும்வித்து" என்றார். "சுழல்குயவன் திகிரி" தொழிலுவமம். சுழல என்னும் காலங்கரந்த பெயரெச்சம் திகிரி என்னும் செய்பவனாகிய பெயர் கொண்டது.

(44) கோமானேகருவை வருகுணக்குன்றே மலரிதழித்
தேமாலைபுனைந்தசடைச் செழுஞ்சுடரே யென்றென்று
பாமாலை வாய்பாடிக் கைகொட்டிப் பதம்பெயர்த்து
நாமாட வம்மின்கா டொண்டராய் நமரங்காள்.

(இ-ள்.) தொண்டராய் - தொண்டர்களாகி, நமரங்காள்-நம்மவர்களே, கோமானே - இறைவனே, கருவைவரு - திருக்கருவையில் எழுந்தருளிய, குணக்குன்றே - நற்குணமலையே, இதழி மலர்-கொன்றைமலர்களாலாகிய, தேன்-மணம்பொருந்திய, மாலை-மாலையை, புனைந்த - தரித்த, சடை - சடையையுடைய, செழுஞ்சுடரே-செழுமையாகிய சோதியே, என்று என்று - என்று பலகாற்புகழ்ந்து, பாமாலைவாய்பாடி - பாமாலையை வாயினாற்பாடி, கைகொட்டி-கைதட்டி, பதம்பெயர்த்து - அடிபெயர்த்து, நாம் ஆட - நாம் ஆடுதற்கு, வம்மின்காள் - வாருங்கள். எ-று.

தொண்டர்களே, இறைவனைக் கோமானே என்பது முதலியவாகப் புகழ்ந்துபாடி, அடிபெயர்த்துக் கூத்தாடவாருங்கள் என்பது கருத்து. நமரங்காள் - நமர்கள் என்னும் முறைப்பெயர் விளியேற்று, ஈற்றகரம் ஆகாரமாகி, இடையே அம்முச்சாரியை பெற்றது. தேமாலை என்பதைத் தேன்+மாலை என்றாவது, தேம்+மாலை என்றாவது பிரிக்க. முன்னையதில் னகரங்கெட்டதற்குச் சூத்திரம். நன்-மெய்-11-பின்னையதில் மகரம்கெட்டதற்குச் சூத்திரம் நன்-மெய்-16. இதழிமலர் என்பது மலர் இதழி என முன்பின்னாக மாறிநின்றது. இதழி - கொன்றைமரம். வம்மின்கள் ஏவற்பன்மை வினைமுற்று. பகுதி வா - குணக்குன்று உருவகம்.

(45) தொண்டுசெய்து வழிப்பட்டுச் சுருதிபுகழ்களாவீசன்
புண்டரிகமலர்த்தாளைப்போற்றி முதற்பேறுபெற்றார்
அண்டர்பிரானுன்முகத்தோனுழியா னிவரொன்றால்
மண்டனின்ஞானத் தெளியமானிடரோவழுத்துவார்.

(இ - ள்.) அண்டர்பிரான் - தேவர்க்கரசனாகிய இந்திரனும், நான்முகத்தோன் - நான்குமுகத்தையுடைய பிரமனும், ஆழியான்- திருவாழியையுடைய திருமாலும் ஆகிய, இவர்-இவர்கள், தொண்டு செய்து - அடிமைசெய்து, வழிபட்டு - வழிபட்டு, சுருதிபுகழ்-வேதங்கள் புகழ்கின்ற, களாவீசன் - திருக்களாவீசனது, புண்டரிகமலர்-தாமரைமலர்போன்ற, தாளை-திருவடியை, போற்றி-வணங்கி, முதல் - முதன்மையாகிய, பேறு-பிரயோசனத்தை, பெற்றார் என்றால் - அடைந்தாரென்றால், மண்தனில் - மண்ணுலகத்தில் உள்ள, ஞானத்து எளிய மானிடரோ-அற்பஞானத்தையுடையராகிய மனிதரோ, வழுத்துவார் - (அவனை) வாழ்த்துதற்குரியவராவர். எ-று.

இந்திரன் பிரமன் திருமால் என்பவர் களாவீசனை வழிபட்டு அவனது திருவடியைவணங்கிப் பேறுபெற்றனர் என்றால், இந்த மண்ணுலகத்திலுள்ள மனிதரோ அவனைத் துதிக்கவல்லார் என்பது கருத்து. பேறு முதனிலைதிரிந்த தொழிலாகுபெயர். மண் கருவியாகுபெயர். எளிய எளிமை என்னும் பண்படியாகப்பிறந்த குறிப்புப்பெயரெச்சம்.

(46) வழுத்திடுவே னாவார மலரிடுவேன் கரங்கொண்டு
தொழத்தகுவேன் முடிதாழ்த்திச்சூழ்வருவேன் துணைத்தாளால்
அடுத்திடுவேன் மனத்துன்னையகம் புறமொன்றாயுருகிப்
பழுத்திடுவேனருள்கனியப் பால்வண்ணா நம்பரனே.

(இ-ள்.) பால்வண்ணா - பால்வண்ணனே, நம்பரனே - எம்பரனே, நா ஆர வழுத்திடுவேன்-நாவாரத்துதிப்பேன், கரம்கொண்டு மலர் இடுவேன் - கையினால் மலர்களைத் தூவுவேன், முடிதாழ்த்தி-சிரசைவணக்கி, தொழத்தகுவேன்-தொழுதற்குரியனாவேன், துணைத்தாளால் - இரண்டுபாதங்களால், சூழ்வருவேன் - வலம்வருவேன், மனத்து உன்னை அடுத்திடுவேன் - மனத்தில் உன்னைப் பதித்திடுவேன், அருள்கனிய-என்மீது உன் அருள் முதிரும்படி, அகம்புறம் ஒன்று ஆய் உருகி - உள்ளும்புறமும் ஒருதன்மையாயுருகி, பழுத்திடுவேன் - முதிர்ந்திடுவேன். எ-று.

பால்வண்ணனே, உன்னைத்துதித்தல் முதலாயின செய்வேன், என்னையாண்டருள வேண்டுமென்பது கருத்து. கரங்கொண்டு என்பதில் கொண்டு மூன்றும்வேற்றுமைச் சொல்லுருபு. மலர் இ என்னும் வினைமுதற்பொருள் விகுதி புணர்ந்துகெட்ட தொழிலடியாகப் பிறந்த பெயர். புறத்துருகல் ஆனந்தக்கண்ணீர் சிந்தல் முதலியன.

(47) நம்பியுன தருள்வேட்டு நடுக்கடலுட் கலங்கவிழ்ந்து
வெம்புதுயர் மனத்தார்போன் மெலிகின்றே னெடுநாளாக்
கும்பமுனிக் கருள்புரியுங் கொற்றவனே முகலிங்கா
தும்பைமுடித் தோய்புரக்க விரக்கமின்னந் தோன்றாதோ.

(இ - ள்.) கும்பமுனிக்கு - அகத்தியருக்கு, அருள்புரியும் - அருள்செய்கின்ற, கொற்றவனே - இறையவனே, முகலிங்கா - முகலிங்கனே, தும்பைமுடித்தோய் - தும்பைமலரை முடித்தவனே, நம்பி - நம்பி, உனது அருள்வேட்டு - உன்னருளைவிரும்பி, நடுக்கடலுள் - கடலின்நடுவில், கலம்கவிழ்ந்து - மரக்கலங்கவிழப்பெற்று, (அதனால்) வெம்பு - கொதிக்கிற, துயர்மனத்தார்போல் - துன்பமனத்தினர்போல, நெடுநாள் ஆக மெலிகின்றேன் - வெகுகாலமாகமெலியாநின்றேன், (அதனால்) புரக்க - என்னைக்காத்தருள, இன்னம் - இன்னமும், இரக்கம்தோன்றாதோ - உனக்கு இரக்கமுண்டாகாதோ.

முகலிங்கனே, உன்னருளைவிரும்பி அதுகிடைக்கப்பெறாமையால், நடுக்கடலுள் மரக்கலம்கவிழப்பெற்ற வணிகர்போல நெடுநாளாக மனமெலியாநின்றேன், இன்னமும் உன்னருள் உண்டாகவில்லையே என்பது கருத்து. குடத்திற்பிறந்த காரணத்தால் அகத்தியர் கும்பமுனி எனப்பட்டார். கொற்றவன் - கொற்றம் (வெற்றி) என்னும் பண்படியாகப்பிறந்த பெயர்ப்பகுபதம்.

(48) தோன்றியபோ துடன்றோன்றித் தோன்றாது மறைத்தென்னை
ஆன்றசெழுஞ் செம்பிலுறை களிம்புபோ லகலாமல்
ஊன்றுமலத் துகளகற்றி யுன்னருளும் பெறுவேனோ
மூன்றுலகுந் தொழுதேத்து முகலிங்கா முதற்பொருளே.

(இ-ள்.) மூன்று உலகும் - மூவுலகும், தொழுது ஏத்தும் - வணங்கித் துதிக்கின்ற, முகலிங்கா - முகலிங்கனே, முதற்பொருளே - முதன்மையாகியபொருளே, தோன்றியபோது - நான் உண்டானபோது, உடன்தோன்றி - என்னுடனேயுண்டாகி, என்னைத் தோன்றாது மறைத்து - என்னை எனக்குத் தெரியவொட்டாமல் மறைத்து, ஆன்ற - நிறைந்த, செழு - செழுமையாகிய, செம்பில் உறை - செம்பில்தங்கிய, களிம்புபோல் - களிம்புபோல, அகலாமல் - நீங்காமல், ஊன்றும் - பதிந்த, மலத்துகள் அகற்றி - அநாதிமலசம்பந்தமாகிய குற்றத்தைப்போக்கி, உன்னருளும் பெறுவேனோ - உன்னருளையும் நான் அடைவேனோ.

முகலிங்கனே, நான் தோன்றும்போது உடன்தோன்றி, என்னைச்செம்பைவிட்டகலாத களிம்புபோல விட்டகலாமல் உடனின்று வருத்துகின்ற மும்மலத்தொடக்கறுத்து, உன்னருளையும் பெறுதற்

குரியேனுவேனே என்பதுகருத்து. அகல் என்பதன் மரூஉவாகிய ஆல் என்னும் பகுதியடியாகப்பிறந்த இறந்தகாலப்பெயரெச்சம் களிம்பு என்னும் செய்பவனுகிய பெயர்கொண்டது. அருளும் என்ற உம்மை உயர்வுசிறப்புப்பொருளது.

(49) பொருள்வேட்டு நிலம்வேட்டும் பூவையர்தம் புணர்கலவி
மருள்வேட்டு நாடோறு மனவலிகெட் டயர்கின்றேன்
அருள்வேட்டுன் சந்நிதிப்பட் டருந்துயர்போ யுய்வேனே
தெருள்வேட்டார்க் கருள்புரியுந் திருக்களவி லுறைவோனே.

(இ-ள்.) வேட்டார்க்கு - விரும்பின அடியார்களுக்கு, தெருள் அருள்புரியும் - மனத்தெளிவை யருள்செய்கின்ற, திருக்களவில் உறைவோனே - திருக்களாநிழலில் வாழ்பவனே, பொருள் வேட்டும் - பொருளையிச்சித்தும், நிலம்வேட்டும் - பூமியை யிச்சித்தும், பூவையர்தம் - மாதர்களுடைய, புணர்கலவி மருள்வேட்டும்- புணர்தற்குரிய கலவியாலாகிய மயக்கத்தையிச்சித்தும், நாள்தோறும் - தினந்தோறும், மனவலிகெட்டு - மனவுறுதியழிந்து, அழிகின்றேன் - நசிக்கின்றேன், அருள்வேட்டு-உன் திருவருளைவிரும்பி, உன் சந்நிதிப்பட்டு - உன்சந்நிதியில்வந்து, அருந்துயர்போய் - சகித்தற்கரிய துன்பங்கள் நீங்கி, உய்வேனே - பிழைப்பேனே, எ-று.

களாநிழலில் வாழ்பவனே, பொருள்முதலியவற்றை விரும்பி மனநிலைகெட்டு அயர்கின்றேன், இப்படிப்பட்டநான், உன்சந்நிதியில்வந்து உன்னைச்சேவித்து என் துன்பங்கள் நீங்கப்பெற்று உய்வேனே என்பதுகருத்து. பொருள்வேட்டு நிலம்வேட்டு மருள்வேட்டு என்னும் வினையெச்சங்களினீற்றிலும் பெயர்ச்சொல்லினீற்றில் வருதல்போல எண்ணும்மைகள்வந்தன. நன்னூல் சூத்திரம்:— "வினையொடு வரினு மெண்ணினைய வேற்பன". இறைவனை வழிபட்டு வணங்கும்பொருட்டுப் பெற்ற மனவலியைக்கெடுத்து மயங்கச்செய்வதில், பொருளாசையும், நிலத்தாசையும், மங்கையராசையும் வல்லன ஆகையால் "பொருள்வேட்டும் நிலம்வேட்டும் பூவையர்தம் புணர்கலவி மருள்வேட்டும் நாள்தோறும் மனவலிகெட்டு" என்றார். "பொன்னைமாதரைப் பூமியை நாடிடேன்" என்றார் பிறரும். பூவை-நாகணவாய்ப்புள். இது பெண்ணுக்கு உவமையாகு பெயராய் உயர்திணைப்பன்மைப்பால் விகுதியேற்று பூவையர் என வந்தது.

(50) உறைவாய்நன் மனத்தன்பருட ரேறுமுயிராகி
நிறைவாயெவ்வுலகனைத்து நீக்கமிலாதுணர்ந்தோர்க்கு
மறைவாயுய்த்துணரார்க்குமறைபயிலுங் கருவையில்வாழ்
இறைவாநின்றிரு விளையாட்டியான் வழுத்த வடங்காதே.

(இ-ள்.) நல்மனத்து - நன்மனத்தையுடைய, அன்பர் - அன்பர்களது, உடல்தோறும் - உடம்புகள்தோறும், உயிர் ஆகி - உயிராகி, உறைவாய் - வாழ்வாய், உணர்ந்தோர்க்கு - அறிந்தவர்க்கு, எவ்வுலகு அனைத்தும் - எவ்வகைப்பட்ட உலகங்களெல்லாவற்றினும், நீக்கம் இல்லாது - நீங்குதலின்றி, நிறைவாய் - நிறைந்திருப்பாய், உய்த்து உணரார்க்கு - ஆராய்ந்தறியாதவர்க்கு, மறைவாய்- மறைந்திருப்பாய், (ஆதலால்) மறைபயிலும் - வேதங்கள் வழங்குகின்ற, கருவையில்வாழ் - திருக்கருவையில்வாழ்கின்ற, இறைவா - இறைவனே, நின் திருவிளையாட்டு - உன் திருவிளையாடலானது, யான்வழுத்த - நான்துதிக்க, அடங்காது-அடங்கப்பெறாது.

திருக்கருவையிறைவனே, நல்லமனத்தையுடைய அன்பர்களுடைய உடலுக்குயிராய் வாழ்வாய், எவ்விடத்தும் நீக்கமின்றி நிறைந்திருப்பாயென்று நினைப்பவர்களுக்கு அவ்வாறே நிறைந்து நிற்பாய், உணராதவர்க்கு மறைந்திருப்பாய், உன்திருவிளையாட்டானது நான்புகழ அடங்குமோ என்பது கருத்து.

எழுசீர்க் கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

(51) காதற்பெருக்கு மொருகோடி கோடிகவலைப்பெருக்குமிகலாய்
வாதைப்படுத்த வலைமாறுபோலேமனமாலுழன்றுவிடவோ
வேதப்பெருக்குமுழவோசைவிம்முவிழவின்பெருக்குமியல்கூர்
நாதப்பெருக்குமொழியாது மல்குகருவேசஞானவுருவே.

(இ - ள்.) வேதப்பெருக்கும் - வேதத்தின்பெருக்கமும், முழவோசைவிம்மு - முழவொலிமிகுந்த, விழவின்பெருக்கும்-திருவிழாவின்பெருக்கமும், இயல்கூர்நாதப்பெருக்கும் - இலக்கணமமைந்த (யாழ்முதலியவற்றின்) ஓசைப்பெருக்கமும், ஒழியாதுமல்கு-இடையறாது நிறைந்திருக்கின்ற, கருவேச - திருக்கருவாபுரிக்கு நாயகனே, ஞானவுருவே - ஞானரூபமே, காதல்பெருக்கும் - ஆசைப்பெருக்கமும், ஒருகோடிகோடி கவலைப்பெருக்கும் - ஒருகோடிகோடியாகிய கவலைப்பெருக்கமும், இகல் ஆய் - (எனக்கு) பகையாகி, வாதைப்படுத்த-துன்பஞ்செய்ய, அலை மாறு போல-கடலிற்றுரும்பு போல, மனம் மால் உழன்றுவிடவோ - மனமயக்கமடைந்து உழலவோ. எ-று.

வேதமுழக்கமுதலியன நிறைந்திருக்கிற திருக்கருவைக்கிறைவனே, ஆசைப்பெருக்கமும் அதனாலுளவாகின்ற துன்பப்பெருக்கமும் ஆகிய இவைகள் என்னை வருத்த, நான் கடலிற்றுரும்புபோல மனம் வருந்தி யுழலவோ என்பது கருத்து. வேதப்பெருக்கு முத

லியன தொழிற்பண்புத்தற் கிழமைப்பொருளதாகிய ஆறும் வேற்றுமைத்தொகை நிலைத்தொடர்கள். பெருக்கு முதனிலை திரிந்த தொழிற் பெயர்.

(52) உருவாகிநிற்றியருவாகி நிற்றியுயிரோடெவர்க்குமுறவாய்
மருவாகி நிற்றிமலராகி நிற்றிமறையாகி நிற்றிமறையின்
பொருளாகி நிற்றியுனையானறிந்து புகழ்கின்றவாறுமறியேன்
கருவாபுரிக்குளுறைதேவ தேவகதியே தெனக்குமொழியே.

(இ-ள்.) உரு ஆகிநிற்றி - உருவமாகி நிற்பாய், அரு ஆகிநிற்றி - அருவமாகி நிற்பாய், உயிரோடு-உயிருடன், எவர்க்கும் உறவு ஆய் - யாவர்க்கும் உறவாகி, மரு ஆகிநிற்றி மணமாகி நிற்பாய், மலர் ஆகி நிற்றி - மலராகி நிற்பாய் - மறை ஆகிநிற்றி - வேதமாகி நிற்பாய், மறையின் பொருள் ஆகிநிற்றி - வேதத்தின் பொருளாகி நிற்பாய், உன்னை - உன்னை, யான் - நான், அறிந்து - (இத்தன்மையை என்று) உணர்ந்து, புகழ்கின்ற ஆறும் அறியேன் - புகழ்கின்ற விதத்தையும் உணர்ந்திலேன், கருவாபுரிக்குள் உறை - திருக்கருவாபுரியில் வாழ்கின்ற, தேவதேவ-தேவதேவனே, எனக்குக்கதி ஏது - எனக்குக் கதியாது, மொழி-சொல்லுவாய்.

கருவாபுரிநாயகனே, உரு அரு முதலிய பலரூபங்களாகி நீ நிற்றலால் உன்னிலையை யின்னதெனவுணர்ந்து புகழ அறியேன், நான் கதியடையும் வழியாது என்பது கருத்து. நிற்றி எதிர்கால முன்னிலை யொருமை வினைமுற்று. உரைத்தி, உண்டி, தின்றி என இகரம் தடற ஊர்ந்து எதிர்காலம் பற்றிவரும் என்றார் சேனாவரையர். மறை இறைவனுடைய குணப்பெருமையை மறைவாகச் சொல்வது. இது தொழிலாகுபெயர். இவ்வாறன்றிச் சிலவருணத்தாருக்கு மறுக்கப்படுவது என்று பொருள் கொள்ளலும் பொருந்தும். அவ்வாறு கொள்ளும்போது தொழிலடியாகப் பிறந்த பெயர் என்க. மறு பகுதி, ஐ செயப்படுபொருள் விகுதி, உகரக் கேடு சந்தி.

(53) மொழிகின்றவாறு சமயங்கடோறுமுழுதுஞ் சுழன்றுநிலையற்
றழிகின்றசிந்தை யவலங்கெடுத்துனடி கண்டுநாடியறியும்
விழியுங்கொடுத்த முகலிங்கநாத மிகுமன்பர்தேடுபொருளே
பொழியுங்கடைக்கணருளா லளித்திபுரையற்ற முத்திநிலையே.

(இ-ள்) மொழிகின்ற - (நூல்களால்) சொல்லப்பட்ட, ஆறு சமயங்கள் தோறும்-ஆறு சமயங்களிலும், முழுதும் சுழன்று - ஆயுளுள் முழுதும் சுழன்று, நிலை அற்று - அவைகளுள் ஒன்றிலாயினும்-நிலைத்தலின்றி, அழிகின்ற - நசிக்கின்ற, சிந்தை அவலம்கெ

டுத்து - மனச்சலநத்தை யடக்கி, உன் அடிகண்டு - உன் திருவடியைக்கண்டு; நாடி அறியும் - (உன்னிலைமையை) ஆராய்ந்தறிதற்குரிய, விழியும் கொடுத்த - ஞான நேத்திரத்தையுங் கொடுத்த, முகலிங்கநாத - முகலிங்க நாதனே, மிகும் அன்பர் தேடு பொருளே - மிகுந்த அன்புடையார் தேடுகின்ற பொருளே, புரைஅற்ற - குற்றமற்ற, முத்திநிலை - மோக்ஷநிலையை, பொழியும் - பொழிகின்ற, கடைக்கண் அருளால் - உன்கடைக்கண்ணின் கிருபையால், அளித்தி - அருள்செய்யாய். எ-று.

ஆறுசமயங்களிலுஞ் சுழன்று ஒன்றிலும் நிலைக்காமல் உழல்கின்ற என்மனத்துயரத்தை நீக்கி உன்திருவடியைக் கண்டேய்யும் வண்ணம் ஞானக்கண்ணைத் தந்தருளின முகலிங்கனே, உன்கடைக்கண்ணருளால் முத்திநிலையையும் தந்தருளவேண்டுமென்பது கருத்து. ஆறுசமயங்களாவன :—வைரவம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம் என்பன. கண்கடை என்பது முன் பின்னாகமாறிக் கடைக்கண் என வந்தமையால் இலக்கணப்போலியாம். அளித்தி ஏவலொருமை வினைமுற்று.

(54) முத்திக்கு வித்து னடியார்கள் சிந்தை முளரிக் கருக்கன் மொழியெண், சித்திக்கு மூலந் தவயோகி கட்குத் தெளிகன்ன லூறு மிரதம், பத்திக்குநித்த மருள்வீசுகொண்டல் களவீச னெங்கள்பரமன், அத்திக்கு முன்னம்வரமே யளித்தகருவேசனம்பொனடியே.

(இ-ள்.) பத்திக்கு - அன்பர்செய்யும் பத்திக்கு, நித்தம் - நாள்தோறும், அருள்வீசுகொண்டல் - அருள்மழையைப் பொழிகின்ற மேகம், களவீசன் - திருக்களாவீசன், எங்கள்பரமன் - எங்கள்மேலோன், அத்திக்கு - யானைக்கு, முன்னம் - முற்காலத்தில், வரம் அளித்த - வரங்கொடுத்த, கருவேசன் - திருக்கருவை நாதன், (அவனது) அம் - அழகாகிய, பொன் அடி - பொன்போலுந் திருவடியானது, முத்திக்குவித்து - முத்திக்குமூலம், உன் - நினைக்கிற, அடியார்கள் - அடியார்களுடைய, சிந்தைமுளரிக்கு, மனமாகிய தாமரைமலருக்கு, அருக்கன் - சூரியன், மொழி - சொல்லப்பட்ட, எண்சித்திக்கு - அட்டமாசித்திக்கும், மூலம் - காரணம், தவயோகிகட்கு - தவஞ்செய்யும் யோகிகளுக்கு; தெளிகன்னல் ஊறும் இரதம் - தெளிந்தகரும்பினிடத்தில் ஊறுகின்ற இரதம். எ-று.

கருவேசனது திருவடி முத்திக்குவித்தாகும், அடியவர் மனத்தாமரைக்குச் சூரியனாகும், அட்டசித்திக்குக் காரணமாகும், யோகிகளுக்கு அமிர்தமாகும் என்பது கருத்து. பக்தி, அஸ்தி, முக்தி,

சிந்தா என்னும் வடமொழிகள் பத்தி, அத்தி, முத்தி, சிந்தை எனத்திரிந்துவந்தமையால் தற்பவமெனப்படும். எண்சித்திகளாவன :—அணிமா, மகிமா, கரிமா, லகிமா பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்பன. அவற்றுள் அணிமா - ஆன்மாப் போலாதல், மகிமா - மகத்துவமாதல், கரிமா-தன்னுடல் கண்டிப்பு இல்லாமல் கண்டிப்புள்ளவற்றை உருவவல்லவனாதல், லகிமா-இலகுத்துவமாதல், பிராத்தி - வேண்டுவன அடைதல், பிராகாமியம்-நிறையுளனாதல், ஈசத்துவம் - ஆட்சியுளனாதல், வசித்துவம் - எல்லாம் தன்வசமாக்கவல்லவனாதல். அத்திக்குவரமளித்த செய்தி :—முன்னொருகாலத்தில் திருக்கைலாயத்தின்கண் சிவபெருமான் உமாதேவியாருடன் தனித்திருக்கையில், சிவகணங்களுக்குத் தலைவனாகிய அத்தியென்பவன் இறைவனைத் தரிசிக்கச்செல்கையில், வாயில்காப்பாளர் இறைவன் அந்தப்புரத்திலிருக்கின்றமையால் செல்லத்தகாது என்று தடுக்கவும், அவர்மொழிதள்ளிச் செல்லக்கண்ட உமாதேவியார் கடுங்கோபமுற்று அத்தி என்னும் பெயருடைய நீ அத்தியாகக்கடவை என்று சபித்தனள். அவ்வாறு சாபமேற்ற கணநாதனாகிய அத்தியென்பவன் இறைவனையும் தேவியையும் வணங்கி அடியேன்செய்த பிழையைப் பொறுத்தருளவேண்டுமென்று துதிக்க, இறைவன் நீ யானையாய்ப்பிறந்து தென்கைலாயமாகிய திருக்களத்தியில் முத்திலிங்கத்தினை அருச்சித்து, பிறப்பு நீங்கி முத்தியடைவையென்று வரமளித்தனர் என்பது.

(55) அடியாரிழைத்த பிழைகோடிநெஞ்சினறியாதவாதிமுதல்வன்
கொடியார்புரத்தை யழன்மூடவன்றுகுறுமூரல் கொண்டகுழகன்
நெடியோன்வழுத்துகளவீசனென்று நினைதோறுமுள்ளநெகிழ
முடியேறுமங்கை புளகிக்குமேனி முகுளிக்குமென்கணிணையே.

(இ - ள்.) அடியார் இழைத்த - அடியார்கள்செய்த, பிழைகோடி-கோடிபிழைகளையும், நெஞ்சின் அறியாத-திருவுளம்பற்றாத, ஆதிமுதல்வன்-ஆதியாகிய முதல்வன், கொடியார் புரத்தை-கொடியவராகிய பகைவருடைய முப்புரங்களை, அழல் மூட-நெருப்பு விழுங்கும்படி, அன்று-அந்நாளில், குறுமூரல்கொண்ட - புன்னகை செய்த, குழகன்-அழகன், நெடியோன் வழுத்து-திருமால் துதிக்கின்ற, களவீசன்-திருக்களவீசன், என்று நினைதோறும்-என்று நினைக்குந்தோறும், உள்ளம் நெகிழ-மனமுருக, அங்கை முடியேறும்-என் அகங்கைகள் சிரத்திலேறும், மேனிபுளகிக்கும் - உடல் புளகங்கொள்ளும், என் கண் இணை-என்கண்களிரண்டும், முகுளிக்கும்-மூடும்.

புளகித்தல் - மயிர்சிலிர்த்தல். களவீசனை நினைக்குந்தோறும் என்மனம் நெகிழும், என்கைமுடிமீதேறும், என் உடல் புளகிக்கும்,

என் கண்ணிணை மூடும் என்பதுகருத்து. அகம் + கை என்பதில் நிலைமொழிக் ககரவுயிர் மெய்கெட்டு மகரம் ஙகரமாய்த்திரிந்து புணர்ந்தது. நிலைமொழிக் ககரவுயிர் மெய்கெட்டதற்கு நன் - சூத்திரம், "அகமுனர்ச்செவிகைவரி னிடையன கெடும்". முப்புரத்தை அழல் மூடக்குறுமுறுவல்செய்த செய்தி-சிவபெருமான் சந்திர சூரியர்கள் முதலிய தேவர்களைக் கூட்டிக்கொண்டு திரிபுரங்களை அழிக்கமுயல்கையில் சந்திரன் முதலிய தேவர்கள் ஒவ்வொருவரும் தத்தம் உதவியால் திரிபுரங்களை அழித்தலாகிய இக்காரியம் முற்றுப்பெறுகின்றதென்று இறுமாப்புக்கொண்டதை சிவபெருமான் உணர்ந்து புன்னகைபுரிய, அந்நகையால் திரிபுரவாசிகள் தமது புரங்களோடு எரிந்து சாம்பராயினரென்பது.

(56) என்கண்ணிடத்தினகலாதசெல்வனெழிலார்களா வின்முதல்வ
வன்கண்ணர்நெஞ்சு புகுதாதநம்பன் மனமாசறுத்த பெருமான்[ன்
புன்கண்ணகற்றியடியாரை வீடுபுகுவித்து நின்றபுனிதன்
தன்கண்ணெனக்குமுடியாதவன்புதரவென் கொல்செய்ததவமே.

(இ-ள்.) என்கண் இடத்தின் - என்கண்ணினிடத்து நின்றும், அகலாத - நீங்காத, செல்வன் - திருவுடையான், எழில் ஆர்-அழகு பொருந்திய, களாவின்முதல்வன் - திருக்களாநீழலிலிருக்கும் முதல்வன், வன்கண்ணர் - கொடியாருடைய, நெஞ்சுபுகுதாத நம்பன் - மனத்தில்நுழையாத நம்பன், மனமாசு அறுத்தபெருமான் - மனக்களங்கத்தையறுத்தருளிய பெருமான், புன்கண் அகற்றி-துன்பத்தை நீக்கி, அடியாரை-தன்னடியவரை, வீடுபுகுவித்து நின்ற புனிதன்-மோக்ஷநிலத்திற் செலுத்திநின்ற பரிசுத்தன், எனக்கு - அடியேனுக்கு, தன்கண்முடியாத அன்புதர - தன்னிடத்தில் முடிவில்லாத அன்புசெய்யும்படி அருள்செய்தற்கு, செய்ததவம்-யான்செய்ததவம், என்கொல்-யாதோ. எ-று.

திருக்களாநாயகன் தன்னிடத்து முடியாத அன்புண்டாம்படி செய்தற்குக் காரணமாக நான்செய்ததவம் யாது என்பது கருத்து. என்கண் என்பது "னனவல்லினம் வரட்டறவும்" எனப் பொது விதிப்படி திரியாமல், "தன்னென்னென்பவற்றீற்று னவ்வன்மையோடுறழும்" என்னும் சிறப்பு விதிப்படி உறழ்ச்சியில் இயல்பாய் வந்தது. கண் இடம் ஒற்றுமைப்பொருளதாகிய ஆறும்வேற்றுமைத்தொகையாகக் கொள்ளுதலேயன்றி, இருபெயரொட்டுப் பண்புத்தொகை என்னலுமாம். புகுதாத எதிர்மறைப்பெயரெச்சம். புகு பகுதி, து சாரியை, உகரக்கேடு சந்தி, ஆ எதிர்மறை விகுதி, த் எழுத்துப்பேறு, அ பெயரெச்ச விகுதி. பெருமான் என்பதற்குப் பெண்பால் பெருமாட்டி. நம்பன்-மங்களகுணபூரணன்.

(57) தவமுந்தவத்தினுறுபேறுமான தலைவாகளாவின்முதலே
புவனங்களாவையுயிர்வர்க்கமாவை நுகர்போகமாவைபுகலும்
திவசங்களாதிவருகாலமாவைதெளிவார் தெளிந்தவமயத்
திவையன்றிநிற்பையெனினையநெஞ்சி னெவரோமதிப்பருனையே.

(இ-ள்.) தவமும் - தவசும், தவத்தின் உறுபேறும் ஆன-தவ சின்மிக்க பேறுமாகிய, தலைவா - தலைவனே, களாவின்முதலே-திருக்களா முதல்வனே, புவனங்கள் ஆவை-உலகங்களாவாய், உயிர் வர்க்கம் ஆவை - (அந்தவுலகங்களிலுள்ள) ஜீவராசிகளாவாய், நுகர் போகம் ஆவை - (அந்த ஜீவராசிகள் அநுபவிக்கிற) போகங்களு மாவாய், புகலும் - நூல்களாற் சொல்லப்படுகிற, திவசங்கள் ஆதி-நாள்கள் முதலாக, வரு - வருகிற, காலம் ஆவை-காலமும் ஆவாய், தெளிவார் தெளிந்த அமயத்து - தெளிவுடையார் தெளிந்துநின்ற இடத்தில், இவை அன்றி நிற்பை - இவையல்லாமலும் நிற்பாய், எனின்-ஆயின், ஐய-ஐயனே, உன்னை - நின்னை, நெஞ்சின்-மனத்தி னால், மதிப்பர் - மதித்தறிபவர், எவரோ - யாவரோ. எ-று.

தவமும் தவப்பேறுமாகிய தலைவனே, புவனங்கள் முதலிய எல்லாப்பொருள்களும் நீயேயாகியிருந்தால், உன்னை யாவர் மதித் தறிய வல்லார் என்பதுகருத்து. உறு உரிச்சொல். ஆவை, நிற்பை முன்னிலை யொருமை எதிர்கால வினைமுற்றுகள்.

(58) உன்னாம மோதியுனையே வணங்கியுறுபூசை பேணுமுரவோர்
பொன்னாடளிக்க வரநல்குமாதி புனிதாகளாவி லுறைவோய் [ன்
முன்னையுனக்கியானடியானு மல்லேன் முழுஞானியல்லனெளியே
என்னை பிழைத்தபிழைகோடியுள்ளவெனினும்புரத்தல்கடனே.

(இ-ள்.) உன்நாமம் ஓதி - உன்திருநாமத்தையே யுச்சரித்து, உன்னையேவணங்கி - உன்னையேதொழுது, உறுபூசைபேணும்-மிக்க பூசையையே விரும்புகிற, உரவோர் - அறிவுடையார், பொன்நாடு அளிக்க - பொன்னுலகையாளும்படி, வரம்நல்கும் - வரத்தைக்கொ டுக்கிற, ஆதி - முதல்வனாகிய, புனிதா - பரிசுத்தனே, களாவில் உறைவோய் - திருக்களாநிழலில் வாழ்பவனே, முன்னை - முற்கா லத்தில், உனக்கு - உனக்கு, யான்-நான், அடியானும் அல்லேன்-தொண்டனுமல்லேன், முழுஞானி அல்லன் - பூரணஞானியுமல் லேன், எளியேன் - எளியவனாகிய அடியேன், என்னை - என்னே, பிழைத்தபிழைகோடி உள்ள எனினும் - செய்தகுற்றங்கள்கோடி யாயுள்ளனவாயினும், புரத்தல் - என்னைக்காத்தல், கடனே - உனக் குக் கடன்மையேயாகும். எ-று.

திருக்களா நிழலில் வாழ்பவனே, உனக்கு நான் அடியானுமல்லேன், ஞானியுமல்லேன், ஆயினும் என்பிழைகள் அனேகமாயிருப்பினும் அவற்றைப் பொறுத்து என்னைக் காத்தருளுதல் உன்கடனாகும் என்பது கருத்து. பிழைத்தபிழை பொறுதபோர் என்பது போல வந்தது. உள்ள உண்மை என்னும் பண் படியாகப் பிறந்த பலவின் பாற்குறிப்பு வினைமுற்று.

(59) கடவாரணத்தி னுரிபோர்வைகொண்டகருவேசவாதி முதல்வா
சடவாதனைக்கு ளவமேகிடந்து தடுமாறுநெஞ்ச முடையேன்
அடைவாய்வழுத்தி வழிபாடுசெய்து னடிபேணவொன்று மறியேன்
மடமாலகற்றி யிடுமாறளிக்கும் வரநீகொடுக்கும் வரமே.

(இ-ள்.) கடம் - மதத்தையுடைய, வாரணத்தின் உரி-யானையின் தோலை, போர்வைகொண்ட - போர்வையாகக் கொண்ட, கருவேச - திருக்கருவை யீசனே, ஆதி முதல்வா-ஆதிமுதல்வனே, சடவாதனைக்குள் - சரீர வேதனைக்குள், அவமேகிடந்து - வீணுகக் கிடந்து, தடுமாறும் - தடுமாறுகின்ற, நெஞ்சம் உடையேன் - மனத்தை யுடையேன், அடைவு ஆய்வழுத்தி - முறையாகத் துதித்து, வழிபாடுசெய்து - வழிபட்டு, உன் அடிபேண - உன் திருவடியையடைய, ஒன்றும் அறியேன் - சிறிது மறிந்திலேன், மடம் - அறியாமை யோடுகூடிய, மால் - மயக்கத்தை, அகற்றியிடும் ஆறு - நீக்கும் வகை, அளிக்கும் - நீ கிருபை செய்கிற, வரம் - வரமே, நீ கொடுக்கும் வரம்- நீ யெனக்குக் கொடுத்தற்குரிய வரமாவது. எ-று.

திருக்கருவேசனே, சரீரதுன்பத்தில் வீணே கிடந்து தடுமாறுகின்றேன், உன்னை முறையாய் வழிபடவும் அறியேன், ஆதலால் என்னறியாமையைநீக்கி யருளுதலாகிய வரமே நீயெனக்குக்கொடுக்கும் வரமாவது என்பது கருத்து. உரி, போர்வை இரண்டும் தொழிலாகு பெயர்கள். ஒன்று என்னும் எண்ணலளவைப் பெயர் சிறுமைப் பண்பையுணர்த்தியது. அதனையடுத்த வும்மை இழிவு சிறப்பு. வழிபாடு முதனிலைதிரிந்த தொழிற்பெயர். பகுதி வழிபடு. சடவாதனையென்றது வாசனுத்திரயத்தி லொன்றாகிய சரீரவாசனையையெனினுமாம். வாரணத்தின் உரியைப் போர்வைகொண்ட செய்தி: பிரமனைநோக்கித் தவஞ்செய்து சிவபிரானொழிந்த மற்றொருவராலும் அழியாவரம்பெற்ற கயமுகாசுரன் என்பவன் சாதுக்களை வருத்திவருகையில் இவனது கொடுமைக்கஞ்சிய முனிவர் காசியிற்சென்று சிவபெருமானை அடைக்கலம் புகவும் அங்குஞ்சென்ற அக்கயமுகாசுரனைச் சிவபிரான் பிரளயகால வுருத்திர வுருவங்கொண்டு உதைத்துத்தள்ளிப் பிடரியைக்கிழித் தோலை உரித்துப் போர்வையாகக்கொண்டனர் என்பது.

(60) வரையாதியற்றியிடு பாவகாரிமறமன்றிவேறுபுரியேன்
விரைமாலை சுற்றுகுழலாரிடத்து மிகவாசைவைத்துமெலிவேன்
கரையாதிருக்கு மனநீகரைத்துனடிபாடவைத்தகதைநான்
உரையானிறைக்கமுடியாது முக்கணுடையாய்களாவி னொளியே.

(இ-ள்.) முக்கண் உடையாய்-மூன்று கண்களையுடையவனே, களாவின் ஒளியே - திருக்களா நீழலில் அமர்ந்த சோதியே, வரையாது - நீக்காமல், இயற்றியிடு - செய்கின்ற, பாவகாரி - பாவத்தை யுடையேன், மறம் அன்றி-அப்பாவத்தையேயன்றி, வேறுபுரியேன்- மற்றொன்றைச் செய்யேன், விரை - மணமுள்ள, மாலை - பூமாலைகளை, சுற்று - சுற்றுகின்ற, குழலாரிடத்து - கூந்தலை யுடையவராகிய மாதரிடத்து, மிக ஆசைவைத்து - மிகவும் விருப்பத்தைவைத்து, மெலிவேன் - இளைப்பேன், கரையாது இருக்கும்மனம் - கரையாம லிருக்கிற என்வன் மனத்தை, நீ கரைத்து-நீ கரையப்பண்ணி, உன் அடிபாட வைத்த - உன் திருவடியைப் புகழ்ந்து பாடும்படியென்னை வைத்த, கதை - சரித்திர மானது, நான் - அடியேன், உரையால் நிறைக்க-என் கவியில் நிறைந்துவைத்தற்கு, முடியாது- முடிவு பெறாது. எ-று.

களாநிழலொளியே; நான் பாவத்தையன்றி வேறொன்றையுஞ் செய்யேன், மாதர்மேலாசைவைத்து மெலிவேன், இப்படியிருந்த என்மனத்தை நீகரைத்து, உன்திருவடியைப் புகழ்ந்து பாடும்படி வைத்தவரலாறானது, என்பாட்டுக் கடங்காது என்பது கருத்து. கரைத்து பிறவினை இறந்தகால வினையெச்சம். இதற்குத் தன்வினை கரைந்து. தன்வினை பிறவினைகளுக்குப் பொதுவாகிய கரை என்னும் இப்பகுதி தன்வினையில் மெல்லொற்றும், பிறவினையில் வல்லொற்றும் பெற்று வருதல் காண்க. உரை செய்யுளை யுணர்த்தலால் கருவியாகுபெயர். நீ என்வன்மனத்தைக்கரைத்து உன்புகழையே பாடும்படி யென்னைவைத்த வரலாற்றைச் செய்யுளிலமைத்துப் பாட எனக்கியலாதென்றற்கு "உரையானிறைக்க முடியாது" என்றார். பாவகாரி-பாவஞ்செய்பவன். கரம்-செய்தல்.

அறுசீர்க்கழி நெடில் ஆசிரிய விருத்தம.

(61) ஒளிமதிமுடித்த வேணியொருவனே கருவையானே
தெளிவுறுநெஞ்சந்தன்னைத் தெருட்டி நின்னிலையைக்காட்டி
அளியினுலென்னையாண்டவருட் குன்றே யுன்னையின்னும்
எளியனேன்பிறவி வேட்டோ வேத்திடா திருக்கின்றேனே.

(இ-ள்.) ஒளிமதிமுடித்த - ஒளியை யுடைய பிறையையணிந்த, வேணி - சடாபாரத்தையுடைய, ஒருவனே - ஒப்பற்றவனே,

கருவையானே - திருக்கருவைப் பதியானே, தெளிவு உறா - தெளிவடையாத, நெஞ்சம் தன்னை - என்மனத்தை, தெருட்டி - தெளிவித்து, நின்நிலையைக் காட்டி - உன் உண்மை நிலையைக்காட்டி, அளியினால் - கிருபையினால், என்னை ஆண்ட - என்னை யாண்டருளின, அருள் குன்றே - கருணை மலையே, எளியனேன் - எளியேன், இன்னும் - இன்னமும், பிறவிவேட்டோ - பிறவிகளை விரும்பியோ, உன்னை ஏத்திடாது இருக்கின்றேன் - உன்னைத் துதியாதிருக்கிறேன். எ-று.

திருக்கருவையானே, உன்னை யான் இன்னும் ஏத்தா திருப்பது இன்னமும் பிறவியை விரும்பித்தானோ என்பது கருத்து. தெருட்டி பிறவினை இறந்தகால வினையெச்சம். தெருள் பகுதி, டு பிறவினைவிகுதி, ளகரம் டகர மானதும், உகரக்கேடும் சந்தி, இவினையெச்சவிகுதி. அருட்குன்று உருவகம்.

(62) இருக்கினு நிற்கும்போது மிரவுகண்டுயிலும்போதும்
பொருக்கென நடக்கும்போதும் பொருந்தியூண்டுய்க்கும்போதும்
முருக்கிதழ்க்கனிவாயாளை முயங்கிநெஞ்சழியும்போதும்
திருக்களாவுடையநம்பா சிந்தையுன்பாலதாமே.

(இ-ள்.) திருக்களா உடைய நம்பா - திருக்களாவை யுடைய நம்பனே, இருக்கினும் - இருந்தாலும், நிற்கும்போதும் - நிற்குங்காலத்தினும், இரவு கண் துயிலும் போதும் - இரவில் கண்ணுறங்கும் காலத்தினும், பொருக்கென நடக்கும்போதும் - விரைவாக நடக்குங் காலத்தினும், பொருந்தி ஊண் துய்க்கும்போதும் - பொருந்தி உணவை யுண்ணுங்காலத்தினும், முருக்கு இதழ் - முருக்கம்பூவின் இதழையும், கனி - கோவைக்கனியையும் போன்ற, வாயாளை - வாயையுடைய மாதரை, முயங்கி - தழுவி, நெஞ்சு அழியும்போதும் - மனமயங்குங்காலத்தினும், சிந்தை - என்மனமானது, உன்பாலது ஆம் - உன்னிடத்ததேயாகும். எ-று.

திருக்களாவுடைய நம்பனே, யான் இருத்தல்நிற்றல் முதலிய எத்தொழில்செய்தாலும் என் மனம் உன்னிடத்ததேயாகும் என்பது கருத்து. "பொருக்கென" விரைவுக்குறிப்புப்பொருளில் வந்தது. சூத்திரம் "வினைபெயர் குறிப்பிசை யெண்பண்பாறினும் - எனவெனுமொழிவரும் என்றுமற்றே" முருக்கு முதலாகுபெயர். பாலது பால் என்னும் இடமடியாகப்பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு வினைமுற்று.

(63) சிந்தனை யுனக்குத்தந்தேன் திருவருளெனக்குத் தந்தாய்
வந்தனையுனக்குத்தந்தேன் மலரடியெனக்குத்தந்தாய்

பைந்துணருனக்குத் தந்தேன் பரகதியெனக்குத் தந்தாய்
கந்தனைப்பயந்தநாதா கருவையி லிருக்குந்தேவே.

(இ-ள்.) கந்தனைப்பயந்தநாதா-முருகவேளையீன்ற தலைவனே, கருவையில் இருக்குந்தேவே - திருக்கருவையி லெழுந்தருளியிருக்கும்தேவனே, சிந்தனை உனக்குத்தந்தேன் - நான் என்மனத்தை உனக்குக்கொடுத்தேன், திரு அருள் எனக்குத்தந்தாய் - நீ உன்திருவருளை யெனக்குக்கொடுத்தாய், வந்தனை உனக்குத்தந்தேன் - நான் என்வணக்கத்தை உனக்குக்கொடுத்தேன், மலர் அடி எனக்குத்தந்தாய்-நீ உன்தாமரைமலர்போலுந் திருவடியை எனக்குக்கொடுத்தாய், பைந்துணர் உனக்குத்தந்தேன்-நான் பசுமையாகியபூங்கொத்தை உனக்குக்கொடுத்தேன், பரகதிஎனக்குத்தந்தாய் - நீ உன்மேலாகிய முத்தியை யெனக்குக்கொடுத்தாய். எ-று.

திருக்கருவைத்தேவனே ; யான் என்மனது முதலியவற்றை யுனக்குக்கொடுக்க, நீ உன்திருவருள்முதலியவற்றை யெனக்குத்தந்தருளினை, நம்மிருவரில் யார்சமர்த்தர் என்பது கருத்து. பயந்த என்னும் இறந்தகாலப்பெயரெச்சம் நாதன் என்னும் செய்பவனாகிய பெயர்கொண்டது. இதன்பகுதிபய.

(64) தேவனேநின்னையல்லாற் பிறிதொருதேவையெண்ணேன்
பாவனைநின்னினல்லாற் பிறிதொருபற்றுமில்லேன்
யாவையுங்காட்டக் கண்டேனென்னுளே நின்னைக்கண்டேன்
காவலகருவையானே யினிமற்றோர் காட்சியுண்டோ.

(இ-ள்.) தேவனே - தேவத்துவமுடையவனே, நின்னை அல்லால் - உன்னையன்றி, பிறிது ஒரு தேவை எண்ணேன் - நான் மற்றொருதெய்வத்தைமதியேன், பாவனைநின்னின் அல்லால் - என்பாவனை உன்னிடத்ததேயன்றி, பிறிது ஒருபற்றும் இல்லேன்-நான்வேறொருபற்றையும் உடையேனல்லேன், யாவையும் காட்டக்கண்டேன் - எல்லாவற்றையும் நீ காட்டக்கண்டு கொண்டேன், என் உள்ளே நின்னைக்கண்டேன் - எனக்குள்ளே உன்னைக்கண்டேன், (ஆதலால்) காவலா - தலைவனே, கருவையானே - திருக்கருவைப்பதியானே, இனிமற்று ஓர்காட்சி உண்டோ - இனிஎனக்குக்காண்டற்குரியதாகிய வேறொருகாட்சியுளதோ. எ-று.

கருவாபுரியானே உன்னையன்றிப் பிறிதொருதெய்வத்தை மதியேன், என்நினைவு உன்னிடத்ததேயன்றி வேறிடத்ததன்று, எல்லாவற்றையும் நீ காட்டக்கண்டேன், என்னுள்ளே உன்னையுங் கண்டேன், ஆதலால், இனி நான் காணவேண்டிய காட்சியொன்றுள

தோ என்பது கருத்து. பிறிது பிற என்னும் இடைச்சொலடியா கப்பிறந்த பெயர்ப்பகு பதம். பிற பகுதி, இ சாரியை, து ஒன்றன் பால் விகுதி, பகுதியின் அகரக்கேடு கடைக்குறை. காவலன்-காத்த லுடையான், காத்தலில் வல்லவன் எனப் பொருள்படுகையால் பொதுமொழியென்க. ஒருமொழியாகக் கொள்ளும்போது கா வல்+அன் எனவும், தொடர்மொழியாகக் கொள்ளும்போது கா+ வலன் எனவும் பிரிக்க. கா முதனிலைத்தொழிற்பெயர். வலன் வன் மை என்னும் பண்படியாகப்பிறந்த பெயர்.

(65) உண்டெனமறைகளோது மொருதனி முதலேநாளும்
அண்டருமுனிவர்தாமுங் காண்கிலரடியேனுன்னைத்
தெண்டிரைவளாக முற்றுந்தேடினேன் றேடித்தேடிக்
கண்டனன்களாவினீழல் கருவைமா நகரத்தானே.

(இ-ள்.) மறைகள் - வேதங்கள், உண்டென ஓதும் - உண் டென்றுசொல்லுகிற, ஒருதனிமுதலே - ஒருஒப்பற்றமுதல்வனே, நாளும் - நாள்தோறும், அண்டரும் - தேவரும், முனிவர்தாமும்- முனிவர்களும், காண்கிலர் - காணுமாற்றலிலர், (அங்ஙனமாக) கரு வைமாநகரத்தானே - திருக்கருவைப்பெரும்பதியை யுடையானே, அடியேன் - அடியனேன், உன்னை - உன்னை, தெண்டிரை - தெளி வாகிய அலைகளையுடைய கடல்சூழ்ந்த, வளாகம் முற்றும் - பூமிமுழு தும், தேடினேன் - தேடினேன், தேடித்தேடி - பலகால் தேடி, களாவின் நீழல்கண்டனன் - திருக்களா நீழலில்கண்டு கொண் டேன், (என் தவப்பயனிருந்தவாறென்னை) எ-று.

கருவைமாநகரத்தானே, தேவர்முதலியோர் காணாதவுன்னை உலக முழுதுந்தேடிக் காணாமல் முடிவில்களா நிழலில் கண்டு கொண்டேன் என்பது கருத்து. தெண்டிரை பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன் மொழித்தொகைக்காரணப் பெயர்.

(66) தானெனவுருவமாகிச் சங்கற்பவிகற் பங்கொண்டு
வானகமாகி மண்ணாய்க் கடல்களாய் மலைகளாகி
ஈனமாமனப்பேய்செய்த விந்திரசாலந்தன்னால்
காணுனையுணரமாட்டேன்களாநிழனண்ணுவானே.

(இ-ள்.) களாநிழல் நண்ணுவானே - திருக்களாநிழலில்பொ ருந்துவோனே, தான் என உருவம் ஆகி - தானென்று உருக்கொ ண்டு, சங்கற்பவிகற்பம் கொண்டு-சங்கற்பவிகற்பங்களை யடைந்து, வானகம் ஆகி - ஆகாயமாகி, மண் ஆய், பூமியாகி, கடல்கள் ஆய்- கடல்களாகி, மலைகள் ஆகி - மலைகளாகி, ஈனம் ஆம் - இழிவாகிய,

மனப்பேய் செய்த - மனமாகிய பேய்செய்த, இந்திரசாலம் தன்னால் - இந்திரசாலத்தால், நான் உன்னை உணரமாட்டேன் - நான் உன்னையறியமாட்டேன். எ-று.

களாநிழலிலெழுந்தருளினவனே, மனப்பேய்செய்த சங்கற்ப விகற்பங்களால், உயர்ந்த பொருளாகிய உன்னை நானறியமாட்டேன் என்பது கருத்து. சங்கற்பவிகற்பங்கள் - நினைப்புமறப்புக்கள். இவை பிறப்பிறப்புக்களுக் கேதுவாதலால் "சங்கற்பவிகற்பங்கொண்டு வானகமாகி மண்ணாய்க் கடல்களாய் மலைகளாகி, ஈனமாமனப்பேய்செய்த விந்திரசாலந்தன்னால் நானுனையறியமாட்டேன்" என்றார். இறைவனையறியாமையால் பிறப்பிறப்புக்களுளவாமென்றதாயிற்று. "இறப்பும் பிறப்பும்பொருந்த, எனக்கெவ்வண்ணம் வந்ததென்றெண்ணி யான்பார்க்கின், மறப்பும் நினைப்புமாய் நின்ற, வஞ்ச, மாயாமனத்தால் வளர்ந்தது தோழீ" என்றார் தாயுமானவரும். மனம் சங்கற்பவிகற்பங்களையடைந்து தன்னை வானக முதலியவாகப் பிறழவுணர்ந்து இறைவனையறியவொட்டாது தடுத்துப் பிறப்பிறப்புக்களை விளைவிக்குமென்பது கருத்து. இந்திரசாலம் - அறுபத்துநான்கு கலைஞானங்களுளொன்று. அது அற்புதங்காட்டும் வித்தை. தானெனவுருவமாதல் - அஹங்கார ரூபமாதல். மனத்தைப் பேய் என்றதற்குதாரணம், ஞானவாசிட்டம். "பாலகனு யஞ்ஞானத் தழுந்தவ னற்காளையாய்ப் பாவைமாரால் - சாலவருந்துவன் விருத்தன்றானுகிக் குடும்பத்தாற்றளர்ந்து சாவன்-மேலவிவனெக்காலத் தென்செய்வான் மாயக்கூத்திருந்தவாறே - ஞாலமெலாமாடரங்காய்ப் பொறிமேளமாய் மனப்பேய் நடிக்குமன்றே."

(67) நண்ணருந்தவங்கள் செய்துநானுடல் வருந்தமாட்டேன்
எண்ணுமைம்புலனுஞ் செற்றங்கிருவினையறுக்கமாட்டேன்
கண்ணகன் ஞாலம்போற்றக்களா நிழலமர்ந்துவாழும்
அண்ணலேயினியெவ்வாறுவடியனேனுய்யுமாறே.

(இ - ள்.) கண் அகல் - இடமகன்ற, ஞாலம்போற்ற - உலகிலுள்ளார் வணங்கும்படி, களாநிழல் அமர்ந்துவாழும் - திருக்களாநிழலைவிரும்பி அதன்கண்ணே வாழ்கின்ற, அண்ணலே-பெரியோனே, நான் - அடியேன், நண் அருதவங்கள்செய்து - பொருந்துதற்கரிய தவங்களைச்செய்து, உடல்வருந்தமாட்டேன் - சரீரம் வருந்தமாட்டேன், எண்ணும் - எண்ணுதற்குரிய, ஐம்புலனும்செற்று-ஐம்புலன்களையும்வென்று, அங்கு-அது கருவியாகக்கொண்டு, இருவினை

அறுக்கமாட்டேன்-இருவினைகளைச் சேதிக்கமாட்டேன், இனி-இனி, அடியனேன் உயயும் ஆறு - அடியேன் உய்யும்விதம், எவ்வாறோ-எவ்விதமோ. எ-று.

திருக்களாநிழலில் எழுந்தருளியிருக்கிற அண்ணலே, நான் உடல்வருந்தத் தவஞ்செய்யேன், ஐம்புலன்களை வென்று இருவினைகளையறுக்கவுமாட்டேன், இனி அடியேன் எவ்வாறு உய்வேன் என்பது கருத்து. ஞாலம் இடவாகுபெயர், அண்ணல் பண்பாகுபெயர். செற்று இறந்தகாலவினையெச்சம். செறு பகுதி, உ வினையெச்சவிகுதி, பகுதி ஒற்றிரட்டி இறந்தகாலங்காட்டியது. இப்பகுதியினடியாக செறுதல், செறல் எனத் தொழிற்பெயரும் செறுநர் எனத் தொழிலடியாகப்பிறந்த பெயர்ப்பகுபத முதலியவும் பிறத்தல்காண்க. இருவினை-நல்வினை தீவினைகள். நல்வினையும் பிறத்தற்கேதுவாகலின், "இருவினை அறுக்கமாட்டேன்" என்றார். இருவினை என்பதனீற்றில் முற்றும்மை தொகுத்தல். இருவினை என்பதனீற்றில் முற்றும்மைவேண்டும் என்பதற்குச் சூத்திரம். "இனைத்தென்றறிபொருள் உலகினிலாப்பொருள் - வினைப்படுத்துரைப்பினும்மை வேண்டும்". முத்தியடையவேண்டினோனுக்கு இருவினையும் அறவேண்டும் என்றற்கு "இருள்சேரிரு வினையுஞ் சேராவிறைவன் - பொருள்சேர் புகழ்புரிந்தார்மாட்டு" என்றார் திருவள்ளுவரும்.

(68) உய்யவொருறுதிநாடா வுலகினிற்சமயமென்னும்
வெய்யவார்கலியில் வீழ்ந்து வெந்துயருழக்கின்றேற்குத்
தையலோர்பாகம் வைத்துத்தண்டமிழ்க்கருவைவாழும்
ஐயன்வந்தாண்டுகொண்ட ததிசயம் விளைக்குமாறே.

(இ-ள்.) உய்ய-உய்தற்பொருட்டு, ஓர் உறுதிநாடா-ஒரு உறுதியையும் ஆராயாத, உலகினில் - உலகத்தில், சமயம் என்னும்-சமயமென்கிற, வெய்ய ஆர்கலியில்வீழ்ந்து - கொடியகடலில்விழுந்து, வெந்துயர் உழக்கின்றேற்கு - கொடுந்துன்பத்தால் வருந்துகின்ற எனக்கு, தையல் ஓர்பாகம்வைத்து - உமாதேவியாரை ஒருபங்கில் இருத்தி, தண்தமிழ்க்கருவைவாழும் - தண்ணியதமிழ்வழங்குகின்ற கருவாபுரியில்வாழ்கின்ற, ஐயன்-இறைவன், வந்து-தானேயெழுந்தருளி, ஆண்டுகொண்டது - ஆண்டுகொண்டதாகியசெய்தி, அதிசயம்விளைக்கும் ஆறு - எனக்கு வியப்பையுண்டாக்குமாறென்னே.

உய்யும்வழியை ஆராயாத சமயக்கடலில்விழுந்து கொடிய துன்பத்தை யநுபவிக்கிற எனக்கு கருவைவாழும் ஐயன்வந்து என்னையாண்டுகொண்டசெய்தி அதிசயத்தை யுண்டாக்காநின்றது என்பது கருத்து. சமயவாதிகள் ஒவ்வொருவரும் தத்தம் மதங்களி

லன்றி முத்தியில்லையென்று சாதித்து மனங்கலங்கச்செய்வர் ஆதலி ன் "சமயமென்னும் வெய்யவார்கலியில் வீழ்ந்து" என்றார். இதனை "சமயவாதிக டத்தமதங்களே, அமைவதாக வரற்றி மலைந்தனர்" என்னும் வாதவூரடிகள் திருவாக்கானுமுணர்க. வெய்ய குறிப்புப் பெயரெச்சம். ஆர்கலி வினைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொ ழித்தொகைக் காரணப்பெயர். தையல் - (அழகு) பண்பாகுபெயர்.

(69) அதிசயமுளத்திற்காட்டி யகம்புறந்தானக்காட்டித்
துதிசெயக்கவிநாக்காட்டித் தொடக்கறுநேயங்காட்டி
மதியினிற் களிப்புங்காட்டி வந்தெனை யாண்டுகொண்டான்
கதியெனவுலகம் போற்றக் களாநிழலமர்ந்தநாதன்.

(இ-ள்.) உலகம் - உலகத்தார், கதியெனப்போற்ற-தமக்குக் கதியென்று வணங்கும்படி, களாநிழல் அமர்ந்தநாதன் - திருக்களா நிழலிலெழுந்தருளிய இறைவன், உள்ளத்தில்-என்மனத்தில், அதி சயம்காட்டி-வியப்பையுண்டாக்கி, அகம்புறம் தான் ஆ காட்டி-உள் ளும் புறமும் தானாகத் தோற்றுவித்து, துதிசெய்ய - தன்னைத்துதிக் கும்பொருட்டு, நா கவிகாட்டி-என்நாவினிடத்துக் கவிகளைத் தோற் றுவித்து, தொடக்கு அறுநேயம்காட்டி-தொடர்பு நீங்காத அன்பை என்னிடத்துத் தோற்றுவித்து, மதியினில் களிப்பும் காட்டி - என் னறிவின்கண் களிப்பையும் உண்டாக்கி, வந்து - தானேயெழுந் தருளி, என்னை ஆண்டு கொண்டான் - என்னை யாண்டருளினன்.

களாநிழல் அமர்ந்த இறைவன் எழுந்தருளி, அதிசய முதலிய வற்றைக்காட்டி என்னை யான்டருளினன் என்பதுகருத்து.

(70) நாதனேகவிஞனேவ நள்ளிருட்போதிற்சென்ற
தூதனே யிமயவல்லி துணைவனே கருவையானே
போதநேயத்தினலுன் பொலன்கழற்றொண்டுபூண்டும்
ஏதநீயகற்றிடாமலிருப்பது மிசையதாமோ.

(இ-ள்.) நாதனே - தலைவனே, கவிஞன் ஏவ - புலவனாகிய சுந்தரன் ஏவ, நள் இருள்போதில்சென்ற - அர்த்தயாமத்திற்சென்ற, தூதனே - தூதனே, இமயவல்லி துணைவனே-இமயமலையிற் பிறந்த கொடிபோல்பவளாகிய உமாதேவிக்கு நாயகனே, கருவையானே- திருக்கருவைப் பதியானே, போதநேயத்தினல்-மிகவும் அன்பினல், உன் - உனது, பொலன்கழல் தொண்டுபூண்டும் - பொன்போலும் திருவடியின் தொண்டுபூண்டும், ஏதம் - என் துன்பங்களை, நீ அகற்றி டாமல் இருப்பதும் - நீ நீக்கி யருளாதிருப்பதும், இசையதாமோ- உனக்குப் புகழாகுமோ. எ-று.

தூதுசென்றது . அடியாராகிய சுந்தரமூர்த்தி நாயனாருடைய எண்ணத்தை முடிக்கும்பொருட்டுத் திருவாரூரில் பரவையென்பவளுடைய பிணக்குத் தீர்க்கச்சென்றது. திருக்கருவைப்பதியானே, நான் உன்திருவடித்தொண்டுபூண்டும், நீ என்துன்பங்களை நீக்காதிருப்பது உனக்குப் புகழாகுமோ என்பது கருத்து.

கலிவிருத்தம்.

(71) இசையுஞ் செல்வமுந் திருவு மின்பமும்
அசைவிலாத பேரறிவு முத்தியும்
விசையமுந்தருங் கருவை மேவினோன்
திசையுடுத்தவன் சீர்படிக்கவே.

(இ-ள்.) கருவைமேவினோன் - திருக்கருவாபுரியில் எழுந்தருளினவனும், திசை உடுத்தவன்-திக்காகிய ஆடையையுடுத்தவனுமாகிய சிவபெருமானது, சீர் - புகழை, படிக்கவே - படித்தமாத்திரத்திலே, இசையும் - கீர்த்தியையும், செல்வமும் - பாக்கியத்தையும், திருவும்-அழகையும், இன்பமும் - சுகத்தையும், அசைவு இல்லாத-சலித்தலில்லாத, பேர் அறிவும் - ஞானத்தையும், முத்தியும்-மோக்ஷத்தையும், விசையமும் - வெற்றியையும், தரும் - (அவன்) தந்தருளுவன். எ-று.

திருக்கருவைநாயகனது புகழைப்படித்தமாத்திரத்தில் அவன் கீர்த்தி முதலிய எல்லாப்பொருள்களையுந் தந்தருளுவன் என்பது கருத்து. விசையம் என்பதில் அகரத்துக்கு ஐகாரம் போலி, சூத்திரம். "அ ஐ முதலிடையொக்குஞ் சஞபமுன்."

(72) படியளந்தவன் பதுமவேதியன்
அடிமுடித்தல மறியொ ணாதவன்
கடிகொண் மாமலர்க் களவினீழலான்
குடியிருக்கவென் னெஞ்சுகோயிலே.

(இ - ள்.) படி அளந்தவன் - பூமியையளந்தவனாகிய திருமாலும், பதுமவேதியன்-தாமரைமலரிலிருக்கிற பிரமனும், அடிமுடித்தலம் - திருவடி திருமுடியென்பவற்றை, அறி ஒணாதவன் - அறியவொண்ணாதவன், கடி கொள் - மணத்தைக்கொண்ட, மாமலர்-அழகிய மலர்களையுடைய, களவின் நீழலான் - திருக்களாநிழலையுடையவன், (அவன்) குடியிருக்க - குடியிருத்தற்கு, என்னெஞ்சு - என் மனமே, கோயில் - திருக்கோயிலாகும். எ-று.

களாநிழலையுடையவன் குடியிருத்தற்கு என்மனமே திருக்கோயிலாகும் என்பது கருத்து. கடி புலகுணந் தழுவிய உரிச்

சொல். சூத்திரம். நன்-உரி-16. கோயில் இலக்கணைப்போலி, இலக்கணமுடையதுகோவில். கோ-கடவுள். இல் - வீடு. படியளந்த செய்தி :—திருமால் மகாபலியை வலியடக்கும்பொருட்டு வாமரூபங்கொண்டுசென்று, அவனை மூவடிமண் இரந்து, அவன் கொடுக்க இசைந்தபிறகு திரிவிக்ரமரூபமாகி, மண்ணையும் விண்ணையும் இரண்டடியாலளந்து, மற்றோரடிக்கிடாக அவன் தலையில் அடியை வைத்துப் பாதலம் புக்கு அழுந்தப்பண்ணினார் என்பது. திருமாலும் பிரமனும் அடிமுடித்தலம் அறியாதசெய்தி :—முன்னொருகாலத்தில் பிரமவிஷ்ணுக்கள் நான் பெரியன் நான்பெரியன் என்று வாதிட்டபோது அவர்கள் இறுமாப்பையடக்கச் சிவபெருமான் நெருப்புமலையாய் இருவர்க்கு மிடையேதோன்றி, நும்மிருவரில் ஒருவர் இதன் அடியையும், மற்றொருவர் முடியையும் காணவல்லீரேல் அவரே பெரியர் என்றுரைக்க, திருமால் நான் அடியைக்கண்டுவருகிறேனென்று வராகவுருக்கொண்டு நிலம் கீண்டுசென்றும், பிரமன் அன்னவுருக்கொண்டு முடியைக் காணச்சென்றும் காணவலியற்றவர் ஆயினர் என்பது.

(73) கோயில்சூழவுங் குடங்கைகொட்டவும்
வாயிற்பாடவும் வணங்கியாடவும்
ஆயிரம்பெயர்க் கருவையாதிபன்
நேயமுற்றுவாழ் தொண்டர்நேர்வரே.

(இ-ள்.) ஆயிரம்பெயர் - ஆயிரத் திருநாமங்களையுடைய, கருவை ஆதிபன் - திருக்கருவையிறைவனது, நேயம் உற்றுவாழ்-அன்பைப்பொருந்திவாழ்கின்ற, தொண்டர்-அடியார், கோயில்சூழவும்-அவனது திருக்கோயிலை வலம்வரவும், குடங்கைகொட்டவும்-அகங்கையைக்கொட்டவும், வாயின்பாடவும் - (அவனை) வாயினாற்பாடவும், வணங்கி ஆடவும் - (அவனைத்) தொழுதுகூத்தாடவும், நேர்வர் - பெறுவர். எ-று.

கருவையாதிபனுடைய தொண்டர், கோயில்சூழ்தல் முதலியவற்றையுடையராவர் என்பது கருத்து. ஆயிரம்பெயரை வடமொழியில சஹஸ்ரநாமம் என்பர். குடங்கை-குடம்போலக் குவிந்தகை.

(74) நேர்ந்தநெஞ்சமே நெடிதுவாடிநீ
சோர்ந்ததுன்பமுந் துயரும்போக்குவான்
வார்ந்தசெஞ்சடைக் கருவைவானவன்
ஆர்ந்தபேரரு ளருவியாடவே.

(இ-ள்.) நேர்ந்தநெஞ்சமே-எனக்குடன்பட்ட மனமே, வார்ந்த-நீண்ட, செஞ்சடை - செவந்த சடாபாரத்தையுடைய, கருவை

வானவன்-திருக்கருவையில்வாழ்கின்ற தேவன், ஆர்ந்தபேர் அருள்-நிறைந்த பெரிய அருளாகிய, அருவி ஆட-அருவியிற்குளிக்கும்படி, நீ நெடிது வாடி சோர்ந்த துன்பமும் துயரும் - நீ மிகவும் வாடிச் சோர்ந்த துயரத்தையும் துக்கத்தையும், போக்குவான் - நீக்கியருளுவான். எ-று.

மனமே, கருவாபுரித்தேவன், நமது துயரத்தைப்போக்கித் தனது பேரருளாகிய அருவியில் மூழ்குவிப்பன் என்பது கருத்து. வார்ந்த இறந்தகால வினையெச்சம். வார் பகுதி, த் இறந்தகால இடைநிலை, த் சந்தி, தகரம் நகரமானது மெலித்தல் விகாரம், அ பெயரெச்சவிகுதி, இப்பெயரெச்சம் செய்பவனாகிய சடையென்னும் பெயர்கொண்டது. நெடிது பண்படியாகப்பிறந்த குறிப்பு வினையெச்சம். நெடுமை பகுதி, மைகெட்டதும் உகரம் இகரமாகத்திரிந்ததும் சந்தி, த் எழுத்துப்பேறு, உ வினையெச்ச விகுதி.

(75) ஆடுமெட்கலத்திகிரி யொத்தலைந்
தோடுநெஞ்சமுங் கவலையோர்ந்துனை
நாடுமோதமிழ்க் கருவைநம்பனே
ஏடுசோமலர்க் களவிலீசனே.

(இ-ள்.) தமிழ்க்கருவைநம்பனே-தமிழ்க்கருவாபுரி நம்பனே, ஏடுசேர்மலர் - இதழ்கள்பொருந்திய மலர்களையுடைய, களவில் ஈசனே - களாநிழலி லமர்ந்த ஈசனே, ஆடும் - சுழல்கின்ற, மட்கலம்-மட்கலங்களை வனைகின்ற, திகிரி ஒத்து-குயவனது சக்கரத்தின் சுழல்கையை நிகர்த்து, அலைந்து ஓடும் நெஞ்சமும் - அலைந்து விடயங்களில் விரைந்து செல்லுகின்ற என்மனமும், கவலை-(தானனுபவிக்கும்) கவலைகளை, ஓர்ந்து - ஆராய்ந்து, உன்னைநாடுமோ-உன்னை விரும்புமோ. எ-று.

கருவை நம்பனே, குயவனது திரிகைபோலச் சுழலாநின்ற என்மனமும் உன்னைநாடுமோ என்பது கருத்து. விடயங்களாவன:- சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பன.

(76) ஈசனேயிடத்திமய வல்லியின்
நேசனேயியற் கருவைநித்தனே
பூசியேனுனைப் புனிதவாகமம்
வாசியேன்பிறப் பென்றுமாயுமே.

(இ-ள்.) ஈசனே - ஈச்சுரனே, இடத்து-உன் இடப்பாகத்திலிருக்கிற, இமயவல்லியின் - உமாதேவியின், நேசனே - அன்பனே, இயல்-பொருந்திய, கருவைநித்தனே - திருக்கருவையில்வாழ்கின்ற

அழிவில்லாதவனே, உன்னைபூசியேன் - நான் உன்னைப் பூசனைபுரியேன், புனிதம் - பரிசுத்தமாகிய, ஆகமம் - சிவாகமங்களை, வாசியேன் - படியேன், பிறப்பு - என்பிறவியானது, என்றுமாயும் - எக்காலத்தில் நசிக்கும். எ-று.

திருக்கருவைசித்தனே, நான் உன்னைப் பூசனைபுரியேன், உன் சிவாகமங்களையும் படியேன், என்பிறவி என்று நசிக்கும் என்பது கருத்து. ஆகமம்—காமிகம், யோகசம், சிந்தியம், காரணம், அசிதம் முதலிய இருபத்தெட்டாம். தக்கன் தன் புத்திரியாகிய தாக்ஷாயணியையும், அவள் நாயகனாகிய சிவபெருமானையும் அவமதித்து யாகஞ்செய்ய, இறைவி அதுபொறாமல் சிவபிரானைக்கொண்டு அந்த யாகத்தை அழித்து, தன்னை அத்தக்கன் மகளென்று பிறர் சொல்லக்கேட்கும் கருத்தில்லாதவளாய் அவ்வுடலைத்துறந்து இமயமலையின் பொய்கையில், ஓர் இளங்குழந்தையாய்த்தோன்றி, அம்மலையரசனால் வளர்க்கப்பட்ட காரணத்தால் இமயவல்லி எனப் பெயர் பெற்றனள்.

(77) பிறவிமாயவு மருள்பெருக்கவும்
துறவியாய்வனந் துன்னல்வேண்டுமோ
இறைவனெம்பிரான் களவிலீசனென்
றறையுமுன்னமே யனைத்துமெய்துமே.

(இ-ள்.) பிறவிமாயவும்-பிறவி அறுகைக்கும், அருள்பெருக்கவும் - இறைவனது திருவருள் மிகுதியும் உண்டாகைக்கும், துறவி ஆய் - துறவியாகி, வனம்துன்னல்வேண்டுமோ - ஆரணியத்தையடையவும் வேண்டுமோ (வேண்டா), இறைவன் - தலைவன், எம்பிரான்-எம்பெருமான், களவில் ஈசன் - திருக்களாநிழலிலெழுந்தருளிய ஈச்சுரன், என்று அறையும் முன்னமே - என்றுசொல்லுதற்கு முன்பே, அனைத்தும் - எல்லாநன்மைகளும், எய்தும்-கிடைக்கும்.

பிறவியறுதற்கும் திருவருள்பெருகுதற்கும், துறவடைந்துவனத்துக்குச் செல்லவேண்டுமோ, வேண்டா, களவீசனேயென்று சொல்வதற்குமுன்பே எல்லா நன்மைகளும் தாமேயுண்டாமென்பது கருத்து. துறவி ஆண்பாற்படர்க்கைப்பெயர். துற பகுதி, இ ஆண்பாற்படர்க்கை விகுதி, வ் சந்தி. இவ்விகுதி ஆண்பால், பெண்பால், ஒன்றன்பால்களுக்குப் பொதுவென வறிக. பெருக என்பது சந்தவின்பப்பொருட்டு விரித்தல் பெற்றது.

(78) எய்தியென்செயுங் கருவையெம்பிரான்
கொய்யுநாண்மலர்க் கொன்றைவேணியான்
செய்யபாதமென் சென்னிவைக்கவே
வெய்யகூற்றுவன் வீசுபாசமே.

(இ-ள்.) கருவை எம்பிரான்-திருக்கருவையில் எழுந்தருளிய எம்பெருமானும், கொய்யும்-பறிக்கப்படுகிற, நாள்மலர்கொன்றை-புதிய கொன்றைமலர் மாலையையணிந்த, வேணியான் - சடாபாரத்தையுடையவனுமாகிய சிவபெருமான், செய்யபாதம் - தன்செவந்த திருவடியை, என்சென்னிவைக்கவே-என் சிரசின்மீது வைத்தளவே, வெய்யகூற்றுவன் - கொடுமையாகிய யமன், வீசுபாசம்-எறிகின்ற பாசக்கயிறுனது, எய்தி - என்னிடத்துவந்து, என்செய்யும் - என்னதுன்பத்தை எனக்குண்டாக்கும். எ-று.

திருக்கருவையெம்பெருமான், தனது திருவடியை யென்சிரமீது வைக்கவே, கூற்றுவன் வீசுகின்ற பாசம்வந்து என்னை யென்செய்யவல்லது என்பது கருத்து. செய்ய, வெய்ய குறிப்புப்பெயரெச்சங்கள். என்செய்யும் இரண்டாம்வேற்றுமைத் தொகை. என் வினைப்பெயர்.

(79) பாசநீக்கிமூ வகைப்பசுக்களை
மாசின்முத்தியாம் வனத்தின்மேய்த்திடும்
ஈசன்மின்னனோ ரிடைச்சிகாதலன்
ஆசில்பால்வணத் தண்டர்நாதனே.

(இ-ள்.) ஈசன்-ஈசனும், மின்னனேர் - மின்னற்கொடியை நிகர்த்த, இடைச்சி - இடையையுடையவளாகிய உமாதேவிக்கு, காதலன் - அன்பனும், ஆசு இல் - குற்றமில்லாத, பால்வணத்து-வெண்ணிறத்தையுடைய, அண்டர்நாதன்-தேவர்பிரானுமாகிய சிவபெருமான், பாசம்நீக்கி-பஞ்சபாசத் தடைகளைப்போக்கி, மூவகைப்பசுக்களை-மூவகையாகிய பசுக்களை, மாசு இல்-குற்றமில்லாத, முத்தி ஆம்வனத்தில் மேய்த்திடும் - மோக்ஷமாகிய காட்டில மேய்ப்பன்.

இடைச்சி சினையடியாகப்பிறந்த பெண்பாற்படர்க்கைப்பெயர்; இடை பகுதி, ச் பெயரிடை நிலை, ச் சந்தி, இ பெண்பால்விகுதி. பஞ்சபாசங்களாவன :—ஆணவம், கன்மம், சுத்தமாயை, அசுத்தமாயை, திரோதாயி. மூவகைப்பசுக்களாவார் - சகலர், பிரளயாகலர், விஞ்ஞானகலர். சகலர் - ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலமுடையார். பிரளயாகலர் - ஆணவம், கன்மம் என்னும் இருமலமுடையார். விஞ்ஞானகலர் - ஆணவமென்னும் ஒருமலமுடையார். அண்டர் நாதன் - இடையர்தலைவன். இதற்கேற்க உமாதேவியை இடைச்சியென்றார். பாசம்-தாம்பு. நீக்கல் - அவிழ்த்தல். பசுக்கள்-ஆக்கள். இறைவனுகிய இடையன் சகலர் முதலியோராகிய மூவகைப்பசுக்களைப் பஞ்சபாசத்தளைகளாகிய கயிற்றினின்றும் அவிழ்த்து, முத்தியாகிய காட்டில் மேய்ப்பன என்பது கருத்து. இது உருவகவணி.

(80) அண்டகோளமு மகிலலோகமும்
மண்டுசெந்தழல் வடிவமானவன்
முண்டகக்கழற் கருவைமூர்த்தியைக்
கண்டகண்ணிணை களிதுளங்குமே.

(இ-ள்.) அண்டகோளமும் - அண்டகோளத்திலும், அகில லோகமும் - எல்லா உலகங்களிலும், மண்டு - மிகுந்த, செம்தழல் வடிவம் ஆனவன்-செம்மையாகிய நெருப்புருவமாய் நின்றவனாகிய, முண்டகம்கழல் - தாமரைமலர்போன்ற திருவடியையுடைய, கரு. வைமூர்த்தியை - திருக்கருவாபுரி மூர்த்தியை, கண்ட கண் இணை- பார்த்த கண்களிரண்டிலும், களி துளங்கும்-களிப்பு மிகும். எ-று.

திருக்கருவை நாதனைக்கண்ட என்கண்கள்களிப்பு மிகும் என்பதுகருத்து. செந்தழல்வடிவம் ஆனசெய்தி 72-ஆம் செய்யுளுரை யிற்காண்க.

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

(81) துளங்குநெஞ்சமேதுயருறு வகையொன்றுசொல்வேன்
வளங்கொள்செந்தமிழ்க் கருவையம்பெரும்பதிமருவி
விளங்குபாணிறமேனியன் றிருவடிதொழுதால்
அளந்துகாண்பருந்துறக்கவாழ் விம்மையிலளிப்பான்.

(இ-ள்.) துளங்கும் நெஞ்சமே-அலையாநின்ற மனமே, துயர் உறுவகை - நாம் துன்பமடையாவகை, ஒன்று சொல்வேன் - ஒரு உபாயத்தைச் சொல்லுவேன், வளம் கொள் - வளத்தைக்கொண்ட, செந்தமிழ்-செந்தமிழ் வழங்குகின்ற, கருவை அம்பெரும்பதி மருவி- திருக்கருவையாகிய பெரியதலத்தை யடைந்து, விளங்கு-விளங்கு கின்ற, பால்நிறம் மேனியன் - பால்வண்ணனது, திருவடி தொழு தால் - திருவடியை வணங்கினால், (அவன்) அளந்து காண்பு அரு- அளவிட்டு எல்லைகாண் பதற்கரிதாகிய, துறக்கவாழ்வு-சுவர்க்க போ கத்தை, இம்மையில் அளிப்பான், இம்மையிற்றானே கிருபை செய் வான். எ-று.

மனமே, கருவைப்பதியிற் பால்வண்ணனது திருவடியைத் தொழுதால், அவன் நமக்கு இம்மையிற்றானே அளவிடுதற்கருமை யாகிய சுவர்க்கவாழ்க்கையைக் கிருபைசெய்வன் என்பது கருத்து. தமிழைவளர்த்த பாண்டியர்களுக்கும் சங்கப்புலவர்களுக்கும் உறை விடமாகிய பாண்டிநாட்டிலுள்ள தாகையால் "செந்தமிழ்க்கரு வையம்பெரும்பதி" என்றார். செந்தமிழ் என்பதில் செம்மை பிறி தினியைபு நீக்கிய விசேடணம். அடி பண்பாகுபெயர். காண்பு தொ ழிற்பெயர்.

(82) இம்மையின்பமுமிறுதியின் முத்தியுமளிக்கும்
நம்மையாளுடைநாயகன் கருவைநன்னகரில்
கொம்மைவெம்முலைக் கொடியொடுமினிதுவீற்றிருக்க
விம்மிமானிடர்வெந்துய ருழப்பதென்விரகே.

(இ-ள்.) இம்மை இன்பமும் - இம்மையில் இன்பங்களையும், இறுதியில் முத்தியும் - முடிவுக்காலத்தில் மோக்ஷத்தையும், அளிக்கும் - கொடுத்தருள்கிற, நம்மை ஆள்உடைநாயகன் - நம்மை அடிமைகளாகவுடைய இறைவன், கருவை நல்நகரில் - திருக்கருவையாகிய நல்ல நகரின்கண், கொம்மை - திரட்சியாகிய, வெம்முலை - விருப்பத்தைத்தருகிற தனங்களையுடைய, கொடியொடும் - கொடிபோல்வாளாகிய உமாதேவியோடும், இனிது வீற்றிருக்க - இனிதாக வீற்றிருக்கையில், மானிடர் - மனிதர், விம்மி - அழுது, வெம் துயர் உழப்பது - கொடிதாகிய துன்பத்தை யநுபவிப்பது, என்விரகு - என்ன சதுரப்பாடு. எ-று.

இம்மையி லின்பத்தையும் மறுமையில் முத்தியையுங் கொடுக்கக் கருவாபுரி யிறைவனிருக்க, அவனையடைந்து அவற்றைப்பெறாமல் மாந்தர் துயரமடைவதற்குக் காரணம்யாது என்பது கருத்து. கொடி உவமையாகுபெயர். உழப்பது - மனக்கலக்க முறுதல். உழைப்பது - மெய்வருந்தத் தொழில்செய்தல்.

(83) விரகினாற்சிலர்செய்திடும் வினைகளுமுண்டோ
மருவியம்பரமறைந்துநின் றூட்டுவான்போல
உரககங்கணக்கருவையா னொருவனின்றூட்டப்
பரவைசூழ்நிலமன்பதைப் பரப்பெலாநடிக்கும்.

(இ-ள்.) விரகினால்-தமதுஉபாயத்தால், சிலர்செய்திடும் வினைகளும் உண்டோ - சிலர்செய்யுந் தொழில்களுமுண்டோ, அம்பரம் மருவிமறைந்து நின்று - ஆகாயத்திற் பொருந்தி மறைந்து நின்று, ஆட்டுவான்போல - ஆட்டுகின்றவன்போல, உரககங்கணம் - சர்ப்ப கங்கணத்தையணிந்த, கருவையான் - திருக்கருவைப் பதியானாகிய, ஒருவன் நின்று ஆட்ட - ஒருவன்நின்று ஆட்டுதலால், பரவைசூழ் நிலம் - கடல்சூழ்ந்த நிலவுலகத்திலுள்ள, மன்பதைப்பரப்பு எல்லாம் நடிக்கும் - மக்கட்பரப்பெல்லாம் ஆடும். எ-று.

ஒருவன்மறைந்து நின்று ஆட்ட ஆடும் பிரதிமையைப்போல, இறைவன் ஆட்ட உலகத்துயிர்களெல்லாம் ஆடும் என்பது கருத்து. உரகம்-மார்பால் நகர்வது. பரவைதொழிலாகுபெயர். பர பகுதி, வை தொழிற்பெயர்விகுதி, பரவைசூழ் என்பதை எழுவாய்த்தொடராகக்கொள்ளின் உயிர் 26 - ஆம் சூத்திரப்படி இயல்பாயிற்றென்

றும், மூன்றும்வேற்றுமை யுருபும் பயனுமுடன் றொக்க தொகை யாகக்கொள்ளின், உருபு - 17-ஆம். சூத்திரத்தின்படி இயல்பாயிற் றென்றும்கொள்க. மன்பதைப்பரப்பு தொழிற்பண்புத்தற் கிழமைப்பொருளதாகிய ஆறும்வேற்றுமைத்தொகை நிலைத்தொடர்.

(84) நடித்ததாள்களுநகைமணி முறுவலுமுகமும்
பொடித்தவேர்வெழும் புருவமுமருள்விலோசனமும்
முடித்ததண்பிறைவேணியு முகலிங்கன்மழுமான்
பிடித்தசெங்கையுங்காண்பவர் புவியிடைப்பிறவார்.

(இ - ள்.) முகலிங்கன் - முகலிங்கனது, நடித்த தாள்களும் - நடனஞ்செய்த திருவடிகளையும், நகைமணிமுறுவலும் - ஒளியுள்ள அழகிய புன்னகையையும், முகமும் - திருமுகத்தையும், பொடித்த - அரும்பிய, வேர்வு எழும்புருவமும் - வெயர்வையுண்டாகின்ற புருவத்தையும், அருள்விலோசனமும் - கருணையுள்ள திருக்கண்களையும், முடித்த தண்பிறைவேணியும் - முடிக்கப்பட்ட குளிர்ச்சியாகிய பிறையையணிந்த சடாபாரத்தையும், மழுமான்பிடித்த செங்கையும் - மழு மான் என்பவைகளைப்பற்றிய செங்கைகளையும், காண்பவர் - தரிசிப்பவர், புவியிடைபிறவார் - உலகத்தில் பிறவார்கள்.

முகலிங்கனுடைய, நடன சரணமுதலியவற்றைக்கண்டு சேவிப்பவர், உலகத்தில் இனிப்பிறவார் என்பது கருத்து. சிவபெருமான் திருநடனஞ்செய்தருளியது கைலாயத்தில் தேவர்களுக்காகவும், திருவாலங்காட்டில் காளிக்காகவும், சிதம்பரத்தில் பதஞ்சலி பகவான் வியாக்கிரபாதமுனிவர்களுக்காகவும், மதுரையில் தடாதகைப்பிராட்டியாரது திருக்கலியாண மகோற்சவத்துக்குவந்த மேற்சொல்லிய முனிவர்களுக்காகவும் என்றறிக. புன்னகைபுரிந்தது திரிபுரதகனத்தின் பொருட்டென்க.

(85) பிறந்தயாக்கைகளளப்பில பெருங்கடற்புவிக்குள்
இறந்துபோயவல்லாலவற் றெய்தியதுண்டோ
கறந்தபானிறவண்ணனைக் கருத்துறவிருத்திச்
சிறந்தயாக்கையீதிதற்குநான் செய்வதுமுளதோ.

(இ - ள்.) பெருங்கடல்புவிக்குள் - பெரியகடல்சூழ்ந்த உலகினுள், பிறந்தயாக்கைகள் - நான்பிறந்த சரீரங்கள், அளப்புஇல - அளவையுள்ளனவல்ல, (அவையாவும்) இறந்துபோய அல்லால் - இறந்து போயினவன்றி, அவற்று - அவைகளால், எய்தியது உண்டோ - நானடைந்தபயன் யாதாயினும் உளதோ, கறந்த பால் நிறவண்ணனை - கறந்த பாலினது நிறம்போலும் நிறத்தையுடைய சிவபிரானை, கருத்து உற இருத்தி - என் மனத்திற்பொருந்த இருத்தி, சிறந்த

யாக்கை ஈது - மேன்மையடைந்த சரீரமிது, இதற்கு-இதன்பொருட்டு, நான் செய்வதும் உளதோ - யான் செய்தற்குரிய கைம்மாறும் உளதோ. எ-று.

இதுவரையில் நான் பிறந்த பிறவிகள் அளவற்றன, அவற்றுள் ஒன்றும் நின்றில, அவற்றுலொருபயனுமின்று, இந்தப்பிறவி கருவைப்பால்வண்ணனைக் கருத்திலிருத்தி உய்தற்கேதுவாயிறறு, இதற்கு யான் செய்யுங் கைம்மாறு முணடோ வென்பது கருத்து. யாக்கை தொழிலாகுபெயர். அன்றிச் செயப்படு பொருளுணர்த்தும் ஐகாரவீற்றுத் தொழிலடியாகப்பிறந்த பெயரொன்னினுமாம், பகுதி-யா. இறந்துபோய ஒரு சொல்லின் தன்மைப்பட்ட இறந்த காலப் பலவின்படர்க்கை வினைமுற்று. இறந்துபோபகுதி, ய் இறந்த கால விடைநிலை, அ பலவின்பால் வினைமுற்று விகுதி. எய்தியது ஒன்றன்பாற்படர்க்கை இறந்தகால வினையாலணையும்பெயர் .எ-று.

(86) உளதில்லதென்றுரைத்திடும் பொருளையுய்த்துணராக்
கள்ளர்நாவினிலிருந்திடாக் களாநறுங்கனியைத்
தெள்ளுசெந்தமிழ்க் கருவையிற்சினகரம்புகுந்து
மெள்ளநான்சென்று காண்டலுந்தீர்ந்தது விடாயே.

(இ-ள்.) உள்ளது இல்லது என்று உரைத்திடும் பொருளை - உளதென்றும் இலதெனறுஞ் சொல்லப்படுகிற பொருளை, உய்த்து உணரா - ஆராய்ந்தறியாத, கள்ளர் நாவினில் - வஞ்சகருடைய நாவினிடத்து, இருந்திடா - தங்கியிராத, களாநறுங்கனியை - திருக்களாவின் கண்ணுள்ள நல்லகனியை, தெள்ளு - வடிக்கப்பட்ட, செந்தமிழ் - செந்தமிழ் வழங்குகின்ற, கருவையில் - திருக்கருவாபுரியில், சினகரம்புகுந்து - திருக்கோயிலில் நுழைந்து, மெள்ள நான் சென்று காண்டலும் - மெல்ல நான்போய்க்கண்டவளவில், விடாய் தீர்ந்தது - என்பிறவி விடாய் நீங்கிற்று. எ-று.

பிறகனிகள் உண்டாலல்லது விடாய் தணியாது, இந்தத் திருக்கருவைக்களா நறுங்கனியைக் கண்டமாத்திரத்தில் விடாய் தணிந்ததென்பதுகருத்து. தெள்ளு செந்தமிழ் என்றது தேவாரம் முதலியதிருமுறைகளை. மெள்ள குறிப்புவினை யெச்சம். இதில் லகரத்துக்கு ளகரம்போலி. காண்டலும் இறந்தகால வினையெச்சம். காண்பகுதி, து அல் சாரியைகள், உகரக்கேடும் தகரம் டகரமானதும் சந்தி, உம் வினையெச்சவிகுதி, அதுவே இறந்தகாலம் காட்டியது.

(87) விடக்கைமும்மலக்குழிசியை விளிந்தபின்றீண்டாத்
துடக்கைநோய்க்கணந் துணைக்கையிட்டாடுறுமரங்கை

நடக்குஞ்சூத்திரப்பாவையை நான்சுமந்துழலல்
கடக்கநீக்கியென்றாளுவை கருவையுத்தமனே.

(இ-ள்.) கருவை உத்தமனே - திருக்கருவாபுரி உத்தமனே, விடக்கை - மாமிசபிண்டத்தை, மும்மலக்குழியை-மும்மலபாண்டத்தை, விளிந்தபின் தீண்டா - இறந்தபின் தொடக்கூடாத, துடக்கை-அருவருப்பை, (இறவாதகாலத்தில்) நோய்க்கணம் - பிணியின் தொகுதியாகிய பேய்கள், துணங்கையிட்டு ஆடும் - துணங்கைக் கூத்தாடுகின்ற, அரங்கை - ஆடிடத்தை, நடக்கும் - நடவாநின்ற, சூத்திரப்பாவையை-சூத்திரப்பிரதிமையை, நான்சுமந்து உழலல்-நான்சுமந்து உழல்வதை, கடக்க நீக்கி-தாண்டும்படியென்னை அதினின்றும் விலக்கி, என்று ஆளுவை - எக்காலம் ஆண்டருள்வாய்.

கருவையுத்தமனே, இந்த உடற்சுமையை என்றொழித்தாளுவை என்பது கருத்து. துணங்கையிட்டு ஆடுதல் 28-ஆம்செய்யுளுரையிற்காண்க. ஆளுவை முன்னிலையொருமை வினைமுற்று.

(88) உத்தியாளராமுடித்தபால் வண்ணனேயுனது
பத்திவேண்டுவதன்றியே நரகிடைப்படினும்
முத்திவேண்டிலேன்றுறக்கமும் வேண்டிலேன்முனிவர்
சித்திவேண்டிலேன்வேண்டிலேன் றிசாதிபர்சிறப்பே.

(இ-ள்.) உத்தி - படப்பொறிகளையுடைய, வாள் அரா - ஒளியுள்ளபாம்பை, முடித்த - சிரத்திலணிந்த, பால்வண்ணனே - பால்வண்ணனே, உனது பத்திவேண்டுவதன்றி - உன்பத்தியை நான் விரும்புவதன்றி, நரகிடைப்படினும் - நரகத்திற்பொருந்தினாலும், முத்திவேண்டிலேன் - மோக்ஷத்தைவிரும்பிலேன், துறக்கமும் வேண்டிலேன் - சுவர்க்கபோகத்தையும் விரும்பிலேன், முனிவர் சித்திவேண்டிலேன்-முனிவர்களுடைய சித்திகளையும் விரும்பிலேன், திசாதிபர்சிறப்பு வேண்டிலேன் - திக்குப்பாலகர்களுடைய மேன்மையையும் விரும்பிலேன். எ று.

பால்வண்ணனே, நான் உன்பத்தியை வேண்டுதலேயன்றி, முத்திமுதலியவற்றை வேண்டேன் என்பது கருத்து. வேண்டிலேன் எதிர்மறைத்தன்மை யொருமை வினைமுற்று. எதிர்மறை விகுதி இல். முனிவர்சித்தி 54-ஆம் செய்யுளுரையிற்காண்க. திசாதிபர்-தீர்க்கசந்தி.

(89) சிறக்கத்தக்கதுகருவையான் றிருவடிநேயம்
மறக்கத்தக்கதுமற்றுள சமயத்தின்மயக்கம்
துறக்கத்தக்கதிவ்வுடம்பையா னென்றுறுதொடர்பு
பிறக்கத்தக்கதுசிவானந்த வாரியின்பெருக்கே.

(இ-ள்) கருவையான் திருவடிநேயம் - கருவைப்பதியானது அன்பே, சிறக்கத்தக்கது - விருத்தியடையத்தக்கது, மற்றுள்ள சமயத்தின் மயக்கம்-வேறுயுள்ள சமயங்களைப்பற்றிய மயக்கமே, மறக்கத்தக்கது - மறந்துவிடத்தக்கது, இவ்வுடம்பை - இந்தச்சரீரத்தை, யான் என்று உறுதொடர்பு - நானென்றுவருகிற அகங்காரத்தொடர்பே, துறக்கத்தக்கது - விடத்தக்கது, சிவாநந்தவாரியின்பெருக்கே - சிவாநந்தக்கடலின்பெருக்கே, பிறக்கத்தக்கது-உண்டாக்கத்தக்கது.

சிறக்கத்தக்கது முதலியவும் கருவையான் திருவடிநேயமுதலாயினவேயாமெனபது கருத்து. மற்று பிறிது என்னும் பொருளதாகிய இடைச்சொல். பெருக்கேயெனனுந் தெரிநிலை ஏகாரத்தை நேயமுதலியவற்றோடு கூட்டுக.

(90) பெருகுகாதல்கொண்டனுதினம் பேதைநெஞ்சடியேன
உருகிநாடவும்வெளிப்படா வுனையுளத்துணர்ந்தேன்
இருகணாரவுங் காண்பதற் கெனறெதிர்ந் திடுவாய்
கருகுகண்டனே கருவையிற களாநறுங் கனியே.

(இ-ள்.) கருகுகண்டனே - கறுத்தகண்டத்தையுடையவனே, கருவையில் - திருக்கருவைபபதியில், களாநறுங்கனியே - களாவின் கண்ணுள்ள நல்லகனியே, பெருகுகாதல்கொண்டு - மிகுந்த ஆசைகொண்டு, அனுதினம் - நாள்தோறும், பேதைநெஞ்சு - அறியாமையுள்ள மனத்தையுடைய, அடியேன் - அடியனேன், உருகிநாடவும் - நாடியுருகவும், வெளிப்படா - வெளியாகாத, உன்னை - உன்னை, உள்ளத்து உணர்ந்தேன் - மனத்திலறிந்தேன், இருகண் ஆரவும் காண்பதற்கு - இருகண்கள் நிறையவும் காணும்பொருட்டு, என்று எதிர்ந்திடுவாய் - எக்காலம் நீவந்து எதிர்ப்படுவாய். எ-று.

கருவைப்பதியானே, உன்னை மனத்திலறிந்தேன், என் கண்ணாரக் காண்பதற்கு நீயென்றெழுந்தருளுவையென்பது கருத்து. உருகி நாடவும் என்பதை நாடி உருகவும் எனக் காரணகாரியத்தோன்ற விகுதி பிரித்துக்கூட்டுக.

எண்சீர்க்கழிநெடி லாசிரிய விருத்தம்.

(91) கனிவுறுமனங் கனியகினபெருங் கருணைதந்தவா போற்றிகாயினேன், இனியபாடலாற் களவிலீசனென் றேத்தநாத்தரு மிறைவபோற்றிவான், பனிநிலாவுடன் கங்கைதுன்றுசெம்பவளவார்சடைப் பரமபோற்றிவில், குனிவுறுமுனம் புரமெரித்திடக் குறித்தவாணகைக் குழகபோற்றியே.

(இ-ள்.) கனிவு உறு - கனியாத, மனம் - என் மனமானது, கனிய - கனியும்படி, நின் பெருங்கருணை தந்தவா - உன் பெருங்

கருணையைக் கொடுத்தருளினவனே, போற்றி - உன் பொருட்டு வணக்கம், நாயினேன் - நாயேன், இனியபாடலால் - மதுரகவிக ளால், களவில் ஈசன் என்று ஏத்த - களாநிழலி லெழுந்தருளிய ஈச னே யென்றுதுதிக்க, நாத்தரும் - எனக்கு நாவைத்தந்தருளின, இறைவ - இறைவனே, போற்றி-வணக்கம், வான்பனி நிலாவுடன்- ஆகாயத்திலுள்ள குளிர்ச்சியாகிய சந்திரனோடு, கங்கை துன்று- கங்கைபொருந்திய, செம்பவளவார்சடை - செவந்தபவளம்போன்ற நீண்ட சடையையுடைய, பரம - பரமனே, போற்றி - வணக்கம், வில்குனிவு உறுமுனம் - உன் வில்லானது வளையாமுன்னமே, புரம் எரிந்திட - முப்புரங்கள் நீறுய்விடும்படி, குருத்த - அரும்பிய, வாள் நகை - ஒளிபொருந்திய நகைப்பையுடைய, குழக - அழகனே, போற்றி - வணக்கம். எ-று.

வில் - மேருமலை. கனிய காரியப்பொருட்டாகிய எதிர்காலச் செயவெனெச்சம். போற்றி தொழிற்பெயர். போற்று பகுதி, இ தொழிற்பெயர் விகுதி, உகரக்கேடு சந்தி. நாயினேன் பொருளடி யாகப்பிறந்த தன்மையொருமைப் பெயர்ப்பகுபதம். நாய் பகுதி, இன் சாரியை, ஏன் தன்மை யொருமை விகுதி, பகுதி தன்மையில் படர்க்கைவந்த இடவழுவமைதி. வார்சடைவினைத்தொகை. புரம் என்பது "எரிந்திடக் குருத்தவாணகைக் குழக" என்றமையால் முப் புரத்தை யுணர்த்தி நின்றது. சிவபெருமான் கங்கை ஏற்றசெய்தி:— சூரியவமிசத்தரசர்களில் ஒருவனாகிய பகீரதன் கபிலமுனிவருடைய சாபத்தால் சாம்பராய்ப்போன தனது மூதாதைகள் நற்கதியடை யும்பொருட்டுத் தவஞ்செய்து சுவர்க்கத்திலிருந்து கங்கையைப் பூமிக்குக்கொண்டுவருகையில் அதன்வேகத்தைத் தடுப்பதற்காகச் சிவபெருமான் தமது சடையில்வைத்தருளினார் என்பது.

(92) குழவிவெண் ணிலா வனையவெண் ணகைக்கொடியிடத்துவாழ் குருசில்போற்றியென், பழையதீவினைப் பகைதொலைத்திடும் பாவ நாசனேபோற்றி காய்சினத், தழுவையின்வரித்தோ லிசைத்தபட் டுடை மருங்கினாய்போற்றி செந்தமிழ்க், கழுமலப்பதிக் கவுணி யன்புகழ் களவினீழலிற் கடவுள்போற்றியே.

(இ-ள்.) குழவி வெள்நிலா அனைய - இளமையாகிய வெள் ளிய சந்திரிகையை நிகர்த்த, வெள்நகை - வெண்மையாகிய புன் னகையையுடைய, கொடி - கொடிபோல் வாளாகிய உமாதேவி, இடத்துவாழ் - இடப்பாகத்தில் வாழப்பெற்ற, குருசில் - இறை வனே, போற்றி—, என் பழைய தீவினைப்பகை தொலைத்திடும் - என்பழமையாகிய தீவினையென்கிற பகைவனைக் கொல்லுகின்ற, பாவநாசனே - பாபநாசனே, போற்றி—, காய்சினத்து - சுடுகின்ற

கோவத்தையுடைய, உழுவையின் - புலியின், வரி - கீற்றமைந்த, தோல் இசைத்த - தோலோடு பொருத்திக்கட்டிய, பட்டு உடை- பட்டாடையையுடைய, மருங்கினோய் - இடையையுடையவனே, போற்றி—, செந்தமிழ்-செந்தமிழ்வழங்குகின்ற, கழுமலப்பதி-திருக்கழுமலமென்னுந் திருப்பதியிற்றோன்றிய, கவுணியன்புகழ் - திருஞானசம்பந்தர் புகழ்ந்துபாடின, களவின் நீழலில் கடவுள் - களாநிழலிலெழுந்தருளியிருக்கிற கடவுளே, போற்றி—. எ-று.

அனைய இடைச்சொலடியாகப் பிறந்தகுறிப்புப் பெயரெச்சம். அனை (உவமையுருபிடைச்சொல்) பகுதி, ய் சந்தி, அ பெயரெச்ச விகுதி. குரிசில் விகுதிபெறாத உயர்திணை ஆண்பாற்படர்க்கைப் பெயர். காய்சினம் வினைத்தொகை. உடை செயப்படுபொருள் உணர்த்தும் ஐகாரவீற்றுத்தொழிற்பெயர், பகுதி உடு. கழுமலப்பதி தன்னை அடைந்தாரது மும்மலங்களையும் நீக்கும்பதி, (சீர்காழி) கவுணியர் என்னும் அந்தணர்மரபிற் பிறந்தகாரணம் பற்றிச் சைவசமயாசாரியரில் ஒருவராகிய திருஞானசம்பந்தர் கவுணியன் எனப்பட்டார். புலியின்தோல் உடுத்தசெய்தி 9-ஆம் செய்யுளுரையின்கீழ்க் காண்க.

(93) கடையுகத்தினிற் பொழில்களேழையுங் கனல் கொளுத்திய சுடலையம்பலத், தடலைபூசியென்னம்மை காணநின்றாடுமையனே போற்றி போற்றிநெஞ், சிடைவிடாமலுன் சரணபங்கயத் திருக்க நல்கியவிறைவபோற்றிமால், விடையின்மேவியே கருவைமாநகர் வீதிவாய்வரும்விமல போற்றியே.

(இ - ள்.) கடையுகத்தினில் - யுகக்கடையில், பொழில்கள் ஏழையும் - ஏழுலகங்களையும், கனல்கொளுத்திய - நெருப்பினாலெரித்த, சுடலை அம்பலத்து - மயானமாகிய ஆடரங்கில், அடலைபூசி- சாம்பலைப்பூசிக்கொண்டு, என் அம்மைகாண - என்தாயாகிய உமாதேவி காணும்படி, நின்று ஆடும் - நின்று நடிக்கிற, ஐயனே - கடவுளே, போற்றி போற்றி—, நெஞ்சு-என்மனமாகிய வண்டானது, இடைவிடாமல்-இடையறாமல், உன்சரணபங்கயத்து இருக்க-உன் திருவடித்தாமரையில் தங்கியிருக்க, நல்கிய-அருள்செய்த, இறைவ- இறைவனே, போற்றி—, மால்விடையில் மேவி-பெரிய இடபத்திலேறி, கருவைமாநகர் - திருக்கருவைப் பெருநகரத்தின், வீதிவாய் வரும் - தெருவின்கண் உலாவருகின்ற, விமல - பரிசுத்தனே, போற்றி—. எ-று.

சரணபங்கயம் என்றதற்கேற்ப, நெஞ்சுவண்டாக்கியுரைக்கப் பட்டது. இது ஏகதேச உருவகம் என்னப்படும். கொளுத்திய

பிறவினை இறந்தகாலப் பெயரெச்சம். கொள் பகுதி, உ சாரியை, த் சந்தி, து பிறவினை விகுதி, இன் இறந்தகால இடைநிலை, உகரம் கெட்டதும் இடைநிலையின் னகரம் கெட்டதும் யகரந்தோன்றியதும் சந்தி, அ பெயரெச்ச விகுதி. நெஞ்சு இடவாகுபெயர். விமல என்னும் விளியடைந்த ஆண்பாற்படர்க்கைப்பெயரில் வி என்னும் உபசர்க்கை எதிர்மறை குறித்து நின்றது. மலநீக்கமுடையவன் என்பது பொருள். பொழில்கள் ஏழையும் கனல்கொளுத்திய காலத்தைச் சர்வசம்ஹாரகாலமென்பர்.

(94) விமலபோற்றிநின் பெருமை நாரணன்விரிஞ்சனாதியோரறிய கிற்கிலா, அமலபோற்றிநானறியும் வண்ணமுன்னறிவுதந்தருளறிவ போற்றிதண், கமலவாவிசூழ் கருவை மாநகர்க் களவினீழல்வாழ் கால காலனே, இமயமால்வரைக் குமரியொப்பனைக் கினியகாதலா போற்றி யெந்தையே.

(இ-ள்.) விமல-மலரகிதனே, போற்றி—, நின்பெருமை-உன் சிறப்பை, நாரணன் விரிஞ்சன் ஆதியோர் - திருமால் பிரமன்முதலியோர், அறியகிற்கிலா - உணரமாட்டாத, அமல - பரிசுத்தனே, போற்றி—, நான் அறியும் வண்ணம் - நான் உணரும்வண்ணம், உன் அறிவுதந்தருள் - உன்ஞானத்தைத் தந்தருளின, அறிவ - ஞானவுருவனே, போற்றி—, தண்கமலவாவிசூழ் - குளிர்ந்த தாமரைத்தடாகங்கள்சூழ்ந்த, கருவைமாநகர் - திருக்கருவைப் பெருநகரில், களவின் நீழல்வாழ்-களாநிழலில்வாழ்கின்ற, காலகாலனே-காலனுக்குக்காலனே, இமயமால்வரை - இமயமென்னும் பெரியமலையிற்பிறந்த, குமரி - குமாரியாகிய, ஒப்பனைக்கு - ஒப்பனையம்மைக்கு, இனியகாதலா-இனிமையாகிய ஆசைநாயகனே, எந்தையே - என்தந்தையே, போற்றி—. எ-று.

அறியகிற்கிலா ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம். அறி பகுதி, ய் சந்தி, அ சாரியை, கில் ஆற்றலுணர்த்தும் விகுதி, லகரம் றகரமானது சந்தி, கு சாரியை, இல் எதிர்மறை விகுதி, ஆகாரம் சாரியை, தகரவெழுத்துப்பேறும் பெயரெச்சத்தின் அகரவிகுதியும் கெடுதல் விகாரம். அமல என்பதற்கு இலக்கணமும் பொருளும் விமல என்றதற்குரைத்தாங் குரைத்துக்கொள்க.

(95) எந்தையாயினுங் குரவனாயினு மிறைவனாயினும்போற்றியென் மனப், பந்தமாயினும் வீடுமாயினும் பரமுமாயினும்போற்றி தென்புலச், சந்தமால்வரைத் தமிழ்முனிக்குமைதனைமணந்த மெய்க்கோலங்காட்டினாய், சுந்தரப்புயத்தழக போற்றிநற் சோதிபால்வணத் தாதியோற்றியே.

(இ-ள்.) எந்தை ஆயினுய் - என்தந்தையாயினை, குரவன் ஆயினுய்-குருவாயினை, இறைவன் ஆயினுய்-தலைவனுயினை, போற்றி—, என் மனப்பந்தம் ஆயினுய்-என்மனக்கட்டாயினை, வீடும் ஆயினுய்-வீடுமாயினை, பரமும் ஆயினுய்-பரமும் ஆயினை, போற்றி—, தென்புலம் - தென்றிசையிலுள்ள, சந்தம்மால்வரை - சந்தனமரங்களடர்ந்த பெரிய பொதியமலையில்வாழ்கின்ற, தமிழ்முனிக்கு - அகத்தியமுனிவருக்கு, உமைதனைமணந்த - உமாதேவியை மணஞ்செய்த, மெய் - உண்மையாகிய, கோலம்காட்டினுய் - திருமணக்கோலத்தைக் காட்டியருளினை, சுந்தரப்புயத்து அழக - சுந்தரமாகிய தோள்களையுடைய அழகனே, போற்றி—, நல்சோதி-நல்ல ஒளியே, பால்வண்ணத்து ஆதி-பால்வண்ணத்தையுடைய முதல்வனே, போற்றி.

சந்தம் - அழகெனினுமாம். வீடு முதனிலைதிரிந்த தொழிற்பெயர். இது முற்றவிடுதலாகிய காரணத்தாலுண்டாகும் காரியமாகிய முத்திக்கு ஆதலால் காரணவாகுபெயர். இதன் ஈற்றிலுள்ள உம்மை உயர்வு சிறப்புடன், பரம் என்பதை நோக்க எதிரது தழீஇய எச்சவும்மையுமாம். பரமும் என்றவும்மையும் உயர்வு சிறப்புடன், வீடும் என்பதை நோக்க இறந்தது தழீஇய எச்சவும்மையுமாம். மனப்பந்தம் - பஞ்சபாசத்தனை. அகத்தியருக்கு உமாதேவியை மணந்த திருமணக்கோலம் காட்டியருளியசெய்தி :—பூர்வத்தில் சிவபிரான் இமயமலையில் உமாதேவியாரைத் திருக்கலியாணஞ்செய்யு மகோற்சவத்தைக் கண்டுகளிக்க, பிரமன் முதலிய தேவர்களும், அகத்தியர் முதலிய சகல இருடிகளும் வந்து நெருங்கிய காரணத்தால் வடபுறம் தாழத் தென்புறம் உயர்ந்தது, இதனைக்கண்ட தேவர் முதலிய எவரும் பயந்து நடுங்கினர். அப்போது சிவபெருமான், பூமியை முனபோலச் சமன் செய்விக்கும்பொருட்டு, அகத்தியமுனியை தெற்கின்கணுள்ள பொதியமலையில் வசிக்கக் கட்டளையிட்டருளினர். அக்கட்டளையை மேற்கொண்டு செல்லக்கருதிய முனிவர், இறைவன் திருக்கலியாண மகோற்சவத்தைக்கண்டு களிக்கும் பாக்கியம் பெற்றிலேனென்று வருந்த, இறைவன் நீர் கண்டுகளிக்க, மீண்டும் நமது திருக்கல்லியாணக் காட்சியைத் தந்தருளுவோமென்று வாக்களித்துப் பின்னர் அவ்வாறே பொதியமலையில் அகத்தியருக்குத் திருமணக்கோலம் காட்டியருளினர் என்பது.

(96) ஆதிசின்திருத்தொண்டு காதலித்தறிவுசென்றமட்டாகநின்புகழ், ஓதுசெய்யுளிற் குறையுரைத்ததிங்கொன்று நின்செவிக்குற்றதில்லையோ, காதனண்புடைக் கவிஞனேவலுங் கங்குலிற்கழற்கால்சிவப்புறத், தூதுசென்றவாபோற்றி நாடொறுந்தொழுமவர்க்கருள் கருவையையனே.

(இ-ள்.) ஆதி - பூர்வத்தில், நின்திருத்தொண்டு காதலித்து - உன் திருத்தொண்டு விரும்பி, அறிவுசென்றமட்டு ஆக - என்னறிவு சென்ற அளவாக, நின்புகழ் ஓதுசெய்யுளில் - உனபுகழை யெடுத்துச்சொல்லிய பாடலில், குறை உரைத்தது - எனகுறைகளைச் சொல்லிக்கொண்டது, இங்கு ஒன்றும் - இவ்விடத்துச்சிறிதும், நின்செவிக்கு உற்றதில்லையோ - உன்செவியிற் புகவில்லையோ, காதல்நண்பு உடை - விருப்பமும் தோழமையும் உடைய, கவிஞன் - சுந்தரன், ஏவலும் - ஏவுதலும், கங்குலில் - இரவில், கழல் - வீரக்கழலையணிந்த, கால் சிவப்பு உற - திருவடிசெவக்க, தூதுசென்றவா - தூதாகச் சென்றவனே, போற்றி—, நாள்தோறும் - தினந்தோறும், தொழுமவர்க்கு - வணங்குவோர்க்கு, அருள் - அருள்செய்கின்ற, கருவை ஐயனே - திருக்கருவாபுரியிறைவனே. எ-று.

கவிஞன் பெயர்ப்பகுபதம். கவி பகுதி, ஞ் பெயரிடைநிலை, அன் ஆண்பால் விகுதி. ஏவலும் இறந்தகாலவினையெச்சம். ஏவு பகுதி, அல் சாரியை, உகரக்கேடு சந்தி, உம் இறந்தகாலவினையெச்சவிகுதி. கால் சிவப்புற என்பது குறில்செறியாலள என்னும் சூத்திரத்தில் "வலிவரின் - இயல்புந் திரிபுமாவனவுளபிற" என்றமையால் அலவழிக்கண் உறழாது எழுவாய்த் தொடராகையால்" லகரம் இயல்பாய்வந்தது. பண்புத்தொகையாயின் வேற்படை, வாட்படை எனத்திரிந்துவரும். தொழுமவர் எதிர்கால வினையாலணையும்பெயர். இதில் உம்சாரியை. சுந்தரன் ஏவத்தூது சென்ற செய்தி :—70-ஆம் செய்யுளுரையிற் காண்க.

(97) ஐயனே சரண்போற்றி யென்னையாளப்பனே சரண்போற்றி பொய்யிலா, மெய்யனேசரண்போற்றி வானவர்வேந்தனே சரண் போற்றி மான்மழுக், கையனேசரண்போற்றி காலனைக்காய்ந்த வா சரண்போற்றி தீநிறச், செய்யனேசரண்போற்றி காமனைச்செற்ற வாசரண்போற்றி தேவனே.

(இ - ள்.) ஐயனேசரண்போற்றி - ஐயனே உன்திருவடிக்கு வணக்கம், என்னை ஆள் அப்பனே சரண்போற்றி - என்னையாண்டருள்கின்ற அப்பனே சரண்போற்றி, பொய் இல்லா - மெய்யனே சரண் போற்றி—, வானவர்வேந்தனே சரண்போற்றி—, மான்மழுகையனே - மானையும் மழுவையுந் தரித்த கையையுடையானே, சரண்போற்றி—, காலனைக்காய்ந்தவா - யமனைக்கோபித்தவனே, சரண்போற்றி—, தீநிறம் செய்யனே - நெருப்பினது நிறம்போன்ற செந்நிறத்தையுடையவனே, சரண்போற்றி—, காமனைச்செற்றவா - மன்மதனைக்கொன்றவனே, தேவனே—, சரண்போற்றி—. எ-று.

செய்யன் செம்மை என்னும் பண்படியாகப்பிறந்த ஆண்பாற் படர்க்கைப்பெயர். காமனைச்செற்ற செய்தி :—முன்னொருகாலத்தில் சிவபெருமான் யோகத்திலிருக்க அதனைக்கெடுக்க முயன்ற தேவர்கள் ஏவுதலால் மன்மதன் சிவபெருமான்மேல் மலர்க்கணை தொடுத்தனன். அப்பொழுது இறைவன் சினங்கொண்டு விழிக்க மன்மதன் எரிந்து சாம்பராயினன் என்பது.

(98) தேவனே பிறர்க்கடிமையுற்றிலேன் சிந்தைநின்வசந் தந்ததன்றியும், நாவினாற்றினம்பரவிவாழ்த்துவேனாளுமென்குறைதீர்ப்பதார்கொலோ, காவன்மூவரண்கனல்கொளுத்திடக் கருணைசெய்திடும் கடவுள்போற்றியான், பாவகாரியேயெனினுமென்னை நீ பாதுகாப்பதுன் பண்பதாகுமே.

(இ-ள்.) தேவனே—, பிறர்க்கு அடிமைஉற்றிலேன்-பிறதெய்வங்களுக்கு அடிமைசெய்தலைப் பொருந்திலேன், சிந்தை-என்மனத்தை, நின்வசம்தந்தது அன்றியும் - உன்வசத்திற் கொடுத்ததல்லாமலும், நாவினால்-என்னாவைக்கொண்டும், தினம்-நாள்தோறும், பரவிவாழ்த்துவேன் - வழிபட்டுத்துதிப்பேன், நாளும் - நாள்தோறும், என்குறைதீர்ப்பது - என்குறைகளை நீக்குவது, ஆர்கொல்-யாவரோ, காவல் - காவலோடுகூடிய, மூவரண் - மும்மதில்களையும், கனல்கொளுத்திட - நெருப்பு நீறாக்கும்படி, கருணைசெய்திடும் கடவுள்-கிருபைசெய்தகடவுளே, போற்றி—, யான் பாவகாரியே எனினும்-நான் பாவஞ்செய்பவனேயானாலும், என்னை - அடியேனை, நீ பாதுகாப்பது-நீ பாதுகாத்தருள்வது, உன் பண்பது ஆகும்-உன் பெருங்குணமாகும். எ-று.

பாவகாரி - பாவஞ்செய்வோன். பாவியென்றபடி. ஆர் யார் என்னும் உயர்திணை முப்பாலுக்கும் பொதுவாகிய குறிப்பு வினைமுற்றின் மரூஉ. மூவரண் - பொன், வெள்ளி, இரும்பு இவற்றாலாகிய அரண். பண்பது என்பது அகரச்சாரியையுடன் து என்னும் பகுதிப்பொருள் விகுதிபெற்ற பண்புப்பெயர்.

(99) பண்பயிற்றவண்டாடு கொன்றையம்படலை மார்பனேபோற்றியம்பிகை, கண்களித்திடத்தில்லை மன்றினிற் கடிநடம்புரி கடவுள்போற்றிபூஞ், சண்பகச்செழுங்காவின் வேலிசூழ்தண்களாவனத்தடிகள்போற்றிமீ, விண்பரிப்பவன்றெழுத நம்பனேவெள்ளைமேனியாய் போற்றி போற்றியே.

(இ-ள்.) பண்பயிற்றி - பண்கள் பயில்விக்கப்பெற்று, வண்டு ஆடு - வண்டுகள் சுழல்கின்ற, கொன்றையம்படலை மார்பனே-கொ

ன்றைமாலையைத்தரித்த திருமார்பையுடையவனே, போற்றி—. அம்பிகை-உமாதேவி, கண்களித்திட - கண்கள்களிக்கும்படி, தில்லைமன்றினில்-தில்லையம்பலத்தில், கடிநடம்புரிகடவுள்-விளக்கமாகிய திருநிருத்தஞ்செய்கிற கடவுளே, போற்றி—, பூ - மலர்களையுடைய, செழு-செழுமையாகிய, சண்பகக்காவின் - சண்பகச்சோலையின், வேலிசூழ் - வேலிசூழ்ந்த, தண் - குளிர்ச்சியாகிய, களாவனத்து - திருக்களாவனத்திலெழுந்தருளிய, அடிகள்-கடவுளே, போற்றி—, மீவிண்பரிப்பவன்தொழுத-மேலிடத்துள்ள விண்ணுலகத்தையாள்கின்றவனுகிய இந்திரன் வணங்கின, நம்பனே-சிவபிரானே, வெள்ளைமேனியாய் - பால்வண்ணனே, போற்றி போற்றி—. எ-று.

பரிப்பவன் எதிர்கால வினையாலணையும்பெயர். பகுதி - பரி. முக்காலத்து மொத்தியல் பொருளை நிகழ்காலத்தால் கூறுதல் வடநூலார் மதம். எதிர்காலத்தால் கூறுதல் தமிழ்நூலார்மதம். கொன்றையம்படலை என்பதில் அம்சாரியை.

(100) வெள்ளைமேனியாய்போற்றி யொப்பனைமேவுமார்பனேபோற்றி போற்றிபூங், கள்ளலம்புதண்களவினீழலிற் கருணையங்கடற் கடவுள்போற்றிநான், உள்ளமொன்றி நின்றடிவழுத்திடவுதவிசெய்தவாபோற்றியின்புறத், தெள்ளுசெந்தமிழ்க்கருவைமாநகர்ச்செல்வபோற்றிநின் சீர்கள்போற்றியே.

(இ-ள்.) வெள்ளைமேனியாய் - பால்வண்ணனே, போற்றி—, ஒப்பனைமேவுமார்பனே - ஒப்பனையம்மை தழுவுகின்ற திருமார்பையுடையவனே, போற்றி போற்றி—, பூ கள் அலம்பு - மலர்த்தேன் பெருகுகின்ற, தண்களவின் நீழலில் - குளிர்ந்த களாநிழலில் எழுந்தருளிய, கருணையங்கடல் - கிருபைக்கடலாகிய, கடவுள்-கடவுளே, போற்றி—, நான் உள்ளம் ஒன்றிநின்று-நான் மனம்பொருந்திநின்று, அடிவழுத்திட - உன்திருவடியைத்துதிக்கும்படி, உதவிசெய்தவா-உதவிசெய்தவனே, போற்றி—, இன்பு உற-இன்பம் அதிகப்பட, தெள்ளு - தெளிவாகிய, செந்தமிழ் - செந்தமிழ்க்கிடமாகிய, கருவைமாநகர் - திருக்கருவைப்பெருநகரையுடைய, செல்வ - செல்வனே, போற்றி—, நின்சீர்கள்-உன்புகழ்களுக்கு, போற்றி-வணக்கம். எ-று.

பூங்கள் என்பதில் "பூப்பெயர் முன்னினமென்மையுந் தோன்றும்" என்ற சிறப்பு விதிப்படி ஙகரம் மிகுந்தது. பூ முதனிலைத் தொழிலாகுபெயர்.

திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி

முற்றிற்று.

# யாப்பிலக்கணச்சுருக்கம்.

யாப்பு-பா பாவினம் என இருவகைப்படும்.

பா, வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என நான்கு வகைப்படும்.

பாவிற்குரிய உறுப்பு - எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை என அறுவகைப்படும்.

## எழுத்து.

எழுத்து இன்னதென்பதும், அதன்வகையும் எழுத்திலக்கணத்துள் கண்டுகொள்க.

## அசை.

அசை எழுத்தால் ஆக்கப்படுவது. அது-நேரசை, நிரையசை என இருவகைப்படும்.

நேரசை-ஒரு குறிலாவது, ஒரு நெடிலாவது தனித்தும் ஒற்றடுத்தும் வருவது. ஒற்று - மெய்.

(உ-ம்.) உ, ஊ; உண், ஊண்.

நிரையசை-குறிலிணைந்தாவது, குறிலிணைந்து ஒற்றடுத்தாவது, குறில்நெடி லிணைந்தாவது, குறில் நெடிலிணைந்து ஒற்றடுத்தாவது வருவது. (உ-ம்) நில, நிலம், நிலா, நிலாம்.

## சீர்.

சீர்-அசைகளால் ஆக்கப்படுவது. அது-ஓரசைச்சீர், ஈரசைச்சீர், மூவசைச்சீர், நாலசைச்சீர் என நான்குவகைப்படும்,

### ஓரசைச்சீர்.

| | |
|---|---|
| நேர்-நாள்.<br>நிரை-மலர். | இவை ஓரசைச்சீரெனவும், அசைச்சீரெனவும் கூறப்படும். |

### ஈரசைச்சீர்.

| | |
|---|---|
| நேர் நேர் - தேமா.<br>நிரை நேர் - புளிமா.<br>நிரை நிரை- கருவிளம்.<br>நேர் நிரை - கூவிளம். | இவை இயற்சீர் எனவும் ஆசிரிய உரிச்சீர் எனவும் பெயர் பெறும். |

### மூவசைச்சீர்.

மூவசைச்சீர் - நேர்இறுதிச்சீர், நிரை இறுதிச்சீர், , என இருவகைப்படும்.

நேர் இறுதிச்சீர்.

| | | |
|---|---|---|
| நேர் நேர் நேர் தேமாங்காய். | } | இவை வெண்சீரெனவும், காய்ச்சீரெனவும், வெண்பா வுரிச்சீரெனவும் கூறப்படும். |
| நிரை நேர் நேர் புளிமாங்காய். | | |
| நிரை நிரை நேர் கருவிளங்காய். | | |
| நேர் நிரை நேர் கூவிளங்காய். | | |

நிரையிறுதிச்சீர்.

| | | | |
|---|---|---|---|
| நேர் நேர் நிரை. | தேமாங்கனி. | } | இவை கனிச்சீரெனவும், வஞ்சியுரிச்சீரெனவும் படும். |
| நிரை நேர் நிரை. | புளிமாங்கனி. | | |
| நிரை நிரை நிரை. | கருவிளங்கனி. | | |
| நேர் நிரை நிரை. | கூவிளங்கனி. | | |

இவ்வஞ்சியுரிச்சீர் நாலடியார் யாப்பினுள் வாராவாயினும், நிரை நடுவாகிய வஞ்சியுரிச்சீ ரொழிந்தவை மகாபாரதயாப்பினுள் வரும். நேர் நேர் நேர் நேர் - தேமாந்தண்பூ முதலிய பதினாறு நாலசைச்சீரும் மேற்கூறிய இரண்டு நூலுள்ளும் வாரா. தேமாந்தண்பூ, புளிமாந்தண்பூ மகாபாரதத்தில் அருகிவரும்.

தளை.

தளை-நின்ற சீரினீற்றசையும் வருஞ்சீரின் முதலசையும் தளையப்பட்டு நிற்பது.

அத்தளை - நேரொன்றாசிரியத்தளை, நிரையொன்றாசிரியத்தளை, இயற்சீர்வெண்டளை, வெண்சீர்வெண்டளை, கலித்தளை, ஒன்றியவஞ்சித்தளை, ஒன்றாதவஞ்சித்தளை என எழுவகைப்படும்.

இயற்சீர் வெண்டளையும், வெண்சீர் வெண்டளையுமே வெண்பாவுக்குரியன.

இயற்சீர் வெண்டளை-மாமுன்நிரையும் விளமுன்நேரும்வருவது.

(உ-ம்.)

| | | | |
|---|---|---|---|
| இனையலென் | னெஞ்சே | யெழுதியாற் | பூதூர் |
| நிரை நிரை | நேர் நேர் | நிரை நிரை | நேர் நேர் |
| கருவிளம் | தேமா | கருவிளம் | தேமா |
| முனைவன் | கழலை | முயங்கு | |
| நிரை நேர் | நிரை நேர் | நிரை நேர் | |
| புளிமா | புளிமா | புளிமா | |

வெண்சீர் வெண்டளை-காய்முன் நேர்வருவது.

(உ-ம்.)

| | | | |
|---|---|---|---|
| பேறிதனி | னூங்கில்லை | பேதைநெஞ்சே | தண்பூதூர் |
| நேர் நிரை நேர் | நேர் நேர் நேர் | நேர் நிரை நேர் | நேர் நேர் நேர் |

கூவிளங்காய் தேமாங்காய் கூவிளங்காய் தேமாங்காய்
வீறுமுனி பூங்கழலை வேண்டு
நேர் நிரை நேர் நேர் நிரை நேர் நேர் நேர்
கூவிளங்காய் கூவிளங்காய் தேமா

நேரொன்றாசிரியத்தளை - மாமுன் நேர்வருவது; நிரையொன்றாசிரியத்தளை-விளமுன் நிரைவருவது; கலித்தளை-காய்முன் நிரை வருவது; ஒன்றிய வஞ்சித்தளை - கனிமுன் நிரைவருவது, ஒன்றாத வஞ்சித்தளை கனிமுன் நேர்வருவது.

அவ்விரண்டோடு, நேரொன்றாசிரியத்தளை முதலிய இவ்வைந்து தளையும், கலிப்பாவும், தாழிசை, துறை, விருத்தம் என மூவகைப்பட்ட பாவினங்களில் கலிப்பாவினினமாகிய கலித்துறையும், கலிவிருத்தமும்; ஆசிரியப்பாவினினமாகிய ஆசிரியவிருத்தமுமே உள்ள பாரத யாப்பினுள் விரவிவரும், ஆங்காங்குணர்க. இங்குக்காட்டில் விரியும்.

அடி.

அடி-தளை அடுத்து நடப்பது. அது குறளடி, சிந்தடி, அளவடி அல்லது நேரடி, நெடிலடி, கழிநெடிலடி என ஐந்துவகைப்படும்.

இருசீருடையதாய் வருவது குறளடி; முச்சீருடையதாய் வருவது சிந்தடி; நாற்சீருடையதாய் வருவது அளவடி; ஐஞ்சீருடையதாய் வருவது நெடிலடி; ஐஞ்சீரின் மிக்கசீருடையதாய் வருவது கழிநெடிலடி.

வெண்பாவுக்குரிய அடி-சிந்தடியும், அளவடியும் ஆம். இவை நாலடியார் யாப்பிற்காண்க. குறளடி, சிந்தடி ஒழிந்த மற்ற அடிகள் பாரதத்தில் காண்க.

தொடை.

தொடை-தொடுக்கப்படுவது. அத்தொடை-எதுகைத்தொடையும், மோனைத்தொடையுமென இருவகைப்படும்.

எதுகைத்தொடை-அடிகள்தோறும் முதலெழுத்து அளவொத்துநிற்க, இரண்டாமெழுத்து ஒன்றிவருவதும் அதுவே அன்றி மூன்றாமெழுத்து முதலியன ஒன்றிவருவதும் ஆம்.

இரண்டாமெழுத் தொன்றிவருவது பாட - என்பதற்குஎற்க மூட என வருதலன்றி, முட என வாராமை. முதலெழுத்து ஐகார ஔகாரங்களாயின் அவ்வெழுத்துகளே அன்றிக் குறிலும் வரலாம்.

உ-ம். வைப்புழிக்கோட்படா வாய்த்தீயிற்கேடில்லை, மிக்க சிறப்பினரசர் செறின்வவ்வா.

ஔகாரத்துக்கும் மூன்றுமெழுத்து முதலியன ஒன்றிவருதற்கும் உதாரணம் வந்தவிடத்திற்காண்க.

மோனைத்தொடை - ஓரடியில் முதற்சீரின் முதலெழுத்தோடு அளவடியில் மற்ற இரண்டு, மூன்று, நான்காஞ்சீர்களின் முதலெழுத்து ஒன்றிவருவது.

இரண்டாஞ்சீரின் முதலெழுத்தொன்றிவருவது இணைமோனைத்தொடை.

(உ-ம்.) பலநாளும் பக்கத்தா ராயினு நெஞ்சில்.

மூன்றாஞ்சீரின் முதலெழுத்தொன்றி வருவது பொழிப்பு மோனைத் தொடை.

(உ-ம்.) பல்லான்ற கேள்விப் பயனுணர்வார் வீயவும்.

நான்காஞ்சீரின் முதலெழுத்தொன்றி வருவது ஒரூஉ மோனைத்தொடை.

(உ-ம்.) ஒன்றேனு மில்லாதான் வாழ்க்கை யுடம்பிட்டு.

முதல் முச்சீர்களின் முதலெழுத்தொன்றிவருவது கூழைமோனைத்தொடை.

(உ-ம்.) வேண்டினும் வேண்டா விடினு முறற்பால.

இரண்டாஞ்சீரின் முதலெழுத்தொழிய மற்ற மூன்றுசீரின் முதலெழுத்தொன்றி வருவது மேற்கதுவாய் மோனைத்தொடை.

(உ-ம்.) உருவு மிளமையு மொண்பொருளு முட்கும்.

மூன்றாஞ்சீரின் முதலெழுத்தொழிய மற்ற மூன்றுசீரின் முதலெழுத்தொன்றிவருவது கீழ்க்கதுவாய் மோனைத்தொடை.

(உ-ம்.) தக்காரும் தக்கவ ரல்லாருந் தந்நீர்மை.

மேற்கதுவாயைக் கீழ்க்கதுவாய் எனவும் கீழ்க்கதுவாயை மேற்கதுவாய் எனவுங் கூறினும் வழுவன்று.

நான்குசீரின் முதலெழுத்தும் ஒன்றிவருவது முற்றுமோனைத்தொடை எனப்படும்.

(உ-ம்.) அறியாரு மல்ல ரறிவ தறிந்தும்.

இம்மோனைத்தொடையிற்கூறிய இணைமுதலியவற்றை எதுகைத்தொடைக்குங் கொள்க.

(உ-ம்.) வேண்டினும் வேண்டா விடினு முறற்பால. இது இணை எதுகைத்தொடை.

மோனைக்குரிய எழுத்துகள். அ, ஆ, ஐ, ஔ ; இ, ஈ, எ, ஏ; உ, ஊ, ஒ, ஓ ; இம்மூவகையில் ஒவ்வோரெழுத்தும் தனக்குத்தான் வருவதே அன்றி அவ்வவ் வகையில் ஒன்றுக்கு மற்றொன்று ஒன்றியும்வரும்.

ச, த; ந, ஞ ; ம, வ இவையும் அவ்வாறும்.

க, ப, ய, இம்மூன்றுக்கும் மோனையில் இனமாகவரும் மெய்யெழுத்தில்லாமையால், ஒவ்வொன்றும் தனக்குத்தானே வரும். யகரமொன்றும் இகரமுதலிய நான்கெழுத்திற்குத் தானும், அவை தனக்கும் ஒன்றிவரும்.

வெண்பா.

வெண்பா-மேற்கூறிய தளைதவறாமல் முதலடி அளவடியாயும், ஈற்றடி சிந்தடியாயும் வந்து, காசு பிறப்பு என்னுங் குற்றியலுகரமும், நாள் மலர் எனனும் அசைச்சீரும் ஆகிய வாய்பாடுகளனுள் ஒன்றை ஈற்றடியின் இறுதிச்சீராகப் பெற்றுமுடிவது.

ஆசிரியவிருத்தம்.

ஆசிரியவிருத்தம்-அளவொத்த கழிநெடிலடி நான்கினைக்கொண்டு முடிவது.

கலித்துறை

கலித்துறை - நெடிலடி நான்கினைக்கொண்டு முடிவது.

கலிவிருத்தம.

கலிவிருத்தம் அளவடி நான்கினைக்கொண்டு முடிவது.

யாபபிலக்கணச்சுருக்கம் முற்றிறறு.

---

ஶ்ரீ

# அதிவீரராமபாண்டியர் சரித்திரம்.

அதிவீர ராமபாண்டியர் மதுரையிலிருந்து அரசாண்டுவந்த சந்திர வமிசத்தராகிய பாண்டியகுலத்தைச்சேர்ந்த ஓர் சிற்றரசர். இவர் ஆண்டநகரம் மதுரையையடுத்த கொற்கை. இவர் தமிழிலுள்ள அரியபெரிய இலக்கிய இலக்கண நூற்பொருள்களை ஐயந்திரிபற ஆராய்ந்துதெளிந்த மகாவித்துவான். இவரது காலம் ஏறக்குறைய 1000 வருடங்களுக்கு முற்பட்டதென்றும், இவருடைய சகோதரர் வரதுங்கபாண்டியர் என்றுங்கூறுவர். இவரதுசரித்திரம் நன்குவிளங்காதாயினும் இவர்செய்த நூல்களாலும், அடியிற் குறித்திருக்கின்ற கைடதச் சிறப்புப்பாயிரத்தாலும் இவர் மகாவித்துவானென்று தெரியவருகிறது.

"நிலவுபொழிதனிக் கவிகைகிடதர்கோன் புகழ்ச்சரித நெடு நீர்வைப்பில், புலவர்களியமுதொழுகு புதுமொழிகூட்டிணைத் தமிழாற்புனைதல்செய்தான், வலனுயர்த்த வண்ணலஞ்சேல் வான்றொடு பொற் கோட்டிமயவரையிற்றீட்டி, அலர்தலைமா நிலம்புரக்கு மதி வீரராமனிக லரசரேறே" இவர்செய்த நூல்கள்:—நைடதம், காசிகாண்டம், இலிங்கபுராணம், கூர்மபுராணம், வெற்றிவேற்கை, திருக் கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி, திருக்கருவைக் கலித்துறையந்தாதி, திருக்கருவை வெண்பாவந்தாதி என்பன. கொக்கோகரிஷிசெய்த வடமொழிக்கொக்கோகமும் இவரால் தமிழிற் செய்யப்பட்டதென்று சிலர் கூறுகின்றனர். அது, "புதியவமிர்தமென வடநூற்றமிழிற் புனைந்தான் புகழ்வழுதி, மதிவெண்குடையோன் வரதுங்கராமனென்னு மன்னவனே" என்றபாடலால் இவர்செய்த தன்றென்றும், இவர் சகோதரராகிய வரதுங்கராம பாண்டியன் செய்ததென்றும் நிச்சயிக்கத்தக்கதா யிருக்கின்றது.

அதிவீரராம பாண்டியன் நைடதம் பாடிக்கொண்டு வருகையில் அவன் தாய் நீ அதிக விருப்பத்துடன் பாடிக்கொண்டு வருகிற இந்நூல் என்னையோவென்றுகேட்க, அரசன் நளசரித்திரம் என்றனன், அதைக்கேட்டதாய் நகைத்து, உன்னைப்போன்ற ஓர் அரசனுடைய கதையையா இவ்வளவுபிரயாசத்துடன் பாடுகிறாய், இவன்சரித்திரத்தைப் பாடுவதைவிட முத்தியின்பம் பெறுவதற்கு ஏதுவாகச் சிவபெருமானைப் பாடலாகாதாவென்றுகூற, அரசன் புத்திதெளிந்து அந்நூலை ஒருவாறு பாடிமுடித்துப் பின் திருக்கருவைச் சிவபெருமான் விஷயமாக மேற்கூறிய அந்தாதிகளைப் பாடினனென்பர்.

அரசன் புத்திதெளிந்து சிவபெருமானைப் பாடியதற்கு வேறு காரணம் கூறுவாருமுளர். அதாவது:—அரசன் முதுமைப்பருவ மடைந்தும் ஸ்த்ரீலோலனு யிருந்துகொண்டு காலங்கழிப்பதை அவனால் அன்புசெய்யப்பட்டிருந்த பொற்கொடி என்னும் ஒரு தாசி அறிந்து "ஓய் கற்றுணர்ந்த அரசசிகாமணியே ; நீர் இதுவரையிலும் சிற்றின்ப மனுபவித்தது போதாதா? இனியாவது சிவபெருமானைப் பாடிப் பேரின்பமடைந்து உய்யலாகாதா? என்றுகூற, அரசனுக்கு ஞானோதயமாய் இவ் அந்தாதிகளைப்பாடினர் என்பதே. யாம் கர்ண பரம்பரையிற் கேட்டபடி இவைகளை இங்கு எழுதினோம்.

---

## திருக்கருவை வெண்பாவந்தாதி.

அஃதாவது திருக்கருவைச் சிவபெருமான்மீது வெண்பாவினால் பாடிய அந்தாதியாகிய நூல் என்பதுபொருள், திருவாரூர், திருவொற்றியூர் என்பவற்றிற்போல கருவைநகரின் மேன்மையை உணர்த்திநின்ற அடைமொழியாகிய திரு என்பது பண்புப்பெயர். கருவை பாண்டி நாட்டுச்சிவஸ்தலங்களுள் ஒன்று. தஞ்சாவூர் தஞ்சை, என்றாற்போலக் கருவாபுரி கருவை எனமரூஉ ஆயிற்று. வெண்பாவுக்கு இலக்கணம் யாப்பிலக்கணச் சுருக்கத்திற்கண்டு கொள்க. அந்தாதியாவது முன்னின்றசெய்யுளின் ஈற்றடியின் இறுதிஎழுத்தாயினும், அசையாயினும், சீராயினும், அடியாயினும் பின்வருஞ்செய்யுளின் முதலடிக்கு ஆதியாகவரத் தொடுக்கப்படுவது. அந்தம்+ஆதி=அந்தாதி, இது தீர்க்க சந்தி. கலித்துறை யந்தாதி, பதிற்றுப்பத்தந்தாதி என்பவற்றினின்றும் வேறுபாடுணர்த்தற்கு வெண்பா எனப் பிறிதினியைபு நீக்குதலாகிய விசேடணங் கொடுத்துக்கூறினார்.

### காப்பு.

நண்பான தென்கருவை நாதனார் தன்பேரில்
வெண்பாவந் தாதி விளம்பவே - பண்பாக
மைம்மலையு மெய்ம்மலையு மாற்று புகழ்படைத்த
கைம்மலையு மாமுகத்தோன் காப்பு.

(இ - ள்.) நண்பு ஆன - (ஆன்மாக்களுக்கு) உயிர்த்துணையாகிய, தென்கருவை நாதனார் தன்பேரில் - தென்றிசைக்கண்ணதாகிய திருக்கருவைக்கு இறைவராகிய சிவபிரான்மீது, வெண்பா அந்தாதி-வெண்பாவந்தாதியை, விளம்ப - (யான்) கூறுதற்கு, பண்பு ஆக - (அதற்குரிய) ஞானகுணம் (எனக்கு) உண்டாக, மைமலையும் - (அஞ்ஞான

மாகிய) மலையையும், மெய்மலையும் - (உடம்போகூடிய) பிறவியாகிய மலையையும், மாற்று - பேதிப்பதனாலுண்டாகிய, புகழ்படைத்த - கீர்த்தியைப் பெற்ற, கை மலையும் - துதிக்கையினால் போர்புரிகின்ற, மாமுகத்தோன் - யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுள், காப்பு - (எனக்கு) ரக்ஷகமாகக்கடவன். எ - று.

சைவசமயிகள் தாம் யாதாயினுமோர் நூல் செய்யப்புகுந்தால், அந்நூல் இனிது முடிதற்பொருட்டுவிநாயகவணக்கம் முதற்கட்கூறல் பெருவழக்காதலால் இந்நூலாசிரியரும், அவ்வாறே கூறினர். தம்மைவழிபட்டு ஓர் கருமம் செய்யப்புகுவோர்க்கு அக்கருமத்தில் நேரிடும் விக்கினங்களை நீக்கும் காரணம்பற்றி "விக்கினவிநாயகர்" என்று பெயர்வழங்குதலுமறிக. ஆன்மாக்களுக்குச் சிவபெருமான் அன்றி வேறுதுணையில்லையாதலால், "நண்பான தென்கருவை நாதனார்" என்றும், அவனைப்பாடுதலல்லது வேறுபேறு இல்லையாதலால் "நாதனார் தன்பேரில் வெண்பாவந்தாதிவிளம்ப" என்றும், அவ்வாறு விளம்புதற்கு ஞானகுணம் வேண்டுமாதலால் "பண்பாக" என்றும், உயிர்களுக்கு அநாதியாயுள்ள அஞ்ஞானத்தையும், அதுபற்றிவரும் ஜனனமரணங்களையும் போக்கி வீட்டையடைச்செய்வதில் வல்லவராகையால் "மைம்மலையுமெய்ம் மலையுமாற்று புகழ்படைத்த" என்றும், அதனை இடையூறின்றி முற்றுவிக்கும் விநாயகமூர்த்தி யானைமுகமுடையவராதலால் "கைம்மலையு மாமுகத்தோன்" என்றுங் கூறினார். நண்பு தொழிற் பண்பு, பகுதிகள். ஆன இறந்தகாலப்பெயரெச்சம், இதில் இன் இடைநிலை முதல்குறைந்துவந்தது. இவ்விடைநிலை கடைகுறைந்து ஆகிய எனவும்வரும், ஆகிய என்பதில், இகரத்தைச்சாரியை எனக்கொண்டு, ஆய, போய என்பவற்றிற்போல யகரம் இறந்தகால இடைநிலை எனக்கொள்ளுதலுமொன்று. கருவைப்பதியில் வீற்றிருக்கும்சிவபெருமானுக்குத் திருக்களவீசர் என்பது திருநாமம். நாதனார் என்பது சிவனார், இறையனார் என்பனபோல ஒருமைவிகுதிமேல் பன்மைவிகுதி பெற்றுவந்தது. விளம்ப என்னும் செயவெனெச்சம் தொழிற்பெயர்ப் பொருள்தந்தது. அஞ்ஞானமும் அது காரணமாக உண்டாகும் பிறவியும் இறைவனது திருவருளாகிய வச்சிராயுதத்தாலன்றி மற்றொன்றாலும் பேதிக்கப்படாமையால் அவைகளை மலைகளாக உருவகஞ்செய்தார். மாற்று முதனிலைத்தொழிற்பெயர். இவ்வாறு கொள்ளுதலேயன்றிக் காலங்கரந்தபெயரெச்சம் (வினைத்தொகை) எனக்கொண்டு, உண்ட இலைப்பு என்பதுபோலச் செய்ப்வன், கருவி,நிலம், செயல்,காலம், செயப்படுபொருள்களில்அடங்காதபுகழ் என்னும் பிறபெயர் கொண்டதெனினுமாம். மைம்மலை, மெய்ம்மலை,

லகம்மலை என்பவைகளில் மகரமெய் ''குறில்வழியத் தனியைந் நொதுமுன்மெலி மிகலுமாம்'' என்றவிதிப்படி மிக்கது.

விநாயகருக்கு யானைமுகம் வந்தசெய்தி:—கயமுகாசுரன் என்பவன் சிவபெருமானைக்குறித்து நெடுங்காலம் தவம்புரிந்து தேவா அசுரர், மனிதர், முதலியஎவராலும், மிருகமுதலிய எவற்றாலும், எவ்வகைப் படைகளாலும், தன்னைப்போலும் யானைமுகமுடையவராய் வந்து தன்னையெதிர்ப்பினும் அவர்படைகளாலும் சாகாதவரம்பெற்றுத்தேவர்முதலிய பலரையும் வருத்தித் திரிந்தனன். அவனுடைய கொடுமைக்கஞ்சித்தேவர்கள் சிவபெருமானைச் சரண்புக, பெருமான் அவனைக் கொலைபுரிவித்துத் தேவர் பயந்தீர்த்தருளும் பொருட்டு உமாதேவியினிடமாக யானை முகத்துடன் விநாயகரைப் பெற்றனர். விநாயகரும் தமது கோட்டைமுறித்து அக்கயமுகனைக் கொன்றனர் என்பது.

(1) சீரணிந்த தென்கருவைச் செல்வனே யொப்பனையாள்
வாரணிந்த கொங்கை மணந்தோனே - காரணிந்த
கண்டனே நின்பொற் கழலல்லாற் காதலித்த
தொண்டனேற் குண்டோ துணை.

(இ - ள்.) சீர் அணிந்த - சிறப்பைத்தரித்த, தென்கருவை - தென்கருவாபுரியில் எழுந்தருளியிருக்கிற, செல்வனே - பெருஞ் செல்வத்தை யுடையவனே, ஒப்பனையாள் - ஒப்பனையம்மையின், வார் அணிந்தகொங்கை - கச்சைத்தரித்த ஸ்தனத்தை, மணந்தோனே - தழுவினவனே, கார் அணிந்த கண்டனே - கருமையைத்தரித்ததிருமிடற்றையுடையவனே, காதலித்த தொண்டனேற்கு - விரும்பின உன்தொழும்பனாகிய எனக்கு, நின்பொன்கழல் அல்லால் - உன் திருவடியே யன்றி, துணை உண்டோ - வேறொருநற்றுணையுண்டோ.

எல்லாநூல்களுக்கும் மங்கலமொழிமுதல் வகுத்துக்கூறவேண்டியதாதலால் ஆதியில் ''சீர்'' என்றுதொடங்கி, அந்தாதியாகையால் நூலின் அந்தத்திலும் சீர் என்றுமுடித்தார். இவ்வாறு முதலும் இறுதியும் மண்டலித்துப்பாடவேண்டியது அந்தாதிக்கு இலக்கணம் என்றறிக. மங்கலச்சொற்களாவன:—திரு, யானை, தேர், பரி, கடல், மலை, மணி, பூ, புகழ், சீர், மதி, நீர், எழுத்து, பொன், ஆரணம், சொல், புயல், நிலம், கங்கை, உலகம், பரிதி, அமிழ்தம் என்பனவும் இவற்றின் பரியாயப்பெயரும், பிறவுமாம். இகலோக பரலோக மோட்சலோகங்களுக்குத் தலைவராதலால் சிவபெருமானைச் செல்வனென்றார். ஒப்பனையாள் திருக்கருவாபுரிச் செல்வரது திருத்தேவியார் திருநாமம். ஒப்பனையாள் - அழகுடையவள். மணந்தோன்

என்னும் வினையாலணையும்பெயரில் பகுதி - மண. "கார் அணிந்த கண்டம்" என்றது பாற்கடலிற்றோன்றிய விஷத்தை அஞ்சித் தேவர் முதலாயினோர் சிவபெருமானை அடைக்கலம்புக, அவர்கள்பொருட்டு அந்நஞ்சை உண்டுகண்டத்தில் நிறுத்தியதைக்குறித்தது. பிறவிப் பெருங்கடலில் வீழ்ந்து வருந்துவோரை முத்திக்கரையிற் சேர்க்கும் மரக்கலம்போல்வது இறைவனது திருவடியே ஆதலின் "நின் பொற் கழலல்லாற்றுணையுண்டோ" என்றார். "பிறவிப்பெருங் கடல் நீந்துவர் நீந்தார் - இறைவனடிசேராதார்" என்றார் திருவள்ளுவநாயனாரும். ஓகாரம் எதிர்மறைப்பொருளில்வந்த வினா. தொண்டன் என்னும் படர்க்கைப்பெயர் ஏன் என்னும் தன்மை யொருமை விகுதி பெற்றுவந்தது. ஏம் என்னும் தன்மைப்பன்மை விகுதியும் தொண்டரோம் பாணரோம் எனப் படர்க்கைப்பெயரோடு சேர்ந்து வருதல் காண்க.

சிவபெருமானுக்குக் காளகண்டம் வந்தசெய்தி:—தேவர்களும் அசுரர்களும், இடைவிடாது போர்புரிந்துவருகையில், அவ்விருதிறத்தாரும் தமக்கு மரணம் நேரிடாமலிருக்க அமிர்தபானஞ்செய்ய எண்ணிப் பிரமனையடைந்து தமதெண்ணத்தைத் தெரிவிக்க, அவர் தேவாசுரர்களுடன்சென்று திருமாலைவணங்கிப் பாற்கடல் கடைந்து அமிர்தம் தந்தருளும்படி வேண்டத்திருமால் கருடனால் மந்தரமலையைக் கொண்டுவந்து பாற்கடலில் மத்தாகநாட்டி, அதற்கு வாசுகியைத் தாம்பாகப்பூட்டி, ஒருபுறம் தேவர்களும், ஒருபுறம் அசுரரும் நின்று கடையச்செய்தனர். அவ்வாறு கடைகையில் அவ்வாசுகி வருத்தம் பொறாமல் விஷத்தைக் கக்கியது. அங்குள்ள எவரையுங் கொல்ல எழுந்த அக்கொடியவிஷத்தை அஞ்சிப் பிரமன் முதலிய எல்லாத் தேவர்களும் சிவபெருமானைச் சரண்புகுந்தனர். சிவபெருமானும் சரண்புகுந்த அத்தேவரைக் காக்கும்பொருட்டு அவ்விஷத்தை உண்டு தமது கண்டத்தில்நிறுத்தினர். அதனால் காளகண்டமாயிற்று.

(**2**) துணைவியொடு மால்விடைமேற் றோன்றிவினை நீக்கி
இணைமலர்த்தா ளென்சிரத்தி லேற்றிப் - பணிவிடைக்கு
வேண்டாத வென்னை வலியவிலை கொண்டெடுத்
தாண்டான் கருவை யரன்.

(இ - ள்.) கருவை அரன் - திருக்கருவையி லெழுந்தருளியிருக்கும் சிவபெருமான், மால்விடைமேல் - திருமாலாகிய இடபவாகனத்தின் மீது, துணைவியொடுதோன்றி - தன்தேவியாரோடுகூடியெழுந்தருளி, வினைநீக்கி - என் இருவினைகளைக்களைந்து, மலர் இணைதாள் - (தனது) தாமரை மலர்போலுந் திருவடியிரண்டையும், என்சிரத்தில்

ஏற்றி - என் சிரத்தின்மீதேறச்செய்து, பணிவிடைக்கு வேண்டாத என்னை - (தன்) திருத்தொண்டுக்கு விரும்பப்படாதஎன்னை, வலிய- வலாற்காரமாக, விலைகொண்டு - விலைக்கு வாங்கி, தடுத்து ஆண்டான் - தடுத்தாட்கொண்டருளினன். எ - று.

இறைவனது திருக்காட்சி வினை நீக்கத்திற்குக் காரணமாகலால் "மால்விடை மேற்றோன்றி" என்றும், வினையினது நீக்கம் திருவடி சிரத்தேறுதற்குக் காரணமாதலால், "வினை நீக்கி இணைமலர்த்தாள் என் சிரத்திலேற்றி" என்றும் கூறினர். நல்வினை தீவினை இரண்டும் ஒருவனுக்கு ஞானத்தைத்தடுத்துப் பந்தமுறுவிப்பதில் பொன்விலங்கும் இரும்புவிலங்கும்போலத் தம்முள் ஒப்பனவாகலால் இருவினைகளும் ஒழித்தற்குரியவை என்றற்குப் பொதுப்பட "வினைநீக்கி" என்றார். "மால்விடை" என்றது சிவபெருமான் திரிபுரசங்காரஞ்செய்த போது திருமால் இடபமாக நின்று தாங்கியதைக்குறிப்பித்தற்கு. "பணிவிடைக்குவேண்டாத" என்றது பணிவிடைக்குஉரியனல்லாத என்றபடி. வலியவிலைகொண்டு தடுத்தாளலாவது தன்திருவடித்தொண்டுக்கு உரியனாகாமுன்னமேதன்பெருங்கருணையால் வலிந்தாளலே இதனைச் சுந்தரமூர்த்திசுவாமிகளை இப்பிரபஞ்சவாழ்க்கையில்மயங்க விடாமல் சிவபெருமான் அந்தணர் உருவங்கொண்டுவலியவந்து திருவெண்ணெய் நல்லூரில் தடுத்தாண்டு கொண்டதிறலறிக. அரன் - சர்வசங்கார காலத்தில் எல்லாப்பொருள்களையும் சங்கரிப்பவன். வலிய - குறிப்புவினையெச்சம்.

திருமால் இடபமானசெய்தி:—திரிபுரங்களைச் சிவபெருமான் புன்னகைசெய்து எரித்தகாலத்தில் திருமால் இடபமாய்வந்து தாங்கினர். இதனை "தடமதில் களவைமூன்றுந் தழலெரித்த வந்நாளில்- இடபமதாய்த்தாங்கினன் திருமால்காண்சாழலோ" என்னும் திருவாசகத் தானுமுணர்க. திரிபுரங்களைப் புன்னகையால் எரித்த செய்தியை ஐந்தாம்பாட்டில் விரிவாய்க்காண்க. சிவபெருமானுக்கு மால்விடையன்றி, நந்திவிடையும், தருமவிடையும் உண்டு. தருமவிடை-தருமதேவதையாகிய ரிஷபம்.

(3) அரவணிந்த தென்கருவை யாளுடையான் வேதம்
பரவுங் களவிற் பரமன் - திருவடியை
நேர்ந்தார்க் கணித்தாகு நேரா துளமயக்கஞ்
சேர்ந்தார்க்கு முத்தியது சேண்.

(இ - ள்.) அரவு அணிந்த-பாம்பையணிந்த, தென்கருவை - தென்கருவாபுரியி லெழுந்தருளிய, ஆளுடையான் - என்னையடிமையாகவுடையவன், வேதம்பரவும் - வேதங்கள் துதிக்கின்ற, களவில் - திரு

க்களாசீழலில் அமர்ந்த, பரமன் - மேலானவன், (அவனது) திருவடியை—, நேர்ந்தார்க்கு - அடைந்தவர்க்கு, முத்தியது - மோக்ஷபதமானது, அணித்து ஆகும் - சமீபித்ததாகும், நேராது - (அவனது திருவடியை) அடையாமல், உள்ளம் மயக்கம் சேர்ந்தார்க்கு - மனமயக்கத்தை யடைந்தவர்க்கு, சேண் - தூரத்ததாகும். எ - று.

வேதம் - தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்னும் சதுர்விதபுருஷார்த்தங்களையும் அறிதற்குக கருவியாயுள்ளது. பரமன் - மேலானவன் "திருவடியை நேர்ந்தார்க்கு அணித்தாகு நேராதுள மயக்கம் சேர்ந்தார்க்கு முத்தியதுசேண்" என்பதனை "ஐயத்தினீங்கித் தெளிந்தார்க்குவையத்தின்— வானநணியதுடைத்து" என்னுந் திருக்குறளானுமுணர்க. "சேயாய் நணியானே" என்றார் மாணிக்கவாசகசுவாமிகளும். நேராது உளமயக்கம் சேர்தலாவது மறுபிறப்பும் இருவினைப்பயனும்கடவுளும் உளவோ இலவோ என ஒன்றிற்றுணிவு பிறவாது நிற்றல். காமம் வெகுளி மயக்கம் என்னும் குற்றம் மூன்றில்,மற்றையஇரண்டும்நீங்கினும் பயனில்லை என்று குறிப்பித்தற்கு "மயக்கஞ்சேர்ந்தார்க்கு முத்தியதுசேண்" என்றார். அணித்து அணிமையென்னும்பண்படியாகப்பிறந்த ஒன்றன்பாற்குறிப்புவினைமுற்று, முக்தி என்னும் வடமொழிப்பெயர் முத்தியெனத் தற்பவமாயிற்று. முத்தி என்னும் எழுவாய்வேற்றுமை அகரச்சாரியையும் து என்னும் பகுதிப்பொருள் விகுதியும்பெற்று முத்தியது எனவந்தது.

சிவபெருமான் அரவணிந்தசெய்தி:—தாருகா வனத்தில் சிவபிரான் தம்மை மதியாதமுனிவர் மடந்தையரைப் பிக்ஷாடனகோலமாய்வந்து கற்பழிக்க, அதுபொழுது அம்முனிவர்கள் சிவபிரானைக் கொல்ல யாகஞ்செய்து அந்தயாகத்தில்தோன்றிய அரா,புலி,சூலம், மான், பூதம், துடி, தலைவெண்டலை, தீ இவைகளை அப்பெருமான் மேல் விடுக்கப் பெருமானும் அவற்றின் வலியடக்கி அணிமுதலிய அலங்காரப் பொருள்களாகத் தரித்துக்கொண்டனர் என்பது.

(4) சேணிற் கொடிநுடங்குந் தென்கருவை யம்மானே
கோணைப் பிறையணியுங் கோமானே - பேணித்
தொடுக்குங் கவிதைத் தொழும்பனுக்கு வந்த
விடுக்கண் களையாத தென்.

(இ - ள்.) சேணில் - ஆகாயத்தில், கொடிநுடங்கும் - கொடிகள் அசையாநின்ற, தென்கருவை-தென்கருவாபுரியிலெழுந்தருளிய, அம்மானே (எமது) தந்தையே, கோண் - வளைந்த, ஐ - அழகாகிய, பிறை - பாலசந்திரனை, அணியும் - முடிமேலணிந்த, கோமானே - இறைவனே, பேணி - (உன்னை) விரும்பி, தொடுக்கும் கவிதை -

தொடுக்கப்பட்டகவிமாலைகளையுடைய, தொழும்பனுக்கு-(உன்)தொண்டனாகியஎனக்கு, வந்த - உண்டாகிய, இடுக்கண்-(பிறவி)துன்பத்தை, களையாதது - நீக்காமைக்குக் காரணம், என் - யாது. எ - று.

தக்கன் சாபத்தால்வருந்திச் சரணடைந்த சந்திரனை சடாபாரத்திலணிந்து அநுக்கிரகத்தருளிய தேவரீர் பாமாலைசூடும் அடியேனுடைய பிறவித்துன்பங்களைக்களைந்து அருள்செய்யாமை என்ன ஆச்சரியம் என்பார் "கோணைப் பிறையணியுங் கோமானே பேணித் தொடுக்குங் கவிதைத் தொழும்பனுக்குவந்த இடுக்கண் களை யாத தென்" என்றார். சிவபெருமான் பிறையணிந்தசெய்தி:—தக்கனுடைய புத்திரிகளாகிய அசுவினிமுதலிய இருபத்தேழுபெண்களையும் மணம்புரிந்துகொண்ட சந்திரன் அவர்களில உரோகணியினிடத்து மாத்திரம் மிக்ககாதல்கொண்டு அவளுடனேயெப்போதும் கூடிக்களித்திருக்க இச்செய்தியைத் தன்புதல்வியரால் உணர்ந்த தக்கன் சந்திரனைநோக்கி, உன்கலைகள் குறைக எனச்சபிக்க, அச்சாபத்தால் சந்திரன் பதினைந்துகலைகளும் குறைந்தபோது மற்றோர் கலையையும் இழக்கவரும் எனப்பயந்து சிவபெருமானைச் சரணமடைந்தான். அப்பெருமான் இரங்கி ஒற்றைக்கலையோடுங்கூடிய சந்திரனைத் தமது சடாபாரத்திலணிந்து மீண்டும் கலைகள் வளரும்படி அநுக்கிரகித்தனர் என்பது. தொடுக்கும், தொடுக்கும் என்னும் செய்யுமென் வாய்பாட்டுப் பெயரெச்சங்கள் நிகழ்காலத்தன. பிறை தொழிலடியாகப்பிறந்தபெயர். பிற பகுதி, ஐ வினைமுதற்பொருள்விகுதி, அகரம் தொகுத்தல். கோமான் மான் ஈற்று ஆண்பாற்படர்க்கைப்பெயர். இவ்வாண்பாற்பெயர் விகுதியின்றி கோ என்றும் வழங்கிவரும். களையாதது எதிர்மறை ஒன்றன்பால் வினையாலணையும்பெயர். என் அஃறிணையிருபாற்கும் பொதுவாகிய வினாவடியாகப்பிறந்த குறிப்புமுற்று, இது எவன் என்பதின் மரூஉ. சூத்திரம்:—"எவனென் வினா வினைக் குறிப்பிழியிருபால்".

(5) என்னெஞ்சில் வைத்தற் கினியதவம் யாதுசெய்தேன்
பொன்னஞ் சிலையாற் புரமெரித்த - முன்னவனே
அன்னம் பயில்கருவை யானேயரவுதொழப்
பொன்னம் பலத்தாடும் பூ.

(இ - ள்.) பொன் அம்சிலையால் - பொன்மலையாகிய அழகியவில்லால், புரம் எரித்த - முப்புரங்களைத்தகித்த, முன்னவனே - முதல்வனே, அன்னம்பயில் கருவையானே - அன்னங்கள் நெருங்கியதிருக்கருவைத் திருப்பதியையுடையவனே, அரவுதொழ - பாம்பானது வணங்கும்படி, பொன்னம்பலத்து - பொற்சபையில், ஆடும் - திரு

நடநம் பண்ணுகிற, பூ - (உன்திருவடித்) தாமரைமலரை, என்நெஞ்சில் வைத்தற்கு - என்மனத்தின்கண் வைப்பதற்கு, யாது இனிய தவம் செய்தேன் - என்ன நற்றவத்தைச் செய்தேன். எ - று.

பொன்னஞ்சிலையால் திரிபுரமெரித்த செய்தி:—தாரகாசுரனது புத்திரர்களான வித்யுந்மாலி தாரகாக்ஷன் கமலாக்ஷன் என்னும் மூன்று அசுரர்கள் மிகுந்ததவஞ்செய்து அசுரத்தச்சனாகிய மயனென்பவனால் சுவர்க்கமத்திய பாதாளங்களாகிய மூன்றிடங்களிலும் அந்தரத்திற் சஞ்சரிக்கத்தக்க இரும்பு - வெள்ளி - பொன் இவற்றால் செய்யப்பட்ட மூன்றுபட்டணங்களையும் முறையேபெற்று, தம்மினத்தாராகியபலஅசுரர்களைக்கூட்டிக்கொண்டு, அந்தரத்திற்செல்லும் அந்நகரங்களுடனே தாம்நினைத்த இடங்களிற்சென்று, அங்குள்ளவரைக்கொன்று திரியாநிற்குங்காலத்தில், அவர்களுடைய கொடுமைக்கஞ்சி முறையிட்டதேவர் முனிவர் முதலியோரது முறைபாட்டுக்குச் சிவபெருமான் இரங்கிச் சந்திரசூரியர்கள் சக்கரங்களாகவும், வேதங்கள்குதிரைகளாகவும், பிரமன்சாரதியாகவும், அமைந்த பூமியாகிய இரதத்தின்மேல் ஆரோகணித்து, மேருவை வில்லாகவளைத்துக்கொண்டு, அதற்கு ஆதிசேஷனாகிய நாரியமைத்து, வாயுவைச்சிறகாகவும் திருமாலைக்கூர்வாயாகவும் கொண்ட அக்கினியாகிய அம்பைத்தொடுத்தெய்யமுயல்கையில், சந்திரன்முதலியதேவர்கள்தந்தம்ஆற்றலால்திரிபுரங்களை அழித்தலாகிய இக்காரியம்முற்றுப்பெறுகின்றதென்று இறுமாப்புக்கொண்டதைச்சிவபெருமான் உணர்ந்து புன்னகைபுரிய, அந்நகையால் திரிபுரவாசியர்கள்தமதுமுப்புரங்களோடு எரிந்து சாம்பராயினர் என்பது. முன்னவன்-எவரினும் முற்பட்டவன். அன்னம்பயில்கருவை என்றதனால்நீர்வளமுள்ளது கருவைநகர்என்றபடி. பதஞ்சலிமுனிவர் அநந்தனுடைய அவதாரமாகையால் அவரை அரவு என்றார். இப்பதஞ்சலிமுனிவர் வியாக்கிரபாதமுனிவர் ஆகிய இவர்கள்பொருட்டே சிதம்பரத்தில் சிவபெருமான் திருநடனஞ்செய்தருளியது. "அரவுதொழும் பொன்னம்பலத்தாடும்" என்றகுறிப்பால் பூ என்றது சிவபெருமானது திருவடியை. இதுஉருவகம். பூவைத்தற்கு என இயைக்க. பொன்னம்பலத்தாடிய அப்பெரியோன் என்மனத்தில் வசித்தற்கு யான்செய்ததவம் சிறிதுமில்லை ஆகையால் அவன் பெருங்கருணையே காரணம் என்பது கருத்து. அரா என்பதில் குறிலின் கீழ் ஆகாரங்குறுகி உகரச்சாரியைபெற்று அரவு என நின்றது நன் - உயிர் - சூ. 22.

(6) பூமருவு வேதன் புயல்வண்ணன் கண்டறியாத்
தாமமணி முடியுந் தாளிணையும் - யாமறிய

வாழுங் கருவை வளநகரில் வந்துநின்றான்
தாழுஞ் சடைக்கள வீசன்.

(இ - ள்.) தாழும்சடை - தொங்குகின்ற சடையையுடைய களாசன் - திருக்களா நிழலில் எழுந்தருளிய சர்வேச்சுரன், பூமருவு வேதன் - தாமரைமலரை இடமாகப் பொருந்திய பிரமனும், புயல் வண்ணன் - மேகநிறமுடையவனாகிய திருமாலும், கண்டு அறியா - (வருந்தியும்) கண்டுணரவொண்ணாத, தாமம் அணி (கொன்றைமலர்) மாலையையணிந்த,முடியும்-திருமுடியையும்,தாளிணையும்-இரண்டுதிருவடிகளையும், யாம் அறிய - யாம் எளிதிற்கண்டுய்யும்படி, வாழும் - நிலைபெற்ற, கருவை - திருக்கருவை யென்கிற, வளநகரில் - நீர்வள முதலிய பலவளங்களும் அமைந்த நகரின்கண், வந்துநின்றான்-எழுந்தருளியிருந்தான். எ - று.

பூமருவுவேதன் கண்டறியாத தாமமணிமுடியும், புயல்வண்ணன் கண்டறியாத்தாளிணையும் எனவமைதலால் முறைநிரனிறைப் பொருள்கோள். அவ்விருவரும் கண்டறியாத தாமமணிமுடியும் தாளிணையும் யாமறிய வாழுங்கருவை வளநகரில் வந்து நின்றான் என்றமையால், அச்சிவபெருமான் அடியார்க்கெளியன் என்பதுபெற்றாம். தம்மைப்போன்ற அடியாரையும் தம்மொடுபடுத்தியாம் எனப்பன்மையாற்கூறினர். பிரமனும் திருமாலும் சிவபெருமானுடைய முடியையும் அடியையும் அறியாதசெய்தி:—முன்னொரு காலத்தில் பிரம விஷ்ணுக்கள் நான்பிரமம் நான்பிரமம் என்று வாதிட்டபோது அவர்கள் இறுமாப்பையடக்கச் சிவபெருமான் நெருப்புமலையாய் இருவருக்கும் இடையேதோன்றி, நும்மிருவரில் ஒருவர் இதன்முடியையும் மற்றொருவர் இதன் அடியையும் காணவல்லீரேல் அவரே முதல்வராவீர் என்றுரைக்க, பிரமன்யான்முடியைக்கண்டு வருகிறேனென்று அன்னவுருக்கொண்டு விண்பறந்தும், திருமால் யான் அடியைக் கண்டு வருகிறேனென்று வராகவுருக்கொண்டு நிலங்கீண்டும் சென்று பலநாள்தேடியும் காணவலியற்றவர் ஆயினர் என்பது. பிரமன் திருமுடியையும், விஷ்ணுதிருவடியையும் பலநாள்வருந்தியும் கண்டறியாமைக்குக்காரணம் அவர்கொண்ட செருக்கு. அன்றித்தந்தொழிலின் கண்மாறுபட்டமை,அதாவது-பிரமனாகிய அன்னம்காட்டுக்குச் சென்றமையும், விஷ்ணுவாகிய வராகம் தாமரைக்குச் சென்றமையுமாம். காடு - சடை. தாமரை-திருவடி. இது "புரங்கடந்தானடிகாண்பான் புவிவிண்டு புக்கறியா, திரங்கடந்தாயென்றிரப்பத் தன்னீரடிக் கென்னிரண்டு, கரங்கடந்தானொன்றுகாட்ட மற்றாங்கதுங்காட்டிடென்று, வரங்கிடந்தான் றில்லையம்பல முன்றிலம்மாயவனே" என்

னும் திருக்கோவையாருளாயால் நன்குவிளங்கும். இணைத்தாள் என்பது தாளிணை எனமுன்பின்னாகமாறிவந்தது இலக்கணப்போலி.

(7) ஈசனே யென்று மிமயமயி லொப்பனையாள்
நேசனே யென்று நினைந்துருகிப் - பேசினேன்
நல்வினையைக் கண்டே னவையற்றேன் வாழ்வுற்றேன்
வல்வினையைக் கண்டிலேன் மற்று.

(இ - ள்.) ஈசனே என்றும் - சர்வேச்சுரனே யென்றும், இமயம்மயில் - இமயமலையிற்பிறந்த மயிலாகிய, ஒப்பனையாள் - ஒப்பனையம்மையின், நேசனே என்றும் - காதலனேயென்றும், நினைந்து - மனத்தினால் நினைந்து, உருகி - உடலுருகி, பேசினேன் - வாக்கினால் துதித்தேன், நல்வினையைக் கண்டேன் - (இப்படிச்செய்தலாகிய) சிவ புண்ணியத்தைக்கண்டேன், (கண்டவளவில்) நவை அற்றேன் - பாவமறப்பெற்றேன், வாழ்வுஉற்றேன்-நித்தியவாழ்வையடைந்தேன், வல்வினையைக் கண்டிலேன் - (இதற்கு முன்பெல்லாம் என்னைப்பிறவிக்காளாகச்செய்த) வலியவினைகளைக் கண்டிலேன். எ - று.

தக்கன் தன்புத்திரியாகிய தாக்ஷாயணியையும், அவள் நாயகனாகிய சிவபெருமானையும் அவமதித்து யாகஞ்செய்ய, இறைவி அது பொறாமல், சிவபெருமானைக்கொண்டு, அந்த யாகத்தை அழித்து, தன்னைத் தக்கன்மகள் என்று பிறர்சொல்லக் கேட்கும் கருத்தில்லாதவளாய் அவ்வுடலைத்துறந்து, இமயமலையின்பொய்கையில் ஓர் இளங்குழந்தையாய்த்தோன்றி மலையரசனால் வளர்க்கப்பட்ட காரணத்தால் இமயமயில் என்றனர். பார்வதியென்னும் பெயர்க்குக் காரணமும் இதுவே. மயில்உவமையாகுபெயர். மயிலுக்கு நிலம் மலையாகையால் "இமயமயில்" என்றார், ஈசனேயென்று சிவபெருமானை நினைந்துருகிப்புகழ்ந்து, அதனால் புண்ணியம் விருத்திபடையவும், பாவம் தேயவும்பெற்று நித்தியவாழ்வை அடைந்தேன் என்பது கருத்து, கண்டேனிலேன் என்பது கண்டிலேன் எனவந்தது.

(8) மற்றுமொரு தெய்வத்தை வாழ்த்தேன் முழுக்காதல்
பற்றி யுளத்துவைத்துப் பாவியேன் - சிற்றடியேன்
உம்பருமா லும்போற் றொருவன் கருவைநகர்
நம்பெருமா னல்லாது நான்.

(இ - ள்.) சிற்றடியேன் - சிறியதொண்டனாகிய, நான் - யான், உம்பரும் - தேவர்களும், மாலும் - திருமாலும், போற்று - வணங்குகின்ற, ஒருவன் - ஒப்பற்றவனும், கருவைநகர் - திருக்கருவாபுரியிலெழுந்தருளிய, நம்பெருமான்-எம்பெருமானுமாகிய சிவபிரானையே, அல்லாது - அன்றி, மற்றும் ஒருதெய்வத்தை - வேறுமொருதெய்

வத்தை, வாழ்த்தேன் - துதியேன், முழுக்காதல்பற்றி - முழுவிருப் பங்கொண்டு, உள்ளத்துவைத்து - மனத்திலிருத்தி, பாவியேன், பாவனை பண்ணேன். எ - று.

மற்றுபிறிது என்னும்பொருளதாகியஇடைச்சொல். வாழ்த்தேன் பாவியேன்என்னும்எதிர்மறைத்தன்மையொருமை வினைமுற்றுகளில் எதிர்மறை ஆகாரவிகுதி புணர்ந்துகெட்டது. காதல்பற்றி என்பதில் பற்றிகருவிப்பொருளதாகிய மூன்றும்வேற்றுமைச் சொல்லுருபு சிறு அடியேன் என்பதில் "முற்றுமற்றொரோவழி" என்பதனால் உகரங் கெட்டு, "தனிக்குறின் முன்னொற்றுயிர்வரினிரட்டும்" என்பதனால் றகரம் இரட்டிச்சிற்றடியேன் என்றாயது. உம்பருமாலும் போற்றும் ஒருவனாதலால் தன்னைச் "சிற்றடியேன்" என்றார். வாழ்த்தேன், பாவியேன் எனவாய் மனங்களின் செயல்களைக்கூறினாரேனும் "ஒரு மொழியொழி தன்னினங்கொளற்குரித்தே" என்பதனால் காயத்தின் தொழிலாகிய தொண்டுசெய்யேன் என்பதும்பெற்றாம். சிவபெரு மானையன்றி, மற்றைத்தெய்வங்களை மனம், வாக்குக், காயங்களாகிய திரிகரணங்களாலும் வழிபடேன் என்பது கருத்து.

(9) நானிலத்தோர் முன்னே நலனழிந்து நானிருந்தால்
கான நறும்பூங் களவீச - வீனமுரைத்
தென்னைச் சிரிப்பாரொன் றெண்ணாதே யெம்பெருமான்
உன்னைச் சிரிப்பாரு முண்டு.

(இ - ள்.) கான - மணத்தையுடையனவாகிய, நறுபூ - நல்லம லர்களையுடைய, களா - திருக்களா நிழலிலமர்ந்த, ஈச - ஈசனே, நானி லத்தோர் முன்னே - உலகத்தார் முன்னே, நான் - யான், நலன் அழி ந்து இருந்தால் - அழகிழந்திருந்தால், (அவர்) ஈனம் உரைத்து - இழி வுசொல்லி, என்னைச்சிரிப்பார் என்று எண்ணாதே - என்னைப்பரிகசித் து நகைப்பாரென்று நினையாதே, எம்பெருமான் - எம்மிறைவனே, உன்னை சிரிப்பாரும் உண்டு - உன்னைப்பரிகசித்து நகைப்பவரும் உண்டு. எ - று.

பாலையை நீக்கி நானிலம் என்றார். நானிலமாவன:—மருதம், குறிஞ்சி, முல்லை, நெய்தல். நான்கு + நிலம் = நானிலம், நன் - உயிர் 38 ஆம் சூத்திரத்தில் "ஆறேழல்லவற்றின் - ஈற்றுயிர்மெய்யும் எழு னுயிர்மேகும்" என்பதனால் ஈற்றுயிர்மெய்கெட்டு நான் என நின்று "நான்கன்மெய்யே லறவாகும்மே" என்பதனால் னகரம்லகரமாய் நால் என்றாய், "ஈரிடத்தும் வருநத்திரிந்தபின்மாய்வும்" என்றதனால் லகரம்கெட்டு நானிலம் என்றுபுணர்ந்தது. எண்ணாதே எதிர்மறை ஒருமையேவல், இது உலகவழக்கு. எம்பெருமான் உன்னை-இருபெய

ரொட்டுப் பண்புத்தொகையாகக் கொள்ளின் எம்பெருமான் என்பது முன்னிலையில் படர்க்கைவந்த வழுவமைதி. எம்பெருமான் என்பதை அண்மை விளியாகக்கொள்ளின் வழாநிலையேயாம். உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. எம்பெருமானைச் சிரித்தலாவது இச்சேதனனை நலனழியும்படிவிட்டிருத்தல், பரமகாருணியனாகிய சிவபெருமானுக்கு அழகோவென்று குறைகூறி நகைத்தல்.

**(10)** உண்டுபல குற்ற முனையடைந்தே னாதலினால்
கண்டு பொறுத்தல் கடன்கண்டாய் - பண்டுதிரம்
சிந்த வடித்தவனைச் சீறாது பாசுபதம்
தந்தமுக லிங்கநா தா.

(இ - ள்.) பண்டு - முற்காலத்தில், உதிரம்சிந்த - இரத்தமொழுகும்படி, அடித்தவனை - அடித்தவனாகிய அருச்சுநனை, சீறாது - கோபியாமல், பாசுபதம் தந்த - (அவனுக்குப்) பாசுபதத்தைக் கொடுத்தருளிய, முகலிங்கநாதா - முகலிங்கநாதனே, பலகுற்றம் உண்டு-(என்னிடத்துப்) பலதவறுகள் உண்டு, (ஆயினும்) உன்னை அடைந்தேன் ஆதலினால் - உன்னையடுத்தேனாதலால், கண்டு - (என்நிலைமையைக்) கண்டு, பொறுத்தல் - (என்தவறுகளைப்) பொறுத்தருளல், கடன் - உனக்குக் கடன்மையாம். எ - று.

கண்டாய் முன்னிலையசை இடைச்சொல். பசுபதியாகிய சிவபெருமானுடைய அஸ்திரம்பாசுபதம் என்றுணைத்தத்திதாந்தம்என்பர். பசுபதி=ஆன்மாக்களுக்கு இறைவன். திருக்கருவையில் களாச்செடியின்கீழ் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுக்கு முகலிங்கநாதர் என்றுபெயர். முகலிங்கநாதர் - திருமுகம்விளங்கிய லிங்கசொரூபமாகிய இறைவர். இத்திருக்கோலம் வியக்தாவியக்தம் என்னப்படும். முற்காலத்தில்உதிரஞ்சிந்தும்படி அடித்த அருச்சுனனைவெறுக்காமல், அவனுக்குப்பாசுபதாஸ்திரம் கொடுத்தருளினாற்போல, என்குற்றங்களைத் திருவுளத்தடையாமல் என்னையுங் காத்தருள வேண்டுமென்பது கருத்து.

அர்ச்சுனன் வில்லால் அடித்தசெய்தி:—அர்ச்சுனன் பாசுபதாஸ்திரம்பெறும்பொருட்டுக் கைலைக்குச்சென்று சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்கையில், அவ்வருச்சுனனைக் கொல்லத் துரியோதனனேவலால் பன்றியினுருவங் கொண்டுவந்த மூகாசுரனைவதைத்து அடியானைக் காக்கும்பொருட்டுச் சிவபெருமான் வேடனுருவம் பூண்டு, அப்பன்றியை அம்பாலெய்துகொன்று, அர்ச்சுனனோடு விளையாட்டாகப் போர்செய்கையில் அவ்வருச்சுனன் வில்லாலடிக்க, சிவபெருமான் பார்வதியுடன் சேவைசாதித்துத் தன்னைவணங்கித்துதித்த அருச்சுனனுக்குப் பாசுபதாஸ்திரம் கொடுத்தருளினர் என்பது.

(11) நாதா தமிழ்க்கருவை நம்பா வெனக்கினிய
தாதா வெனவுன் சரணடைந்துங் - காதுசின
வெவ்விடையின் வீதி விடங்கனே நாடோறும்
இவ்விடரின் வாடுவதென் யான்.

(இ - ள்.) காது - (பகைவரைக்) கொல்லுகின்ற, சினம் - கோபத்தையுடைய, வெம் - வெவ்விய, விடையின் - இடபவாகநத்தின் மீது, வீதி விடங்கனே - திருவீதியிலெழுந்தருளுகிற அழகனே, யான் - நான், நாதா - தலைவனே, தமிழ் - தமிழ்வழங்குகின்ற, கருவை - திருக்கருவையி லெழுந்தருளிய, நம்பா - நம்பனே, எனக்கு இனியதாதா - எனக்கு இனிமையாகிய தந்தையே, என - என்று துதித்து, உன் சரண் அடைந்தும் - உன் திருவடியைச்சேர்ந்தும், நாள் தோறும் - தினந்தோறும், இ இடரின் - இந்தப்பிறவித்துன்பத்தால், வாடுவது என் - வாட்டமடைதற்குக் காரணம்யாது. எ - று.

பசுபதி ஆகையால் நாதா என்றும், செந்தமிழ்வழங்குநிலமாகிய பாண்டிநாட்டிலுள்ளதாகையால் தமிழ்க்கருவை என்றும், ஆன்மகோடிகள் முத்தியடைதற்குப்பூர்ணமாக நம்புதற்குரியன் ஆகையால் நம்பா என்றும், தம்புத்திரர்களை நல்வழிப்படுத்த முயலும் பிதாக்கள் எவரினும் சிறந்த பரமபிதா ஆகையால் இனிய தாதா என்றும் கூறினார். வலியத் தடுத்தாட்கொள்ளும் கருணாமூர்த்தியாகிய உன்னைச் சரணடைந்தும் என்னை, இவ்விடரில் வாடவிடுவது ஓர்வியப்பு என்பார் என் என்றும் கூறினர். தோறும் காலப்பன்மையையுணர்த்தி ஏழாம்வேற்றுமை யிடப்பொருளில்வந்த இடைச்சொல். விடங்கன் - அழகன்.

(12) யாவ னமர ரிடர்தீர நஞ்சுண்டான்
யாவன் கருவை யினிதுறைந்தான் - யாவன்
தவநேர்மை கண்டு தனக்கடிமை கொள்வான்
அவனே யெனையாண் டவன்.

(இ - ள்.) அமரர் இடர்தீர - தேவர்களுடைய துன்பம்நீங்க, நஞ்சு உண்டான் - விஷத்தையுண்டவன், யாவன் - எவன், கருவை - திருக்கருவையில், இனிது உறைந்தான் - இனிதாக வீற்றிருந்தவன், யாவன் - எவன், தவநேர்மைகண்டு - (ஆன்மாக்கள்செய்யும்) தவத்தினது செம்மையைக் கண்டு, தனக்கு அடிமை கொள்வான் - (அவர்களைத்) தனக்கடிமைகளாகக்கொண்டருள்வோன், யாவன் - எவன், அவனே - அந்தச்சிவபிரானே, என்னை ஆண்டவன் - என்னையாண்டருளினவன். எ - று.

அமரர் - மரணமில்லாதவர். பிரளயகாலத்தில் மரணமடையும் தேவரை மரணமில்லார் என்றது மங்கலவழக்கு. இனிது;குறிப்பு வினையெச்சம். கொள்வான் என்பதில் வகர இடைநிலை தன்மையை யுணர்த்தியது. யச்சப்தம் தச்சப்தத்தைக்கொண்டு முடியும் என்னும் வடநூலார் மதம்பற்றி, வினைப்பெயர்களாகிய யாவன் என்னும் மூன் றனையும் சுட்டுப்பெயர்களாகிய அவன் என்பதனோடு கூட்டிமுடித்தார்.

(**13**) ஆண்டவனே தென்கருவை யாதியே யாடரவம்
பூண்டவனே யென்றுதினம் போற்றிடவு - நீண்டதுயர்
போகா திருக்குமோ பொங்கிருளு நிற்குமோ
மாகா தவன்றேர் வரின்.

(இ - ள்.) ஆண்டவனே - என்னை யாண்டருளினவனே, தெ ன்கருவை ஆதியே - தென்கருவாபுரிமுதல்வனே, ஆடு அரவம்பூண் டவனே - (படமெடுத்து) ஆடுகின்ற பாம்புகளை ஆபரணமாகப்பூண் டவனே, என்று தினம்போற்றிடவும் - என்று நாள்தோறும் துதியா நிற்கவும், நீண்டதுயர் - பெருந்துன்பமானது, போகாது இருக்கு மோ - என்னைவிட்டு நீங்காமலிருக்குமோ, மாக ஆதவன்தேர்வரின்- ஆகாயத்தில் சஞ்சரிப்பவனாகிய சூரியனது தேர்வருமாயின், (அதற் குமுன்) பொங்கு இருளும் நிற்குமோ - மிக்க இருளும் நீங்காது நிற்குமோ. எ - று.

உயிர்கள் அடிமையும், இறைவன் ஆள்பவனுமாகையால் ஆண்ட வனேயென்றார். பிறவிகள்தோறும் நீங்காது அநுபவிக்கக்கிடத்த லால் நீண்டதுயர் என்றார். மாக+ஆதவன்=மாகாதவன்; இதுதீர்க்க சந்தி. ஆதவன்வரின் என்னுமல் ஆதவன்தேர்வரின் என்ற உவமை யால் ஞானோதயமாகும்போதே நீண்டதுயர் நீங்கும் என்பது விள ங்குகின்றது. "விளக்குப்புகவிருள் மாய்ந்தாங்கொருவன் தவத்தின் முன்னில்லாதாம் பாவம்" என்றார் பிறரும். இறைவனைப்போற்றிடு தலேதவம். போற்றிடுதலாகிய தவத்தைச்செய்வோர்க்கு இதுவரை யும் போற்றாமையாலாகிய பாவத்தின் காரியமாகிய நீண்டதுயர் போ கும் என்பது விளங்குகிறது.

(**14**) வரந்தருமிப் பார்புரக்கும் வாழ்வுதரும் விண்ணோர்
தரந்தரும்பே ரின்பந் தருமால் - பரந்து
துளவீசன் றேடுந் துணைத்தாட் கருவைக்
களவீச னென்றுரைத்தக் கால்.

(இ - ள்.) துளவு ஈசன் - துளசிமாலையைத்தரித்த இறைவனா கிய திருமால், பரந்துதேடும் - வியாபித்துத்தேடுதற்குரிய, துணை தாள் - இரண்டு திருவடிகளையுடைய, கருவைக்களவீசன் என்று -

திருக்கருவைக் களவீசனேயென்று, உரைத்தக்கால் - (புகழ்ந்து)சொன்னால், (அவன்) வரம்தரும் - வேண்டியவரங்களைக் கொடுத்தருளுவன், இப்பார்புரக்கும் வாழ்வுதரும்-இவ்வுலகையாளுகின்ற பெருவாழ்வைக் கொடுத்தருளுவன், விண்ணோர் தரம்தரும் - தேவர்களுடைய மேன்மையைக் கொடுத்தருளுவன், பேர் இன்பம்தரும் - பேரானந்தத்தையுங் கொடுத்தருளுவன். எ - று.

தரும்என்னும் ஆண்பாற் செய்யுமென் வாய்பாட்டுவினைமுற்று மூன்றும் அவன் என்னும்தோன்றாஎழுவாய்க்குப்பயனிலையாய் வந்தன. பார் பண்பாகுபெயர், பகுதி - பருமை. சிவஸ்துதியானது இம்மை மறுமை வீடென்னும் மூன்றனையுந்தருமென்பதுகருத்து.

(15) காலத்தாற் கால படராற் கருமறலி
சூலத்தா லாவி தொலைவனோ - ஞாலத்துள்
தேன்பற்றும் பூங்களவிற் செல்வன் றிருவடியைத்
தான்பற்றும் பற்றுடையான் றான்.

(இ - ள்.) ஞாலத்துள் - உலகத்தில், தேன்பற்றும் - தேன்பொருந்திய, பூ - மலர்களையுடைய, களவில் - திருக்களாநிழலிலமர்ந்த, செல்வன் - பெருஞ்செல்வனாகிய சிவபிரானது, திருவடியைத்தான் பற்றும் - திருவடியையே பற்றுகின்ற, பற்று உடையான் - விருப்பத்தையுடையவன், காலத்தால் - காலவரையறையாலும், காலபடரால் - யமபடராலும், கருமறலி சூலத்தால் - கருமையாகிய இயமனது சூலாயுதத்தாலும், ஆவிதொலைவனோ - உயிர்நீங்குவனோ. எ-று.

பற்றுடையான் தொலைவனோ எனவினைமுடிக்க. தன் திருவடியைத் தஞ்சமாகப்பற்றிய மார்க்கண்டேயனுக்கு அளவுசெய்திருந்த பதினாறுவயதாகிய காலவரையறையைக்கெடுத்து, யமனால் ஆவிதொலையாது அவன் ஆவியையே தொலைவித்தது லோகபிரசித்தமாகையால் "காலத்தால் காலபடரால் கருமறலிசூலத்தாலாவி தொலைவனோ" என்றார். காலபடர் - யமதூதர். மறலி - எவராலும் மறுக்கப்படாதவன். இருவகைப்பற்றினையும்விட்டு அவன் திருவடிகளிலேயே பற்றுசெய்யவேண்டும் என்பார் "திருவடியைத்தான்" எனத்தேற்றப் பொருள்தரும் இடைச்சொல்லைச் சேர்த்துக் கூறினார். பின்னுள்ளதான் அசை. "காலனையும்வென்றோங் கடுநரகங்கைகழன்றோம், மேலையிருவினையும் வேரறுத்தோம் - கோல, அரணாரவிந்தமிழிய வெந்நியம் பெய்தான், சரணாரவிந்தங்கள்சார்ந்து" என்றார் காரைக் காலம்மையாரும்.

(16) தானேவந் தென்னைத் தடுத்தடிமை கொண்டானை
யானே பிறக்கு மெழுபிறப்பும் - வானில்

சிறந்திருக்குந் தென்கருவைச் செல்வனையெண் ணாமல்
மறந்திருக்கு மோவென் மனம்.

(இ - ள்,) யானே பிறக்கும் எழுபிறப்பும் - யான்சென்று பிறக்கும் எழுபிறப்பினும், என் மனம் - என் மனமானது, தானேவந்து - தானாகவே யெழுந்து, என்னை தடுத்து அடிமை கொண்டானை - என்னைத் தடுத்தாட்கொண்டவனை, வானில் சிறந்து இருக்கும் - விண்ணுலகத்தினுஞ் சிறந்திருக்கிற, தென் கருவைச் செல்வனை - தென்கருவாபுரிச்செல்வனை, எண்ணாமல் - நினையாமல், மறந்து இருக்குமோ - மறந்திருக்குமோ. எ - று.

தானேவந்தென்னைத் தடுத்தடிமை கொண்டான் என்பதனை இரண்டாஞ்செய்யு ளுரையிற்காண்க. ஆன்மாக்கள் வினைவசத்தால் உடலோடுகூடி பிறத்தலால் "யானேபிறக்கும்" என்றார்; எழுபிறப்பாவன:—தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பன. "எழுமையெழுபிறப்பு முள்ளுவர்தங்கண் - விழுமந் துடைத்தவர்நட்பு" என்றமேலோர்வாக்கியப்படி, ஒருபிறவியிலுண்டாகும் சிறியதுன்ப மொழித்தாரை எழ்பிறவியளவும் மறவாமையை வற்புறுத்தலா யிருத்தலால், பலபிறவிப்பெருந் துன்பத்தைத் தொலைத்துத் தடுத்தடிமைகொண்டானை எவ்வாறுமறத்தல் கூடுமென்பார் "தானேவந்தென்னைத் தடுத்தடிமை கொண்டானை........... யெண்ணாமல் மறந்திருக்குமோவென்மனம்" என்றார்.

(**17**) மனமொழிந்து காம மயக்கொழிந்து மாறாச்
சினமொழிந்து வாதனையுந் தேய்ந்தா - லினிய
குருக்களாய் வந்தடிமை கொண்டுவீ டுய்க்கும்
திருக்களா வாழுஞ் சிவம்.

(இ - ள்.) மனம் ஒழிந்து - மனமிறந்து, காம மயக்கு ஒழிந்து - காமமயக்கம் நீங்கி, மாறாசினம் ஒழிந்து - நீங்காத கோவமொழிந்து, வாதனையும் தேய்ந்தால் - வாசனைகளும் குறையுமாயின், திருக்களாவாழும் சிவம் - திருக்களாநிழலில் வாழ்கின்றபரமசிவம், இனிய குருக்கள் ஆய் வந்து - இனிய குருமூர்த்தமா யெழுந்தருளி, அடிமைகொண்டு - ஆட்கொண்டருளி, வீடு உய்க்கும் - முத்தியுலகிற் செலுத்தும். எ - று.

மனம் ஒழிதலாவது மனம் உலகவாசனையை விட்டுச் சிவத்தியானத்தழுந்தல். மனம் சிவத்தியானத் தழுந்துதலும், அம்மனக் குற்றங்களாகிய காம வெகுளி மயக்கங்கள்அறும், அவைஅறவே அவற்றின் காரியமாகிய வாதனையும்ஒழியும். அதன்பின் சிவபெருமான் குருமூர்த்தமா யெழுந்தருளி முத்திதந்தருள்வன். உட்பகையாய்

நின்று அருள்முதலியாட்பினையும்பிரித்துப் பிறவித்துன்பமு மெய்து விக்கும் சினம் நற்குணமுடைய முனிவரிடத்தும் ஓரோவழிதோன் றுதலின் "மாறுச்சினம்" என வேறுக்கிக் கூறினர். இதனை "குண மென்னும் குன்றேறிநின்றார் வெகுளி" என்னும் திருக்குறளானு மறிக. மயக்குமுதனிலைதிரிந்ததொழிற்பெயர். காமமயக்கு அஃறிணை உம்மைத்தொகை பன்மையீறுபெறாமல் முடிந்தது, "உயர்திணை உம்மைத்தொகை பலரீறே" என்றமையால், அஃறிணையும்மைத் தொகை பன்மை விகுதி பெற்றும் பெறாதும் வரும். வீடுமுதனிலை திரிந்த தொழிற்பெயர், இது முற்றவிடுதலாகிய காரணத்தால் உண் டாகும்காரியமாகிய முத்திக்கு ஆதலால் காரணவாகுபெயர். சிவம் எனப் பால்பகாவஃறிணையாற்கூறியதற்கேற்க, உய்க்கும்எனச்செய்யு மென் வாய்பாட்டு வினைமுற்றைக்கொண்டு முடித்தனர், சிவம் - மங் கலகரம்.

(18) சிவகருமஞ் செய்யார் திருநீறு சாத்தார்
தவநிலையாஞ் சைவநெறி சாரா - ரவனிதனில்
கான்பரந்த பச்சைக் களாநிழலைக் கைதொழார்
ஏன்பிறந்தார் மானிடரா யின்று.

(இ - ள்.) சிவகருமம் செய்யார் - சிவபுண்ணியங்களைச் செய்யா ர்கள், திருநீறுசாத்தார் - திருவெண்ணீற்றை அணிபார், தவநிலைஆம்- தவநிலையாகிய, சைவநெறி சாரார் - சைவமார்க்கத்தைச் சாரமாட் டார்கள், அவனிதன்னில் - பூமியில், கான்பரந்த - வாசனைபரவிய, பச்சை - பசுமையாகிய, களாநிழலை - திருக்களாநிழலை, கைதொழார்- கைகூப்பிவணங்கார்கள், (இவர்கள்) இன்று-இப்பொழுது,மானிடர் ஆய் - மானுடராகி, ஏன்பிறந்தார் - ஏன்ஜனிமித்தார்கள். எ - று.

கன்மவசத்தால், தலைவனைமறந்து பிறவிப்பிணியில்பட்டு வருந் தும் ஆன்மாக்களுக்கு வீடடைதற்கேற்ற மானிடப்பிறவிவாய்த்தும் அதன்பயனாகிய சிவகருமம்முதலியவற்றைத் தேடிக்கொள்ளாமைக் கிரங்கி "ஏன்பிறந்தார் மானிடராயின்று" என்றார். மானிடப்பிறவி அருமையுடையதென்பதனை "அரிது அரிது மானிடராதலரிது" என் பதனுனுமறிக. சிவகருமமாவது - சிவசம்பந்தமாகிய திருத்தொண்டு முதலிய சற்கருமம். திருநீறுமுத்திமுதலிய எல்லா நன்மைகளையும் தருதலின் "திருநீறுசாத்தார்" என்றார். திருநீற்றின் மகிமையை "முத்திதருவதுநீறு முனிவரணிவதுநீறு, சத்தியமாவதுநீறு தக்கோர் புகழ்வதுநீறு, பத்திதருவதுநீறு பரவவினியதுநீறு, சித்திதருவது நீறு திருவாலவாயான்திருநீறே" என்னும் திருஞானசம்பந்தசுவாமி கள் அருளிச்செய்த திருவாலவாய்த் திருநீற்றுப் பதிகத்தாலறிக.

சைவசமயநெறியில் ஒழுகுதலே தவநிலை என்பதுதோன்ற "தவநிலை யாஞ் சைவநெறி" என்றார்.

(19) இன்று வருந்துயரந் தீர்ந்தோ மினிச்சிலநாள்
சென்று வருந்துயரந் தீர்ப்பாரா - ரென்று
வருந்தாதே நெஞ்சே மலர்க்களவி னீழல்
இருந்தா னொழிப்பா னிடர்.

(இ - ள்.) நெஞ்சே - மனமே, இன்றுவரும் துயரம்தீர்ந்தோம்- இப்பொழுது வருந்துன்பத்தை நீங்கினோம், இனிச்சிலநாள்சென்று வரும்துயரம் - இனிச்சிலநாள்கழித்து வருந்துன்பத்தை, தீர்ப்பார் - நீக்குவோர், ஆர் என்று - யாரென்று, வருந்தாதே - நீ வருந்தாதிரு, மலர்களவின்நீழல் இருந்தான் - மலர்களையுடைய களாநிழலிலிருந்த சிவபிரான், இடர் ஒழிப்பான் - நமது துன்பத்தை நீக்கியருளுவன்.

இன்று வருந்துயரம் என்றது இப்பிறவியிற் றுன்பத்தையும், இனிச்சிலநாள் சென்று வருந்துயரம் என்றது மேல்வரக் கடவனவாகிய பிறவியிற்றுன்பத்தையும் உணர்த்தும். இவ்விருதுன்பத்தையும் களாநிழலமர்ந்த கண்ணுதல் களைவன் ஆதலால், மனமே, நீவருந்தாதே யென்பதுகருத்து. நிழல் நீழல் என நீட்டல் பெற்றது. "எச்சப்பெயர் வினையெய்துமீற்றினும்" என்னும் சூத்திரத்தில் ஈற்றினும் என்ற உம்மையால் இடர் என்னும் இரண்டாம் வேற்றுமைத் தொகையின் முடிக்குஞ்சொல்லாகிய ஒழிப்பான் என்பது முன்னே வந்தது. இனிச் சிலநாள் சென்று வருந்துயரம் என்றது மரணத் துன்பத்தை யெனினுமாம் "இந்தமாவிறப்பிற் றுன்பம் பவத்துன்பத் தெண்மடங்கே" என்றார்பிறரும்.

(20) இடர்க்கடலுக் கோட மிதயவிருட் கென்றாழ்
உடற்பகையை வேரறுக்கு மொள்வா - ளிடப்புறத்தைச்
சூல்வண்ண மேகச் சுரிகுழலுக் கீந்தருளும்
பால்வண்ண நாதன் பதம்.

(இ - ள்.) இடப்புறத்தை - இடதுபாகத்தை, சூல் - கருப்பங்கொண்ட, வண்ணம் - அழகாகிய, மேகம் - மேகம்போன்ற, சுரிகுழலுக்கு - சுரிந்த கூந்தலையுடையவளாகிய உமாதேவிக்கு, ஈந்தருளும்- கொடுத்தருளிய, பால்வண்ணன் - பால்வண்ணனென்னுந் திருநாமத்தையுடைய, நாதன் - இறைவனது, பதம் - திருவடி, இடர்கடலுக்கு ஓடம் - துன்பக்கடலைக் கடத்தற்கு மரக்கலமாகும், இதய இருட்கு என்றாழ் - மனவிருளை நீக்குதற்குச் சூரியனாகும், உடல் பகையை - சரீரமாகிய சத்துருவை, வேர் அறுக்கும்-வேருடன்சேதிக்கிற, ஒள்வாள் - ஒட்பமாகிய வாளாகும். எ - று.

இடர் - பிறவித்துன்பம். இதுகாரண காரியத்தொடர்ச்சியாய்க் கரையின்றிவருதலின் கடலாக உருவகஞ்செய்யப்பட்டது. கடலில் அகப்பட்டுக்கரைகாணுது வருந்துவோர் அதனைக்கடப்பதற்கு ஓடத்தைத்தேடுதல்போல, உலகியல்பை நினையாது இறைவனடியையே அக்கடலைக்கடத்துவிக்கும் புணையாகநினைந்து பற்றுவராயின் பிறவியற்று முத்தியடைவர் என்பதுதோன்ற "ஓடம்" என்றார். மனக்குற்றங்களாகிய காமவெகுளிமயக்கங்களை இருளாக உருவகஞ்செய்ததற்கேற்ப, அதனை நீக்கவல்ல திருவடியைச்சூரியனுகவும்,சிற்றின்பத்திற்கேதுவாகிய செல்வத்தின்கண்ணும் அதனை அனுபவிக்கும் யாக்கையின்கண்ணும் புல்லறிவால் பற்றுச்செய்ய, அப்பற்று பிறவித்துன்பத்தை விளைவித்து முத்தியடையவொட்டாது தடுத்தலால் உடலைப் பகையாகவும், அவ்வுடற்பகையை முற்றுங்கெடுக்கவல்ல இறைவனுடைய திருவடியை வாள் என்றும் உருவகஞ்செய்தார். ஓடம் தொழிலடியாகப்பிறந்தபெயர்; அம்-வினைமுதற்பொருள் உணர்த்தியது. சூல்வண்ணமே கச்சுரிகுழல் என்பது சூலைக்கொண்ட வண்ணமாகிய மேகம்போன்ற சுரிந்தகுழலினையுடையாள் எனவிரிதலால் பன்மொழித்தொடர்பற்றிவந்த அன்மொழித்தொகைக்காரணப்பெயர்.

உமாதேவிக்கு வாமபாகம் கொடுத்தருளிய செய்தி:—பிருங்கி முனிவர் சிவபிரானைமாத்திரம் வலம்வருவதைக்கண்ட உமாதேவியார் தம் நாயகனைநோக்கி, முனிவர் என்னை வலம் வராமைக்குக் காரணம்யாதென்றுகேட்க, சிவபெருமான் இஷ்டசித்தி பெறவிரும்புவோர் உன்னையும், மோக்ஷம் பெறவிரும்புவோர் என்னையும் வலம் வருவாரென்றார். அஃதுணர்ந்த உமாதேவியாரும் சிவபிரானொடு பிரியாதிருக்கத் தவஞ்செய்து இடப்பாகம் பெற்றார் என்பது.

(**21**) பதமறிந்து வாய்பார்த்துப் பற்றுத புல்லர்
இதமறிந்தாங் கின்சொ லியம்பி - மதிகலங்கி
நன்னாள் கழித்துவிட்டே னாதமுக லிங்கவுனை
எந்நா ணினைப்பே னினி.

(இ - ள்.) பதம்அறிந்து - சமயமறிந்து,வாய்பார்த்து - (அவர்) வாயைப்பார்த்து, பற்றுத - ஒன்றுக்கும் தகுதிபற்ற, புல்லர் - அற்பருடைய,இதம் அறிந்து - உரிமையை யுணர்ந்து, ஆங்கு இன்சொல் இயம்பி - அவரிடத்து இனியசொற்களைச்சொல்லி ,மதிகலங்கி-அறிவு கலங்கி, நல்நாள் கழித்துவிட்டேன் - நல்லவாழ்நாட்களைப் போக்கிவிட்டேன், நாத - இறைவனே, முகலிங்க-முகலிங்கனே, உன்னை - நின்னை, இனி எந்நாள்நினைப்பேன் - இனி யெந்தநாளில் நினைக்கப் போகிறேன், எ - று.

ஒருவரிடத்தில் ஒன்றைப்பெற விரும்புவோர் அவர்கள் சந்தோஷித்திருக்கும் சமயம்பார்த்துக்கேட்டு அவர் மறுமொழிகூறும் வரை அவர்வாயைப்பார்த்து வாளா இருப்பராதலால் "பதமறிந்து வாய்பார்த்து என்றும், அவர் கொடாத புல்லரென்று அறிந்தும் தமது வறுமையால் இன்சொற்கூறி இரப்பின் ஈவரென்றுகருதிஅவ்வாறு கேட்டலால் "பற்றுதபுல்லரித மறிந்தாங்கின் சொலியம்பி" என்றும், அவ்வாறுகேட்டும் கொடுக்கப்பெறுதபோது அறிவுகலங்கி வருந்துதலால் "மதிகலங்கி" என்றும் கூறினர். சிவத்தியானஞ்செய்து முத்தியடைதற்கேற்ற அரியமானிடப்பிறவிவாய்த்த நாளாகையால் "நன்னாள்" என்றார். இனிக்கணப்போதேனும் இவ்வுடலோடு நிற்றல் நிச்சயம் அன்று ஆதலாலும் கழிந்தகாலம் மீணடும் வராதாகையாலும் "கழித்துவிட்டேன்" என்று வருந்திகூறினர்.

(**22**) இனிய வமுதை யிருங்களா வின்கட்
கனியைவளர் முக்கட் கரும்பைப் - பனியிமயக்
கொம்பினொடுங் கண்டேன் கொடும்பாவ மோகவிடாய்
வெம்புதுயர் கண்டிலேன் மேல்.

(இ - ள்.) இனியஅமுதை - இனிதாகிய அமிர்தத்தை, இருகளாவின்கண் கனியை - பெரியகளாப்பழத்தை, வளர் - விருத்தியடையாநின்ற, முக்கண்கரும்பை-மூன்று கணுக்களுள்ள கரும்பை, பனி - குளிர்ச்சியாகிய, இமயக்கொம்பினொடும் - பார்வதியோடும், கண்டேன் - தரிசனம்செய்தேன், மேல் - பிறகு,கொடும்பாவம் மோகவிடாய் - கொடியபாபரூபமாகிய காமவிடாயினுல், வெம்பு - வெதும்புகின்ற, துயர்கண்டிலேன் - துன்பத்தைப்பார்த்திலேன், எ - று.

இறைவன் ஜனனமரணங்களை நீக்கி நித்தியமாகிய முத்தியைத் தருபவனாதலால் "இனியவமுதை" யென்றும், இருவினையாகிய இடரிற்பட்டு விடாய்த்துவந்த எவர்க்கும் அவ்விடாயைத் தீர்த்துக்கொள்ள எளியனாய்வீற்றிருத்தலால் "இருங்களாவின்கட்கனியை" என்றும், தன்னை அனுபவிக்குந்தோறும் இரதம் ஊறுகின்ற தன்மையுடையவனாதலால், பலகணுக்களையுடையனவாய்த் தின்னத்தின்னச் சாரமற்று சுவைகுறைந்தொழிகின்ற சாதாரண கரும்பென்னமல் மேலுமேலும் இரதம் ஊறுகின்ற கரும்பென்பதற்கு "வளர்முக்கட்கரும்பை" என்றும், வாமபாகத்தில் வீற்றிருக்கும் அருட்சத்தி இமயமலையிற்றோன்றினமையால் "பனியிமயக்கொம்பினொடும்" என்றும் கூறினர். இது உருவகவலங்காரம். துணிவுபற்றி கண்டிலேன் என இறந்தகால எதிர்மறை வினைமுற்றாற்கூறினர். இனிய-குறிப்புப்பெயரெச்சம்.

உமாதேவி இமயமலையிற்பிறந்த செய்தி:—தக்கன் தன்புத்திரியாகிய தாக்ஷாயணியையும், அவள்நாயகனுகிய சிவபெருமானையும் அவமதித்து யாகஞ்செய்ய, இறைவி அதுபொருமல் சிவபிரானைக் கொண்டு அந்தயாகத்தை அழித்து, தன்னை அத்தக்கன்மகளென்று பிறர்சொல்லக்கேட்கும் கருத்தில்லாதவளாய் அவ்வுடலைத் துறந்து இமயமலையின்பொய்கையில், ஓர் இளங்குழந்தையாய்த்தோன்றி, அம்மலையரசனுல் வளர்க்கப்பட்டகாரணத்தால் இமயவல்லி எனப்பெயர் பெற்றனள்.

(**23**) மேலாம் பதத்தில் விடுவையோ வன்றியென
ஏலா நரகத் திடுவையோ - சீலமிலா
வஞ்சித்த ருள்ள மருவாக் களவீச
உன்சித்த மேதோ வுரை.

(இ - ள்.) சீலம்இல்லா - நல்லொழுக்கமில்லாத, வஞ்சித்தர் - வஞ்மனத்தை யுடையவரது, உள்ளம் மருவா - இதயத்திற் சேராத, களவீச - களவீசனே, மேலாம்பதத்தில் விடுவையோ - மேலாகிய மோக்ஷபதத்தில் விடுவாயோ, அன்றி-அல்லது, எனை-என்னை, ஏலா-தகாத, நரகத்து இடுவையோ-நரகத்தில் தள்ளுவாயோ, உன்சித்தம் ஏதோ - உன்திருவுள்ளம்யாதோ, உரை - சொல்வாயாக, எ - று.

இறைவன் உடையவனும், ஆன்மாக்கள் உடைமையும் ஆதலால் உடையவன் எதுவும் செய்யக்கூடும் எனவெண்ணி "உன்சித்த மேதோ உரை" என்றார். "நன்றேசெய்வாய் பிழைசெய்வாய் நானோ இதற்கு நாயகமே" என்றார் திருவாதவூரடிகளும். விடுவை, இடுவை முன்னிலையொருமை வினைமுற்றுகள். ஓகாரம்-ஐயம்.

(**24**) உரைகடந்த வேதத் துயர்வெற்பை யுள்ளும்
கரைகடந்த ஞானக் கடலை - விரிபூ
மருக்கோல வண்டுநுகர் வண்களா நீழற்
றிருக்கோயி லிற்கண்டேன் சென்று.

(இ - ள்.) உரைகடந்த-சொல்லைக்கடந்த, வேதத்துஉயர்வெற்பை - வேதத்திலுயர்ந்து தோன்றும்மலையை, உள்ளம் கரைகடந்த ஞானக்கடலை - மனமாகிய கரையைக்கடந்த ஞானசாகரத்தை, விரி-மலர்ந்த, பூ-மலர்களின், மரு-மணமுள்ளதேனை, கோலம்வண்டுநுகர்-அழகாகிய வண்டுகள் புசிக்கிற, வண்களாநீழல் - வளமாகிய களாநிழலிலுள்ள, திருக்கோயிலில் - திருக்கோயிலினிடத்து, சென்று கண்டேன் - போய்த்தரிசித்தேன், எ - று.

வேதபிரதிபாத்தியனுகையால் "வேதத்துயர்வெற்பை" என்றார். தன்கண்தங்கும் எவற்றையும் பொறுத்தலும், அளவிடப்படாத பெரு

மையும்,உயர்வும், தன்னை யடைந்தவர்களுக்குப்பயன்படும் தன்மையும் முதலியகுணங்கள் உடைமைபற்றி இறைவனை உபர்வெற்பாக உருவகஞ்செய்தார். இயற்கை உணர்வின னுதலாலும் முற்றுமுணர்தல்முதலிய சகலகலியாணகுணங்களையுடையவனுதலாலும் "ஞானக்கடல்" என்ருர். சேதனர்களுடைய வாக்குக்கும் மனத்துக்கும் எட்டப்படாத இவ்வகைப்பட்ட இறைவனை திருக்கருவையில் எளிதிற் கண்டுகொண்டேன் இது என்னஆச்சரியம் என்பதுகருத்து. கோயில்-இலக்கணப்போலி.

(25) சென்றது காலஞ் சிதைந்த திளமைநலம்
நின்றதுசா வென்று நினைந்துருகி-மன்றில்
நடிக்கின்ற பால்வண்ணர் நாமமெண்ணு மாந்தர்
படிக்கின்ற நூலெல்லாம் பாழ்.

(இ - ள்.) காலம்சென்றது - காலங்கழிந்தது, இளமை நலம் சிதைந்தது - இளமை யழகுகெட்டது, சாவுநின்றது - இறத்தலொன்றுமேயெஞ்சிநின்றது, என்று நினைந்து - என்று எண்ணி, உருகி - மனங்கரைந்து, மன்றில்நடிக்கின்ற - அம்பலத்தில் நடனம்பண்ணுகிற, பால்வண்ணர் - பால்வண்ணரது, நாமம் எண்ணு - திருநாமத்தை நினையாத, மாந்தர் - மக்கள், படிக்கின்ற நூல் எல்லாம் - படிக்கின்ற சாத்திரங்களெல்லாம், பாழ் - பயனற்றனவேயாம், எ - று.

மனமொழி மெய்கள் அலைவில்லாமல் நிற்பதற் கேதுவாகிய இளமைப் பருவத்தை, இறைவனை மனனஞ்செய்யாது வீணேகழித்து மரணத்துன்பத்துக் கிலக்கா யிருப்பவரைநோக்கி, இவர் அன்பர்களாகிய வியாக்கிரபாத பதஞ்சலிமுனிவர்களுக்காகச் சிவபெருமான் சிதம்பரத்தில் திருநடனஞ்செய்ததைக்கண்டிருந்தும்அச்சிவபெருமானைத்துதித்து உச்சிவியாமைக்கு இரங்கி "மன்றில் நடிக்கின்றபால்வண்ணர் நாமமெண்ணு மாந்தர் படிக்கின்ற நூலெல்லாம் பாழ்"என்ருர். "கற்றதனலாய பயனென்கொல்வாறிவன் - நற்றுடொழாஅரெனின்" என்ருர் திருவள்ளுவநாயனுரும். மாந்தர் - நித்தியபகுவசனம்.

(26) பாழிற் சமயப் படுகுழியில் வீழாமல்
ஊழி லெனைக்காத் துதவினுய் - காழி
வருமதலைச் சொற்கா மலர்ந்தமுக லிங்கா
பெரும தலையாய பேறு.

(இ - ள்.) காழிவரும் - சீகாழியில் அவதரித்த, மதலைச்சொற்கு ஆ-குழந்தையாகிய சம்பந்தரது பாடலின்பொருட்டு, மலர்ந்த - (மகிழ்வால்) விரிந்த, முகலிங்கா-முகலிங்கனே, பெரும - பெருமானே,

பாழில் - பாழாக, சமயப்படுகுழியில் வீழாமல் - சமயப்படுபள்ளத்தில் விழாமல், ஊழில் - முறையாக, என்னைக்காத்து - என்னைக்காத்தருளி, தலையாயபேறு - முதன்மையாகியவீடுபேற்றை, உதவினாய் - எனக்குத் தந்தருளினாய், எ - று.

சமயப்படுகுழி என்றது உலகாயிதம், புத்தம், சமணம், மீமாஞ்சை, பாஞ்சராத்திரம், பட்டாசாரியம் என்னும் புறச்சமயங்களை. சொல் - தன்னாலாகிய பாடலை யுணர்த்தலால் கருவியாகுபெயர். உதவினாய் துணிவினால் எதிர்காலம் இறந்தகாலமாய்வந்த வழுவமைதி.

**(27)** பேறுபெற்றேன் வாழ்ந்தேன் பிறருக் கினியஞ்சேன்
ஆறுபெற்ற வேணியனுக் காட்பட்டே - னூறுவட்டம்
சிந்தித்தே னெஞ்சிற் றிருக்களவைக் கைகூப்பி
வந்தித்தேன் றீர்ந்தேன் மயல்.

(இ - ள்.) பேறுபெற்றேன்-பெறவேண்டிய பேற்றைப்பெற்றேன், வாழ்ந்தேன் - உயர்ந்தேன், இனிபிறருக்கு அஞ்சேன்-இனிப்பிறருக்கு அஞ்சமாட்டேன், ஆறு பெற்ற வேணியனுக்கு - கங்காநதியையணிந்த சடாபாரத்தை யுடையவனாகிய சிவபிரானுக்கு, ஆட்பட்டேன் - அடிமைப்பட்டேன், நூறுவட்டம் நெஞ்சில் சிந்தித்தேன் - நூறுதரம் மனத்தினால் நினைத்தேன், திருக்களவை - திருக்களாமரத்தை, கை கூப்பி வந்தித்தேன் - கைகுவித்து வணங்கினேன், மயல்தீர்ந்தேன் - பிறவிமயக்கம் நீங்கப்பெற்றேன், எ - று.

பெருந்தெய்வமாகிய ஆறுபட்டவேணியனுக் காட்பட்டமையால் பிறரென்றது பிறதேவரை. தலை பண்புப்பெயர். பேறு முதனிலைதிரிந்த தொழிலாகுபெயர். பெற்றேன் வாழ்ந்தேன் என்பன துணிவினால் வந்தகாலவழுவமைதி. தீர்ந்தேன் - பகுதி தீர். நூறு - பல என்பதைக் குறிக்கின்றது. ஆறு பெற்றசெய்தி:—சூரியவமிசத் தரசர்களில் ஒருவனாகிய பகீரதன் கபிலமுனிவருடைய சாபத்தால் சாம்பராய்ப்போன தனது மூதாதைகள் நற்கதியடையும்பொருட்டுத் தவஞ்செய்து சுவர்க்கத்திலிருந்து கங்கையைப் பூமிக்குக் கொண்டுவருகையில் அதன்வேகத்தைத் தடுப்பதற்காகச் சிவபெருமான் தமது சடையில்வைத் தருளினார் என்பது. திருக்களவைக் கைகூப்பிவந்தித்தால், அதன் நிழற்கீழ்த் திருக்கோயில் கொண்டருளிய சிவபெருமானை வந்தித்தலோடொக்கும் ஆதலால் "திருக்களவைக் கைகூப்பிவந்தித்தேன்" என்றார். நெஞ்சு-இடவாகுபெயர்.

**(28)** மயக்கமொழி நெஞ்சே மதிமுகமு மூன்று
நயக்கமல மன்னதிருக் கண்ணும் - வியக்குநடை
அன்ன வயற்கருவை யாரியன்று டொழுதால்
பின்னைநமக் குண்டோ பிறப்பு.

(இ - ள்.) நெஞ்சே-மனமே, மயக்கம் ஒழி - மயக்கத்தை நீக்கு, மதிமுகமும் - பூரணசந்திரன்போன்ற திருமுகத்தையும், கயம் கமலம் அன்னமூன்று திருக்கண்ணும் - ஓடையில் மலர்ந்த தாமரை மலர்போன்றமூன்று திருக்கண்களையும் உடையனும், வியக்கும்நடை-அதிசயித்தற்குரிய நடையையுடைய, அன்னம்வயல் - அன்னங்கள் நெருங்கிய வயல்சூழ்ந்த, கருவை - திருக்கருவையி லெழுந்தருளிய, ஆரியன் - வேதியனது, தாள்தொழுதால் - திருவடியை வணங்கினால், பின்னை - பிறகு, நமக்கு - எமக்கு, பிறப்பு உண்டோ - பிறவியுண்டோ, எ - று.

சிவபெருமானுக்குச் சூரியன் வலக்கண்ணும், சந்திரன் இடக்கண்ணும், அக்கினி நெற்றிக்கண்ணும்என்றறிக. சூரியனும் அக்கினியும் நேத்திரங்களாயினும் அடியார்களிடத்துக்குளிர்ந்த கருணையுடையவன் என்பதுதோன்ற "கயக்கமலமன்ன" என்றார். பறித்த கமலத்தினும் கயத்திலுள்ள கமலத்துக்குப் பொலிவு மிகுதிதோன்ற கயம் என்னும் அடைகொடுத்தார். கமலம் - நீரை அலங்கரிப்பது. வியக்கும்-விய பகுதி, க் சந்தி, கு சாரியை, உம் செய்யு மென்வாய்பாட்டுப் பெயரெச்சவிகுதி, உகரக்கேடு சந்தி. கயம்-ஆழம். இது ஆழமாகிய ஓடையையுணர்த்தலால் பண்பாகுபெயர்.

(29) பிறந்த பிறப்பிற் பெரும்பயனை யோரார்
இறந்தவுட லெண்ணிறந்த வென்ப - தறிந்திருந்தும்
கானடரும் பச்சைக் களவீச வென்னமல்
மானிடரா யேன்பிறந்தார் வந்து.

(இ - ள்.) (இவ்வுலகிற்சிலர்) பிறந்த பிறப்பின் பெரும்பயனை ஓரார் - பிறந்த பிறவியினாலடையவேண்டிய பெரும்பேற்றை ஆராய்ந்தடையாதவராய், இறந்த உடல் - மாண்டுபோன சரீரங்கள், எண் இறந்தஎன்பது - அளவற்றன வென்பதை, அறிந்திருந்தும் - உணர்ந்திருந்தும், கான்அடரும் - மணமிகுந்த, பச்சை - பசுமையாகிய, களவு - திருக்களாநிழலிலமர்ந்த, ஈச - ஈசனே, என்னமல் - என்று துதியாமல், ஏன் - யாதுக்கு, மானிடர்ஆய்வந்து பிறந்தார் - மானுடராய்வந்து ஜந்மித்தார்கள், எ - று.

தாம் இன்புறுதல்போல உலகத்தாரும் இன்புறவேண்டு மென்பது பெரியோர் கருத்தாகலின் அரிய மானிடப் பிறவிவாய்த்தும், அதன் பயனாகிய பேரின்பத்தை யடைதற்கு ஏதுவாகத் திருக்களவீசனைத் தியானியாமல் வாணாளை வீணாளாக்கழித்துப் பிறவியிலுழலும் மனிதரைநோக்கி அநுதாபத்தாற் கூறியது இச்செய்யுள். இறந்தவுடல் எண்ணிறந்த என்பதனால் பிறந்தபிறவியும் பலவென்றாராயிற்று

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப், பல் விருகமாகிப் பறவை யாய்ப்பாம்பாகிக், கல்லாய் மனிதராய்ப்பேயாய்க்கணங்களாய் வல்ல சுரராகி முனிவராய்த் தேவராய்ச், செல்லாஅநின்ற வித்தாவர சங்க மத்துள், எல்லாப்பிறப்பும் பிறந்திளைத்தேன்" என்றார் திருவாதவூர டிகளும். எண்ணிறந்த-பலவின்பால்வினைமுற்று. என்னமல்-சொல் லெச்சமாய்வந்த எதிர்மறைவினையெச்சம். மானிடர் - மனுபுத்திரர்.

(30) வந்து மனமறுக்க மாற்றாமல் வல்வினையேன்
வெந்துயரம் பார்த்திருக்க வேண்டினைகொல்-கொந்துமலர்
அம்பினன் மேனி யழித்தமுக லிங்கவுனை
நம்பினார்க் கீதோ நலன்.

(இ - ள்.) கொந்துமலர் அம்பினன்-கொத்தாகிய புஷ்பபாண ங்களையுடையவனாகிய மன்மதனது, மேனி - உடம்பை, அழித்த - நசிக்கப்பண்ணின, முகலிங்க - முகலிங்கனே, வந்து - எழுந்தருளி, மனமறுக்கம் மாற்றாமல் - என் மனமயக்கத்தை நீக்காமல், வல்வினை யேன் - வலியதீவினையை யுடையேனது, வெந்துயரம் - கொடிய துன்பத்தை, பார்த்திருக்க - பார்த்துக்கொண்டிருக்க, வேண்டினை கொல் - விரும்பினாயோ, உன்னை நம்பினார்க்கு - உன்னை நம்பின வர்களுக்கு, நலன் - (கிடைக்கும்) நன்மை, ஈதோ-இதுதானோ. எ-று.

மனமறுக்கம் 3 ஆம் செய்யுளில் உளமயக்கம் என்பதற்கு உரை த்தாங் குரைத்துக்கொள்க. அன்பால்நினைவாரது உள்ளக் கமலத்தில் அவர்நினைந்த வடிவோடு விரைந்துசென்று வீற்றிருத்தல் இறைவ னுக்கு இயல்பாதலால் "வந்து" என்றும், இறைவன் அருளாலன்றி அம்மனமறுக்கம் சிறிதும் நீக்கப்படாமையின் "மாற்றாமல்" என் றும், கூறினார். தேவரீரை நம்பாதமன்மதன்போன்றாரையே அழிக்க விரும்பும் தேவரீர் இதுபொழுதுநம்பின அடியேனது துக்கத்தையும் காணவிரும்பு கின்றீரோ என்பதுகருத்து. வேண்டினை - முன்னிலை யொருமை இறந்தகாலவினைமுற்று. மன்மதன்மேனி அழித்தசெய் தி:—முன்னொருகாலத்தில் சிவபெருமான் யோகத்திலிருக்க அத னைக்கெடுக்க முயன்றதேவர்கள் ஏவுதலால் மன்மதன் சிவபெருமான் மேல் மலர்க்கணைதொடுத்தனன். அப்பொழுது இறைவன் சினங் கொண்டுவிழிக்க மன்மதன்எரிந்து சாம்பராயினன்என்பது. தாமரை, மா, அசோகு, முல்லை, குவளை என்னும் பஞ்சபாணங்களை யுடையவ னாதலால் "கொந்துமலரம்பினன்" என்றார். இவனுக்கு வில் கரும் பும், நாண் வண்டு மெனக்கொள்க.

31 நலனழிந்து மூப்படைந்து நாணழிந்து நோயால்
புலனழிந்து கண்புதையும் போதி—லுலக

இறைவியொடும் பால்வண்ணா வென்றென் றுனையே
மறுகியழைப் பேனோடி வா.

(இ - ள்.) நலன் அழிந்து - அழகுகெட்டு, மூப்பு அடைந்து - முதுமைப் பருவத்தை யடைந்து, நாண் அழிந்து - வெட்கம்கெட்டு, நோயால் - பிணிகளால், புலன் அழிந்து - அறிவுகெட்டு, கண் புதையும்போதில் - கண் மூடும்பொழுதில், பால்வண்ணா என்றுஎன்று - பால்வண்ணனேயென்று பலகாலும்சொல்லி, உன்னையே-நின்னையே, மறுகி அழைப்பேன் - மனமயங்கி அழைப்பேன், (அப்பொழுது) உலக இறைவியொடும் - உலகநாயகியாகிய உமாதேவியாரோடுங்கூடி, ஓடிவா - விரைந்து வருவாயாக, எ - று.

உயிர் உடம்பைவிட்டு நீங்குங்காலத்தில் அந்த உயிரினாலே யா தொன்று பாவிக்கப்படுமோ, அதுவாகவே அந்தவுயிர் தோன்றுமென் பது எல்லாநூல்களது நிச்சயமாதலால் முத்தியடைவோர்க்கு அந்தக் காலத்தில் பிறவிக்குக் காரணமாகிய நினைப்புக் கெடுதற்பொருட்டு முதற்பொருளாகிய இறைவனையே தியானித்தல்வேண்டும் ஆகை யால் அந்தியதசையில் "உலக இறைவியொடும் பால்வண்ணாவென் றென்றுனையே,மறுகியழைப்பேன்ஓடிவா" என்றார். உலகஇறைவி= உலகங்களை ஈன்ற அருட்சத்தியாகிய உமாதேவி. என்று என்று என் னும் அடுக்கு பன்மைப்பொருள் குறித்துவந்தது. உனையே என்ற ஏகாரம் தேற்றம்.. பிறதெய்வங்களை அழையேன் எனக்கொண்டு பிரி நிலை என்னலுமாம். நோயால்புலனழிந்து கண்புதையும் காலமாகை யால் "மறுகியழைப்பேன்" என்றும், நீவருமுன்இறந்தபடின் அவா வின் வழிச்சென்று பிறக்கவேண்டிவரும் என்று அஞ்சி, "ஓடிவா" என்றும் கூறினார். மூப்பைச்சேரவைத்தலால் "நாண் அழிந்து" என்றது இளைஞரால் "பருவமெனைத்துள பல்லின்பால் ஏனை, இரு கையுமூண்டீரோ" என்றவை முதலாகப் பரிகசித்துச் சொல்லக் கேட்டு நாணுதல்.

32 ஓடுஞ் சகட்டி னுருளைபோல் வட்டமிட்டுக்
கூடும் பதத்திலெனைக் கூட்டாம—லாடியருள்
பூமலர்க்காச் சூழ்கருவைப் புண்ணியனே பூந்துளவன்
தாமரைக்கண் வைத்த சரண்.

(இ - ள்.) ஓடும் - விரைந்து செல்லுகின்ற, சகட்டின் - வண்டி யின், உருளைபோல் - சக்கரம்போல,வட்டமிட்டுக்கூடும்-வட்டமிட்டு செல்கின்ற, பதத்தில் - ஐசுவரியபதத்தில், என்னைக் கூட்டா மல் - என்னைச்சேர்க்காமல், பூ - அழகாகிய, மலர் கா - பூஞ்சோலை கள், சூழ் - சூழ்ந்த, கருவை - திருக்கருவையி லெழுந்தருளிய, புண்

ணியனே் - தருமவானே, பூதுளவன் - அழகிய துளசிமாலையைத் தரித்தவனாகிய திருமாலின், தாமரைக் கண்வைத்த - தாமரை மலர்போன்ற கண்ணையிட்டருச்சித்த, சரண் - உன்திருவடியை, நாடிஅருள்-(என்னைத்) தேடியருள்செய்வாய், எ - று.

மனிதர் செல்வமும் தேவர்செல்வமும் ஒன்றுக்கொன்று உயர்வைநோக்கக் கீழ்ப்படுதலாலும், அச்செல்வத்தைப் பெறின் அநாதியாகவந்த ஆசைஅதுவேஇடமாக அவனறியாமலேநுழைந்து பழையசுபாவமாகநின்று பிறப்பையும், இறப்பையும் உண்டாக்குதலாலும் தனக்கு உயர்ந்ததல்லாத முத்தியின்பத்தைப்பெறுவதற்கேதுவாகிய பூந்துளவன் தாமரைக்கண்வைத்த சரணைநாடியருள் என்றார். அத்தன்மையாகிய செல்வமும் ஒருவரிடத்தில் நில்லாமல் வண்டியின் உருளைபோலக் கீழ்மேலாக மாறுதலால் "ஓடும்சகட்டினுருளைபோல் வட்டமிட்டுக் கூடும்பதம்" என்றார். தாமரைக்கண்ணன் என்பது திருமாலுக்குச் சிறப்புப் பெயராய் வழங்குதலால் இவரும் "தாமரைக்கண்" என்றார். அன்றித் தாமருச்சித்த தாமரைமலர்களில் குறைந்த ஓர்மலருக்கு ஈடாகப்பிடுங்கிய கண்ணென்பது தோன்ற அவ்வாறு கூறினார் எனினும் ஒக்கும். தன்னைநினைவாரது உள்ளக்கமலத்தில் விரைந்து செல்பவனாகையால் "நாடியருள்" என்றும் கூறினார். பூந்துளவன் பண்புத்தொகையாகையால் மெல்லினம்மிக்கது. இரண்டாம வேற்றுமைத் தொகையாயின் வல்லினம் மிகும். திருமால் சிவபெருமானைக் கண்கொண்டு அர்ச்சித்தசெய்தி:—திருமால் நாடோறும் ஆயிரம் தாமரைமலர்களைக்கொண்டு சிவபெருமானை யர்ச்சித்து வழிபட்டுவரும் நியமம் பூண்டிருந்தார். ஒருநாள் சிவபெருமான் இவரது பத்தியைச் சோதித்தற்பொருட்டு ஒருமலர் குறையும்படிசெய்ய, குறைந்தமலருக்கீடாகத் தமதுகண்ணொன்றைப்பிடுங்கி யர்ச்சித்தார். அதற்கு மனமகிழ்ந்து சக்கரமருளிச்செய்தாரென்பது.

33 சரண கமலந் தலைமேல்வைத் தாண்டு
மரண பவமிரண்டு மாற்றிக்—கருணைசெய்து
பேரான தென்கருவைப் பெம்மா னளித்தானே
மாறா விதயமன மால்.

(இ - ள்.) பேறுஆன - (நமக்குப்) பயனுருவாகிய, தென்கருவைபெம்மான் - தென்கருவாபுரிப் பெருமான், சரணகமலம் - தன் திருவடித்தாமரையை, தலைமேல்வைத்து - என்சிரசின்மேலிட்டு, ஆண்டு - அடிமைகொண்டு, மரணபவம் இரண்டும்மாற்றி - இறப்புப் பிறப்புக்களென்கிற இரண்டையும்நீக்கி, கருணைசெய்து - கிருபை செய்து, மாறா - நீங்காமல், இதயமன்ன - இருதயத்தில் நிலைபெற,

மால் - தன்மீது செய்யவேண்டிய அன்பை, அளித்தான் - தந்தருளி ஞன், எ - று.

சரணகமலம் தலைமேல்வைத்து ஆளுதல் திருவடிதீக்ஷை என்னப்படும். சிவத்தோடுகலத்தல் என்னும் சாயுச்சியபதவி தந்தருளியிருத்தலால் "பேருன தென்கருவைப் பெருமான்" என்றார். மாறு ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். தொகுத்தல் விகாரம்பெற்ற மன்னஎன்னும் செயவெனெச்சம் அளித்தான் என்னும் வினைகொண்டது. பெருமான் என்பது பெம்மான் என மருவியது.

34 மாலுண்டு நெஞ்சே வருந்துவதென் பால்வண்ணன்
காலுண் டலர்சொரியக் கையுண்டு—நூலுண்டு
வாழ்த்திடநா வுண்டு வரதன் களாவுண்டு
தாழ்த்திடவு முண்டே தலை.

(இ - ள்) நெஞ்சே - மனமே, பால்வண்ணன் - பால்வண்ணனது, கால்உண்டு - திருவடியுண்டு, அலர்சொரிய - (அதன்மீது) மலர்களைப்பொழிய, கைஉண்டு - நமக்குக்கைகளுண்டு, நூல்உண்டு- நூல்கள்உண்டு, வாழ்த்திட - துதித்தற்கு, நாஉண்டு - நாவுண்டு, வரதன் - வரதரா்ய சிவபெருமானது,களாஉண்டு - திருக்களாவுண்டு, தாழ்த்திடவும் - வணங்கவும், தலைஉண்டு - எம் சிரமுண்டு, (இப்படியிருக்க) மால்உண்டு வருந்துவதுஎன் - நீமயக்கமடைந்து வருந்துதற்குக்காரணம் யாது, எ - று.

வரதன் - வரம்தருவோன். நூலுண்டு என்பது அவனுடைய நாமரூபங்களையும் திருப்புகழையும் உணர்த்தும் சாஸ்திரங்கள் உள்ளன என்றபடி. மனமே, தொழுதுஉச்சீவிப்பதற்குத்திருக்கருவைப்பிரானது திருவடி முதலியன இருக்கும்போது நீமயங்கிவருந்த வேண்டியது யாதுக்குஎன்பதுகருத்து. நெஞ்சு-இடவாகுபெயர். கால் எண்ண லளவை யாகுபெயர். அலர் முதனிலைத்தொழிலாகுபெயர். நூல் உவமையாகுபெயர். தலை பண்பாகுபெயர்.

35 தலையாய தென்கருவைத் தானுவே மேருச்
சிலையாற் புரமெரித்த தேவே—யுலகில்
அடியவராந் தேவ ரமுதுண்ண நீதான்
கொடியவிட முண்டதென்ன கூறு.

(இ - ள்.) தலைஆய - முதன்மையாகிய, தென்கருவைத் தாணுவே - தென்கருவாபுரியி லெழுந்தருளி யிருக்கிற சிவனே, மேருசிலையால் - மேருமலையாகிய வில்லினுல், புரம் எரித்ததேவே - முப்புரத்தை யெரித்ததேவனே, உலகில் - உலகத்தில், அடியவர்ஆம் தேவர் - உன்னடியார்களாகிய தேவர்கள், அமுதுஉண்ண - அமிர்தத்

தைப்பருக, நீ - நீ, கொடியவிடம் - கொடிதாகியநஞ்சை, உண்டது என்ன - பருகினதற்குக் காரணமென்ன, கூறு - சொல்வாய், எ-று.

வலியமேருவை வில்லாகவளைக்கும் திறமுடைய தேவரீருக்கு அடியேனது மனத்தை வணக்கி ஆட்கொள்வது அருமையன்று என்றபடி. திரிபுரம்என்பது முதற் குறைவிகாரம் பெற்றது. திரிபுரமெரித்தவிதத்தாலும், விடமுண்டசெயலாலும் அடியவர்க்காகச் செய்யவேண்டிய செய்து காக்கவல்லவர் நீரேயென்றும், அவ்வாறு காக்குங்கடமை பரமபிதாவாகிய உம்முடையதே என்றும் விளங்குகின்றது. தாணு - ஸ்தாணுஎன்னும் வடமொழிச்சிதைவு. எஞ்ஞான்றும் அழியாதவன் என்பதுபொருள். மேருச்சிலை இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

36 கூறு படுமதியக் கோடீரம் விண்ணுடைக்க
நாறுமலர்த் தாளுரக நாடுடைக்கப்—பேறுபெற்ற
மாயவனார் போற்ற வளருந் தமிழ்க்கருவை
நாயகனா ராடு நடம்.

(இ - ள்.) வளரும் - விருத்தியடையாநின்ற, தமிழ் - தமிழ்மொழி வழங்குகின்ற, கருவை - திருக்கருவையி லெழுந்தருளியிருக்கின்ற, நாயகனார் - இறைவன், கூறுபடும் மதியக்கோடீரம் - பிளவுபட்டசந்திரனையணிந்த சடாபாரமானது, விண் உடைக்க - ஆகாயமுகட்டையுடைக்கவும், நாறும் - மணக்கின்ற, மலர்த்தாள் - தாமரைமலர்போன்ற திருவடி, உரகநாடு உடைக்க-நாகலோகத்தை யுடைக்கவும், பேறுபெற்ற - தான் அடையவேண்டிய பேற்றையடைந்த, மாயவனார் போற்ற - திருமாலானவர் துதித்து வணங்கவும், நடம் ஆடும் - நடமாடுவான், எ - று.

திருமால் வணங்கத் திருக்கருவைநகரில் எழுந்தருளிய சிவபெருமான் திருமுடி மேலுலகங்களையும் திருவடி கீழுலகங்களையும் பிளந்துசெல்லவளர்ந்துதிருவடிநடனஞ்செய்வது சர்வ சங்காரகாலத்தில் என்க. மதியம் கூறுபட்டசெய்தியும், அது சடைமுடியில் அணியப்பெற்றசெய்தியும்நான்காஞ்செய்யுளுரையிற்காண்க.மதியம்-இதில் அம்சாரியை. விண் - விண்ணுலகங்களை யுணர்த்தலால் இடவாகுபெயர். தாள் - அடி. இதுபாதத்துக்குப் பண்பாகுபெயர். நாடுடைக்க என்பதில் நாடுஎன்னும் நெடிற்றொடர் "டறவொற்றிரட்டும்வேற்றுமைமிகவே" என்பதில் மிகவே என்றதனால் இயல்பாயிற்று. பேறுபெற்ற என்றது இரட்சகத்தொழில் முதலிய செய்யப்பெற்றமையை. மாயவனார், நாயகனார் - ஒருமை விகுதிமேல் உயர்வினால் பன்

மைவிகுதி பெற்றுவந்த ஆண்பாற்பெயர்கள். நாயகனூர் நடம் ஆடும் - இது நம்பிநடைகடியன் என்பதுபோல் வந்ததிணைவழுவமைதி. நடம் என்னும்அஃறிணை எழுவாய் நாயகனூர் என்னும் உயர்திணை எழுவாயினதுபயனிலையாகிய ஆடும் என்னும் ஆணபாற் செய்யுமென் வாய்பாட்டு வினைமுற்றைக்கொண்டு முடிதலின்வழுவாய்த் தொடர் புண்மைகருதிச் சார்த்திமுடித்தலால் அமைதியாயிற்று," சூத்திரம் - நன்பொது. 26. ஆர் ஈற்று ஆண்பாற்பெயர் செய்யுமென்வினை முற்றைக் கொண்டு முடிவதை "கொடியார் வரும் என்று குலாவுவதோ" என்னும் கம்பநாடர் செய்யுளாலு முணர்க.

37 நடம்புரிதாள் போற்றிநின்ற நன்முனிய தென்றோ
விடங்கொ டமிழ்க்கருவை யீசா—வடுங்கூற்றை
வேலினுற் போர்மழுவால் வெல்லாமற் செங்கமலக்
காலினுல் வென்ற கருத்து.

(இ - ள்.) இடம்கொள் - இடத்தைக்கொண்ட, தமிழ் - தமிழ் வழங்குமிடமாகிய, கருவை - திருக்கருவையி லெழுந்தருளிய, ஈசா - ஈசனே, அடும்கூற்றை - கொல்லுகின்ற யமனை, வேலினுல் - வேலினுலும், போர்மழுவால் - போர்த்தொழிலையுடைய மழுவினுலும், வெல்லாமல் - ஜெயிக்காமல், செங்கமலம் - செந்தாமரை மலர்போன்ற, காலினுல்-(இடது) திருவடியால், வென்றகருத்து-வென்றஅபிப்பிராயம், நடம்புரிதாள் - நடநம் பண்ணுகின்ற திருவடியானது, போற்றிநின்ற - வணங்கிகின்ற, நல்முனியது என்றோ - நல்ல (வியாக்கிரபாதரோடுபதஞ்சலி) முனிவர்களுடையது என்று நினைத்துத் தானோ, எ - று.

போற்றி இறந்தகால வினையெச்சம், பகுதி - போற்று. முனி - இறைவனை மன்னஞ்செய்வோன். நன்முனியென்றது - வியாக்கிரபாதமுனிவனையும், பதஞ்சலிமுனிவனையும். முனியது பொருளடியாகப்பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு வினைமுற்று. பகுதிமுனி. கூற்று சொல்லால் அஃறிணையும் பொருளால் உயர்திணையுமாகிய பெயர். தீயோனவதைப்பதே யன்றி அடியார்க்குப் புகலிடமாய் சன்மவிடாயைத் தணித்தருள்வ தாகையால் "செங்கமலக் கால்என்றூர். கால் எண்ணலளவை யாகுபெயராய்க் காலையும், முதலாகுபெயராய்ப் பாதத்தையும் உணர்த்தும். கருத்து - முதனிலைதிரிந்த தொழிலாகு பெயர். யமனை உதைத்தசெய்தி:—மிருகண்டமுனிவர் புத்திரனில்லாமையால் சிவபெருமானைநோக்கித் தவஞ்செய்ய; அப்பிரான்பிரசன்னமாகிப் பதினறுவயசுவனையும் உயிர்பெற்றிருக்கும் ஓர்புத்திரன்

பிறப்பானென வரந்தந்துபோதலும், அப்படியே ஓர்புத்திரன் பிறக்க அவனுக்கு மார்க்கண்டேயனென்று பெயரிட்டு வளர்த்துவந்தனர். அம்மார்க்கண்டேயர்க்குப் பதினாறு வயதுமுற்றப் பெறவும், சிவார்ச்சனை செய்துகொண் டிருக்கும்போது அவர்மேல் நமன்பாசம் வீசினமையால் சிவபெருமான் கோபங்கொண்டு யமனைத்தமது இடக்காலால் உதைத்து மார்க்கண்டேயனை மரணத்தினின்றும் காத்தருளினர் என்பது. சிவபிரானுக்கு யமனை உதைத்தமையால் கூற்றை யுதைத்தோன், காலகாலன் எனப்பெயர் வழங்கும்.

38 கருத்தழிந்து கன்மக் கலைமறந்து கண்டார்
விருத்தனிவ னென்று வெறுத்துச்—சிரிக்கமுது
காடுகுடி யேற்றாமற் காத்துமுகலிங்காவுன்
நாடுகுடி யேற்றுவதே நன்று.

(இ - ள்.) முகலிங்கா - முகலிங்கனே, கருத்து அழிந்து - எண்ணமழிந்து, கன்மக் கலைமறந்து - கருமங்களை விதிக்கிற நூல்களைமறந்து, கண்டார் - பார்த்தவர், இவன் விருத்தன்என்று - இவன் முதிபோனனென்று, வெறுத்துச் சிரிக்க - வெறுப்படைந்து நகைக்க, முதுகாடு - மயானத்தில், குடியேற்றாமல் - என்னைக் குடியேற்றாமல், காத்து - ரக்ஷித்து, உன்நாடு - உனதுநாடாகிய சிவலோகத்தில், குடியேற்றுவதே - குடியேற்றிவைப்பதே, நன்று-நன்மையாம், எ - று.

கருவிதளர்ந்து அறிவுமழுக்க மடைகின்ற முதுமைப்பருவத்தில் தாம் வருந்திக்கற்ற சாத்திரப்பொருள்களை மறந்தபோது, அநாதியாயுள்ள ஆசைதொடரும் ஆகையால் "கருத்தழிந்து கன்மக்கலைமறந்து" என்றார். முதுகாடு குடியேற்றாமல் என இறப்பைக் குறித்தார் எனினும் பிறந்தே இறக்கவேண்டுதலின் பிறவியை மாற்றிக் காக்கவேண்டும் என்றார் ஆயிற்று. இவ்வாறுபிறப்பும், இறப்பும் இல்லாதபோது மீளாவுலகமாகிய சிவகதியில் நிலைத்தகுடியாதல்திண்ணமாகையால் அவ்வாறு செய்தலே நன்றுஎன்றார். காத்துஎன்னும் வினையெச்சம் குடியேற்றுவதுஎன்னும் தொழிற்பெயர் கொண்டது.

39 நன்கவிஞ ருகவிய ருவளித்து நாடோறும்
தன்கழலே பாடுந் தரமளித்தா—னன்கவைத்த
சூலத்தான் றென்பொதியத் தொல்லோன் றொழுதமணக்
கோலத்தான் றென்கருவைக் கோ.

(இ - ள்.) நன் - நல்ல, கவைத்த - பிளவுபட்ட, சூலத்தான்- சூலத்தையுடையவன், தென்பொதியத் தொல்லோன் - தென்பொ

தியமலையிலுள்ள பழையோனாகிய அகத்தியமுனிவன், தொழுத- கண்டுவணங்கின, மணக்கோலத்தான்-திருமணக்கோலத்தை யுடையவன், தென்கருவைக்கோ - தென் கருவாபுரியிறைவன், (அவன்) நன்கவிஞன் ஆக - நல்ல கவிஞனாகும்படி, வியன்நா அளித்து - பெருமைபொருந்திய நாவைத்தந்து, நாள்தோறும் - தினந்தோறும், தன்கழலேபாடும் தரம் - தன்றிருவடியையே பாடுதற்குரிய மேன்மையையும், அளித்தான் - தந்தருளினன், எ - று.

கவிஞன் பெயர்ப்பகுபதம், கவி பகுதி, ஞ் பெயரிடைநிலை, அன் ஆண்பால்விகுதி. கவைத்த கவைஎன்னும் பெயரடியாகப் பிறந்த இறந்தகாலப்பெயரெச்சம்.பகுதி கவை. அகத்தியருக்கு மணக்கோலங்காட்டிய செய்தி:-பூர்வத்தில் சிவபிரான் இமயமலையில் உமாதேவியாரைத் திருக்கலியாணஞ் செய்யும் மகோற்சவத்தைக் கண்டுகளிக்க, பிரமன்முதலிய தேவர்களும், அகத்தியர்முதலிய இருடிகளும் வந்து நெருங்கியகாரணத்தால்வடபுறம்தாழத்தென்புறம்உயர்ந்தது,இதனைக்கண்டதேவர்முதலிய எவரும்பயந்து நடுங்கினர்,அப்போது சிவபெருமான்,பூமியை முன்போலச் சமன்செய்விக்கும் பொருட்டு,அகத்தியமுனியைத் தெற்கின்கணுள்ள பொதியமலையில்வசிக்கக் கட்டளையிட்டருளினர். அக்கட்டளையை மேற்கொண்டுசெல்லக் கருதியமுனிவர், இறைவன் திருக்கலியாண மகோற்சவத்தைக் கண்டுகளிக்கும் பாக்கியம் பெற்றிலேனென்று வருந்த, இறைவன் நீர் கண்டுகளிக்க, மீண்டும் நமது திருக்கலியாணக் காட்சியைத் தந்தருளுவோமென்று வாக்களித்துப் பின்னர் அவ்வாறே பொதியமலையில் அகத்தியருக்குத் திருமணக்கோலம் காட்டி யருளினர் என்பது.

**40** கோவா யமரர் குழாம்போற்ற வாழ்ந்தாலும்
தீவாய் நரகிடைப்போய்ச் சேர்ந்தாலும்—பாவையிடத்
தாண்டகையே தென்கருவை யையா வடியேற்கு
வேண்டுவதுன் பேரோ மிக.

(இ - ள்) கோவாய் - தேவராஜனாகி, அமரர் குழாம்போற்ற வாழ்ந்தாலும் - தேவர்கூட்டம் வணங்கும்படி வாழ்ந்திருந்தாலும், தீவாய் நரகிடைபோய்ச் சேர்ந்தாலும் - எரிவாய் நரகத்திற்போய்ச் சேர்ந்தாலும், பாவையிடத்து - பாவைபோலுமுருவுடையளாகிய உமாதேவியை யிடப்பாகத்திலுடைய, ஆண்தகையே - ஆண்டன்மையிற் சிறந்தோனே, தென்கருவைஐயா - தென் கருவாபுரி யிறைவனே, அடியேற்கு மிகவேண்டுவது - அடியேனுக்கு மிகுதியும் வேண்டுவது, உன்பேரோ - உன்திருநாமமே, எ - று,

சுகதுக்கங்க ளிரண்டிலும் மொத்துண்டாலும் உன்னை மறவாத பேறுதந்தருளவேண்டுமென்பது கருத்து. செல்வம் வந்தகாலத்தில், அச்செல்வச்செருக்கால் இறைவனை மறந்தொழிதல் பெருவழக்காதலால் அதனைமுற்கூறினார். பாவை உவமை யாகுபெயர். ஆண்டகை ஆண்தன்மையை யுடையான் எனவிரிதலால் அன்மொழித்தொகைக் காரணப்பெயர். மிக உரிச்சொல்.

41 மிகத்தேடுஞ் செம்பொன்னும் வேட்டமனை யாளும்
மகப்பேறு மங்குதவ வாரா—பகைத்துறுக்கிக்
கையாற் கதையேந்திக் காலன் வரிற்கருவை
யையாவென் றோதா தவர்க்கு,

(இ - ள்) பகைத்து - பகைகொண்டு, உறுக்கி - கோபித்து, கையாற்கதையேந்தி - கையில் தண்டாயுதத்தைத் தாங்கி, காலன்வரின்- இயமன்வந்தால், கருவை ஐயாஎன்று ஓதாதவர்க்கு - கருவாபுரியிறைவனேயென்று துதியாதவர்க்கு, மிகத்தேடும் செம்பொன்னும் - அதிகமாகத் தேடுகின்ற செம்பொன்னும், வேட்டமனையாளும் - மணம்புரிந்த மனைவியும், மகப்பேறும் - புதல்வரைப் பெறுகையும், அங்கு - அவ்விடத்து, உதவவாரா - உதவிசெய்ய வரமாட்டா. எ-று.

உயிர்களுக்கு வரையறைசெய்துள்ள காலமறிந்து வருபவன் காலன்-வெண்பொன், கரும்பொன்இவற்றினின்றுநீக்குதலால் செம்பொன்என்பதிற் செம்மை பிறிதினியைபு நீக்கிய விசேடணம்."மனையாளுமக்களும் வாழ்வுந் தனமுந்தன்வாசன்மட்டே, இனமானசுற்றமயானமட்டே வழிக்கேதுதுணை, தினையாமளவெள்ளளவாகினு முன்புசெய்ததவம், தனையாளவென்றும் பரலோகஞ் சித்திக்குஞ் சத்தியமே" என்றார் பட்டணத்தடிகளும்.

42 அவல விடக்கை யழியுமலக் கூட்டைக்
கவலை நிறைத்த கடத்தைப்—புவனிதொறும்
வாளா சுமக்கும் வருத்தமொழி பால்வண்ணா
தாளா வயித்திய நாதா.

(இ - ள்.) அவலவிடக்கை - நோய்க்கிடமாகிய மாமிசபிண்டத்தை, அழியும் மலக்கூட்டை - அழிகின்ற மலக்கூட்டினை, கவலை நிறைத்தகடத்தை - துன்பத்தை நிரப்பியகுடத்தை, புவனிதொறும்- (சென்றுபிறக்கும்) உலகங்கள்தோறும், வாளாசுமக்கும் - பயனின்றிச் சுமக்கின்ற, வருத்தம் ஒழி - துன்பத்தை நீக்கியருள், பால்வண்ணா - பால்வண்ணமுடையானே, தாளா - முதல்வனே, வயித்தியநாதா - வைத்தியநாதனே, எ - று.

உடம்பாலாகிய பயனைப் பெற்றபின்தேகம் பயனற்றதாகலால் அவலம்என்றும், சப்ததாதுக்களுள் மிகுந்த பகுதிமாமிசமாதலால்விடக்கையென்றும், எவ்வாறு காக்கினும் அழியு மியற்கையதாதலால் அழியும்என்றும்,உள்ளே பொதிந்திருப்பதுமலமுதலியவே யாதலால் மலக்கூட்டை யென்றும்,அம்மலமுதலியவற்றால்நிரப்பப்படாதஇடத்தைக் கவலைநிறைத்தலால் கவலைநிறைத்த கடத்தையென்றும் கூறினார்.வாளாபயனில்லாமையை உணர்த்தும்இடைச்சொல், "எத்தனையூர்எத்தனைவீடெத்தனைதாய் பெற்றவர்கள்,எத்தனை பேரிட்டழைக்கவே னென்றேன்-நித்த, மெனக்குக் களையாற்றாய் ஏகம்பா" என்றார் பட்டினத்தடிகளும். தாள் - அடி அது இங்கு முதல்வனாகிய சிவபெருமானுக்கு ஆயிற்று. புள்ளிருக்கு வேளூரி லெழுந்தருளிய சிவபெருமானுக்கு வைத்தியநாதன் என்று திருநாமம்.வைத்தீச்சுரன் கோயில் என்பதும் இது.

(**43**) நாதனென வந்துன்னை நானடைந்தே னீயுமெனை
ஆதரித்தெ னுள்ளுருக்கி யாட்கொண்டாய் - போதித்
திடைபோகத் தள்ளா தியற்கருவை நாதா
கடைபோகக் காத்தல் கடன்.

(இ - ள்.) நாதன் எனவந்து - தலைவனென்று துணிந்துவந்து, நான் உன்னை அடைந்தேன் - நானுன்னைச்சேர்ந்தேன், நீயும்என்னை ஆதரித்து - நீயுமென்னைவிரும்பி, என் உள்உருக்கி - என்மனத்தையுருகப்பண்ணி, ஆட்கொண்டாய் - அடிமைகொண்டாய், (ஆதலால்) போதித்து-(எனக்குஉண்மைப்பொருளை)உபதேசித்து, இடைபோகத் தள்ளாது-இடையேநீங்கும்படி தள்ளிவிடாமல், இயல்கருவைநாதா-பெருங்குணத்தையுடைய கருவைநாயகனே, கடைபோகக் காத்தல்-முற்றக் காத்தருளல், கடன் - (உனக்குக்) கடன்மையாகும், எ - று.

அடிமைப்பட்டபின்னும் உலகமாயைபற்றிவருத்தும் என்றஞ்சி "போதித்து இடைபோகத்தள்ளாது கடைபோகக் காத்தல்கடன்" என்றார். உள்என்னும் உள்ளிடப்பெயர்அங்குள்ளமனத்துக்காதலால் இடவாகுபெயர். அன்றி உள் - நினை எனப்பொருள்கொண்டு முதனிலைத்தொழிலாகுபெய ரென்னலுமாம். கடைபோதல் - முடிதல்.

(**44**) கடலுலக மண்டாண்டங் காயழலி னீற்றி
அடலையுடன் முற்று மணிந்து - சுடலைதனில்
தாழ்சடிலத் தென்கருவைத் தாணு தமியனாய்
ஏழிசையாழ் வாசித் திடும்.

(இ - ள்.) தாழ்சடிலம் - நீண்ட சடையையுடைய, தென்கரு வைத்தானு - தென்கருவைச் சிவபெருமான், கடல்உலகம் - கடல் சூழ்ந்த மண்ணுலகங்களையும், அண்டாண்டம்-விண்ணுலகங்களையும், காய் அழலின்நீற்றி - சுடுகின்ற நெருப்பினுல் நீறுபடுத்தி, அடலை - (அந்த) நீற்றை, உடல்முற்றும் அணிந்து - திருமேனி முழுதுந் தரித்து, சுடலைதனில் - மயானத்தில், தமியனாய்-தனியனாகி, ஏழ்இசை - ஏழிசைகளையுடைய, யாழ் - வீணையை, வாசித்திடும் - வாசிப்பன்.

சர்வசங்காரகாலத்தில் சிவபெருமான் எவரையும் எவற்றையும் நீறுக்கித்தமியனாய்நிற்றலால் அவரோ பரம்பொருள் என்பதுகருத்து. கடல் உலகம், அண்டாண்டம் என்றதனுல் பூலோகம், புவலோகம், சுவலோகம், சனலோகம், தபோலோகம், மகாலோகம், சத்தியலோகம் என்னும் மேலேழுலகும், அதலம், விதலம், சுதலம், தராதலம், ரசாதலம், மகாதலம், பாதாளம் என்னும் கீழ் ஏழுலகும் கொள்க. நீற்றி பிறவினை இறந்தகாலவினையெச்சம், பகுதி நீறு, ஏழிசையாவன:—குரல், துத்தம், கைக்கிளை, உழை,இளி, விளரி, தாரம்என்பன.

(45) வாசித்தே னில்லை வரதன் சிவாகமத்தைப்
பூசித்தே னில்லையவன் பொன்னடியை - நேசித்தே
ஒப்பனையாள் கேள்வனென வோதித் துதிக்கிலேன்
எப்படியா னீடேறு வேன்.

(இ - ள்.) வரதன் சிவாகமத்தை - (அன்பர்க்கு வேண்டிய) வரங்களைக் கொடுத்தருள்வோனாகிய சிவபெருமானது சிவாகமத்தை, வாசித்தேன் இல்லை - படித்தேனில்லை, அவன்பொன் அடியை - அவனது திருவடியை, பூசித்தேன் இல்லை - ஆராதித்தேனில்லை, நேசித்து - விரும்பி, ஒப்பனையாள் கேள்வன்என - ஒப்பனையம்மை நாயகனென்று, ஓதிதுதிக்கிலேன் - சொல்லித் துதிக்கிலேன்,யான் - நான், எப்படி ஈடேறுவேன் - எப்படி கடைத்தேறுவேன், எ - று.

சிவாகமம்:—28. காமிகம், யோகம், சிந்தியம், காரணம், அசிதம், முதலியவை. இவை பரமசிவத்தால் திருவாய்மலர்ந்தருளப் பட்டவை.

(46) ஏறுவது கொல்லே றெரிசுடலை யாடரங்கு
கூறைபுலித் தோன்மணிப்பூண் கோளரா - நாறு
கரந்தை யணிகருவைக் காபாலிக் கென்பால்
வரந்தரவே றுண்டோ வகை.

(இ - ள்.) கொல்ஏறு - (பகைவரைக்) கொல்லுகின்ற இடபம், ஏறுவது-வாகநம், எரிசுடலை - எரிகின்றமயாநம், ஆடு அரங்கு - நடநசாலை, புலித்தோல் - புலியின்தோல், கூறை - ஆடை, கோள்அரா -

துன்பஞ்செய்யும் பாம்பு, மணிப்பூண் - இரத்தினாபரணம், (இப்படியிருக்க) நாறு - பரிமளிக்கிற, கரந்தை அணி-கரந்தை மலர்மாலையைத் தரித்த, கருவை - திருக்கருவையிலெழுந்தருளிய, காபாலிக்கு - சிவபிரானுக்கு, என்பால் வரம்தர - எனக்கு வரங்கொடுக்க, வேறுவகை உண்டோ - வேறு வகையாகிய பொருளுண்டோ, எ - று.

"கடகரியும் பரிமாவும் தேருமுகந்தேறாதே, இடபமுகந்தேறிய வாறெனக்கறிய வியம்பேடி" "கோயில் சுடுகாடு கொல்புலித்தோல் நல்லாடை" "பூண்பதுவும் பொங்கரவம்" "அமுதுசெயப் பலிதிரியு நம்பனையுந் தேவனென்று நண்ணுமதுவென்னேடீ" என்னும் திருவாசகக் கருத்தையுட்கொண்டு இச்செய்யுள் செய்யப்பட்டது. திரிபுரதகனத்தில் திருமால் இடபமாய்த் தாங்கினமையால் "ஏறுவது கொல்லேறு" என்றும், சர்வசங்காரகாலத்தில் அண்டசராசரங்களையும் நீறாக்கித் தானொருவனுமே நின்று ஆடுதலால் "எரிசுடலையாடரங்கு" என்றும், தாருகாவனத்து இருடிகளைப்பங்கப்படுத்தி, அவரேவிய பாம்புமுதலியவற்றின் வலியடக்கி அவற்றை ஆடையாகவும் அணியாகவும் அணிந்தமையால் "கூறைபுலித்தோல் மணிப்பூண்கோளரா" என்றும், அகங்கரித்த பிரமனைத்தண்டிக்க, அவன் தலையைக் கொய்து கையிற் கொண்டமையால் "காபாலி" என்றும் கூறினார். கொல் ஏறு, எரிசுடலை, ஆடரங்கு, பூண் அரா, நாறுகரந்தை, அணி கருவைக்காபாலி என்பன வினைத்தொகைநிலைத்தொடர்கள். பூண் என்னும் முதனிலை ஆபரணத்தை உணர்த்தலால் முதனிலைத்தொழிலாகுபெயர். கரந்தை அதன்மலருக்காதலால் முதலாகுபெயர். காபாலி-பிரமகபாலத்தையுடையவன். பிரமகபாலம் கரத்தேந்திய செய்தி:— தன்னைப் பிரமமென்று அகங்கரித்த பிரமனுடைய செருக்கடக்கும் பொருட்டு சிவபெருமான்வைரவமூர்த்தியை உண்டாக்க, அவ்வைரவமூர்த்தியைக்கண்டு பிரமனுடைய நடுச்சிரம் நகைக்க, வைரவர் அதனைக்கொய்து கரத்தேந்தி முனிவர்முதலியோர் பால் பலி ஏற்றனர் என்பது.

(**47**) வகிர்மதியக் கண்ணியான் வாணுதல்பா கத்தான்
புகர்முகக்கைம் மாவுரிவைப் போர்த்தான் - முகரித்துத்
தென்னா தெனாவென்று வண்டிசைக்குந் தென்கருவை
என்னாதன் வானோர்க் கிறை.

(இ - ள்.) வகிர் - பிளக்கப்பட்ட, மதியக்கண்ணியான் - சந்திரனாகிய மாலையை முடிமீதுடையவன், வாள் நுதல்பாகத்தான் - உமாதேவியை இடப்பாகத்தி லுடையவன், புகர்முகம் - புள்ளிகளுள்ள முகத்தையுடைய, கைம்மாஉரிவை போர்த்தான் - யானைத்தோலைப்

போர்த்தவன், முகரித்து - ஒலித்து, தென்ஞ தெனுஎன்று-தென்ஞ தெனுவென்று, வண்டுஇனைக்கும் - வண்டுகள் இசைச்சலிடுகின்ற, தென்கருவை - தென்கருவாபுரியி லெழுந்தருளிய, என்நாதன் - என்தலைவன், (அவன்) வானோர்க்குஇறை-தேவர்களுக்குத்தலைவன்.

பிறைச்சந்திரன் வெண்மலர்மாலைபோல் வளைந்திருத்தலால் "வகிர்மதியக்கண்ணியான்" என்றார். "தாரொன்ன வோங்குசடை மேற்றனித் திங்கள்வைத்த" என்றார் திருவாதவூரடிகளும். வாணுதல்-அன்மொழித்தொகைக் காரணப்பெயர். வாளாகிய நுதலினை யுடையாள் எனவிரியும். வாள் - ஒளி. நுதல் - நெற்றி. உரி என்னும் முதனிலை உரிக்கப்பட்ட தோலையுணர்த்தலால் முதனிலைத்தொழிலாகுபெயர். தென்ஞதெனு - ஒலிக்குறிப்பு. இறை பண்பாகுபெயர். யானை யுரிபோர்த்த செய்தி:—பிரமனை நோக்கித் தவஞ்செய்து சிவபிரானொழிந்த மற்றொருவராலும் அழியாதவரம்பெற்ற கயாசுரன் என்பவன் சாதுக்களை வருத்திவருகையில் இவனது கொடுமைக்கஞ்சி முனிவர் காசியிற்சென்று சிவபிரானை அடைக்கலம்புகவும், அங்கும் சென்ற அக் கயாசுரனைச் சிவபிரான் பிரளயகால வுருத்திர வுருவங்கொண்டு உதைத்துத்தள்ளிப் பிடரியைக்கீறித் தோலை உரித்துப் போர்வையாகக்கொண்டனர் என்பது.

(48) இறைப்பொழுது நீங்கா விருகண்ணு நெஞ்சும்
கறைக்களமுஞ் செஞ்சடிலக் காடும் - பிறைக்கொழுந்தும்
புண்டரிக வாண்முகமும் பூங்களவி னீழலோன்
ஒண்டரளப் புன்மூர லும்.

(இ - ள்.) பூ - அழகாகிய, களவின்நீழலோன் - களாநிழலில் அமர்ந்தோனாகிய சிவபெருமானது, கறை களமும் - நீலகண்டமும், செம்சடிலக்காடும் - செஞ்சடைக்காடும், பிறைக்கொழுந்தும் - (அதன்மேலணிந்த) இளம்பிறையும், புண்டரிகம் - தாமரைமலர் போன்ற, வாள்முகமும் - ஒளியுள்ள திருமுகமும், ஒள் - ஒளியுள்ள, தரளம்-முத்துப்போன்ற, புல்மூரலும் - புன்சிரிப்பும், இருகண்ணும்-(என்) இருகண்ணையும், நெஞ்சும் - (என்) மனத்தையும், இறைப்பொழுதும் - சிறிது நேரமாயினும், நீங்கா - நீங்கியிரா. எ - று.

அன்பால் நினைவாரது உள்ளக்கமலத்தின்கண் அவர் நினைந்த உருவோடு இறைவன் வீற்றிருத்தலாலும், அவ்வீற்றிருந்தவாறே எப்போதும் மனனஞ்செய்ய உருவெளித்தோற்றத்தால் கண்ணுக்குப் புலப்படுதலாலும் "இறைப்பொழுதும் நீங்கா இருகண்ணுநெஞ்சும்" என்றார். நீங்கா எதிர்மறைப் பலவின்பால் வினைமுற்று. சடிலக்காடு உருவகம். இளம்பிறையை பிறைக்கொழுந்து என்றது

மரபுவழுவமைதி. புண்டரிகம் என்பது வெண்டாமரைக்குப் பெயரா யினும் திருமுகமண்டலத்துக்குஉவமையாகவந்தபடியால் "புண்டரீ காக்ஷன்" என்பதிற்போலச் செந்தாமரையை உணர்த்தியது.

(49) மூரலாற் றாளான் முளரித் திருக்கண்ணால்
காருலாஞ் சோலைக் கருவேசர் - நேரலரூர்
சுட்டார்வெங் கூற்றை யுதைத்தார்தொல் வேளையெய்ய
வொட்டா தெரித்தா ருடல்.

(இ - ள்.) கார்உலாம் - மேகங்கள் தவழ்கின்ற, சோலை - சோலைசூழ்ந்த, கருவேசர் - திருக்கருவாபுரி யிறைவர், மூரலால் - சிரிப்பினாலும், தாளால் - திருவடியாலும், முளரி திருகண்ணால் - அழகியநெருப்புக் கண்ணினாலும், நேரலர் ஊர் - பகைவர்களுடைய புரங்களையும், வெம்கூற்றை-கொடியயமனையும், தொல்வேளை-பழமை யாகிய மன்மதனையும், சுட்டார் - நீறாக்கினர், உதைத்தார் - உதைத் தனர், எய்யவொட்டாது - அம்பெய்ய வொட்டாமல், உடல் எரித் தார் - (அவனது) உடம்பை யெரித்தனர். எ - று.

மூரலால் சுட்டார், தாளால் உதைத்தார், திருக்கண்ணால் எரித் தார் எனஇயைதலால் முறைநிரனிறைப்பொருள்கோள். நன்-பொது- சூ-63-கருவேசர் குணசந்தி. வடமொழிகள் இடையே ஏகார ஒகா ரங்கள்தோன்றப்புணர்வது குணசந்தியெனப்படும். நேரலர் என்பது ஒன்றலர், விரவலர், பொருந்தலர்என்பனபோன்றஎதிர்மறைப் படர்க் கைப் பலர்பால் வினையாலணையும்பெயர். உடலையும் உயிரையும்கூறு படுக்கும் (பிரிக்கும்) காரணத்தால் யமன் கூற்று எனப்பட்டான். இது அன்விகுதிபெற்று கூற்றன், கூற்றுவன் எனவும்வரும். வேள் - விருப்பம், இது மன்மதனுக்குப் பண்பாகுபெயராய்வழங்கும். காமன் என்பதற்கும் இதுவே பொருளாதலறிக. முளரி-நெருப்பு.

(50) உடலி லுயிரா யுயிர்க்குயிரா னானைக்
கடலுலகெல் லாந்தேடிக் காணேன் - கொடியதொரு
புன்கருவை மாற்றிப் புரந்தவனைப் புண்ணியனை
நன்கருவை யிற்கண்டே னன்.

(இ - ள்.) உடலில் உயிர்ஆய் - உடற்குள் உயிராகி, உயிர்க்கு உயிர்ஆனானை - உயிர்க்குள் உயிராயிருப்பவனை, கொடியது-கொடி தாகிய, ஒரு - ஒப்பற்ற, புல்-இழிவாகிய, கருவை-(என்) பிறவியை, மாற்றி - நீக்கி, புரந்தவனை - என்னைக் காத்தருளினவனை, புண்ணி யனை - தருமவானை, கடல்உலகுஎல்லாம் - கடல்வளைந்த உலகமுழு தும், தேடிக்காணேன் - தேடிக்கண்டிலேன், (இப்பொழுது) நல்

கருவையில் நான் கண்டேன் - நல்ல கருவையாகிய திருப்பதியில் நான்கண்டேன், எ - று.

பூவும் பூவினிடத்துமணமும், எள்ளும் எள்ளினிடத்தெண்ணெயும்போல் இறைவன் உடலினிடத்து உயிராயும் உயிருக்கு உயிராயும் இருக்கின்றனன் என்றபடி. "ஊனு யுயிரா யுணர்வா யென்னுட்கலந்து" என்றார் திருவாதவூரடிகளும். கொடியது-பண்படியாகப் பிறந்த தென்றன்படர்க்கைக் குறிப்புவினையாலணையும்பெயர். அடியாரதுஅல்லற்பிறவி அறுப்பவனுதலால் கொடியதொரு புன்கருவைமாற்றிப்புரந்தவன் என்றார். புண்ணியன் - தருமமே வடிவாகவுடையவன். "அறவாழியந்தணன்" என்றார் பிறரும். காணேன் என்னும் எதிர்மறை வினைமுற்றில் எதிர்மறை ஆகாரவிகுதி புணர்ந்துகெட்டது.

(51) நானே யறிந்தவனை நாடற் கெளிதாமோ
காணேர் பசிய களாவனத்தான் - றானேயென்
உள்ளச் சிலையை யுலைவாய் மெழுகெனவே
மெள்ளக் கனைக்கா விடின்.

(இ - ள்.) கான்நேர் - மணம்பொருந்திய, பசிய - பசுமையாகிய, களாவனத்தான் - களாச்சோலையையுடையவனுகிய சிவபிரான், தானே-தானே, என் உள்ளச்சிலையை - என்மனமாகியகல்லை, உலைவாய்மெழுகென-உலைமுகத்திலிட்ட மெழுகுபோல, மெள்ளகனைக்காவிடின் - மெல்ல உருக்காவிட்டால், அவனை - அந்தச் சிவபெருமானை, நானேஅறிந்து - நானேயுணர்ந்து, நாடற்கு - தேடுதற்கு, எளிதுஆமோ - எளிதாகுமோ, எ - று.

சிவபெருமானைத்தேடி அடைந்து உய்தற்கு அவனருளின்றி முடியாதென்பது கருத்து "அவனருளாலே யவன்றாள்வணங்கி" என்றார் மாணிக்கவாசகரும். கான் ஏர் எனப்பிரித்து வாசனையையும் அழகையும், உடைய எனினும் ஆம். நானே என்பதில் இறைவனைப் பிரித்தலால், ஏகாரம் பிரிநிலைஅன்றி இழிவுசிறப்புமாம். தானே என்பதின் ஏகாரம் துணிவைத்தருதலால் தேற்றம். அன்றிச்சேதனனைப் பிரித்தலால் பிரிநிலையெனினுமாம். உள்ளச்சிலை உருவகமாகையால் இருபெயரொட்டுப் பண்புத்தொகை. அறிந்து அவனை நாடற்கு என்பதனைக்காரணகாரியமுறைப்படி அவனைநாடிஅறிதற்கு என விகுதி பிரித்துக் கூட்டிப்பொருளுரைத்துக் கொள்க.

(52) விட்டேன் பரசமய மேவாது வேர்களைந்து
சுட்டேன்பொய்க் காமத் தொடர்பெல்லாம் - பட்டநுதல்
கைம்மா வுரித்த களவீச னைக்கருவைப்
பெம்மானை யான்பணிந்த பின்.

(இ - ள்.) பட்டம்நுதல்-நெற்றிப் பட்டத்தை யணிந்த, கைம்மா உரித்த - யானையையுரித்த, களவிசனை-திருக்களவீசனை, கருவைப்பெம்மானை - திருக்கருவைப் பெருமானை, யான்பணிந்தபின் - நான்வணங்கினபிறகு, பரசமயம் - வேறுசமயங்களை, மேவாதுவிட்டேன்-பொருந்தாமல்விட்டேன், பொய்காமத் தொடர்புஎல்லாம் - பொய்யாகிய காமத்தொடர்ச்சி முழுதும், வேர்களைந்து சுட்டேன் - வேருடன்பறித்துச்சுட்டேன், எ - று.

பொய்க்காமத்தொடர்பெல்லாம் என்றமையால் வெகுளி மயக்கங்களையுங்கொள்க. அநாதியாகிய அவிச்சையும், அதுபற்றி யான் என மதிக்கும் அகங்காரமும், அதுபற்றி எனக்கிது வேண்டுமென்னும் அவாவும், அதுபற்றி அப்பொருட் கண் செல்லும் ஆசையும், அதுபற்றி அதன் மறுதலைக்கண் செல்லும் கோபமும் எனவடநூலார் குற்றம் ஐந்தென்றார். அவற்றுள் அகங்காரம், அவிச்சைக் கண்ணும், அவாவுதல் ஆசைக்கண்ணும் அடங்குதலால் மூன்றென்பர் தமிழ்நூலார். இடையறாத பரசிவவணக்கத்தின்முன் இக்குற்றங்கள் காட்டுத்தீமுன்னர்ப் பஞ்சுபோலும் ஆதலால்அம்மிகுதி தோன்ற "வேர்களைந்து சுட்டேன் பொய்க்காமத் தொடர்பெல்லாம்" என்றார். காரணமாகிய அக்குற்றங்களைக்கெடுத்தவர்கள் காரியமாகிய இருவினைகளைச் செய்யாமையின் அவர்க்குவரக்கடவனவாகிய துன்பங்களும் முன்கிடந்த துன்பங்களும் இலவாதலால் முத்தியடைவது திண்ணம். "காமவெகுளி மயக்கமிவைமூன்றின் - நாமங் கெடக்கெடுநோய்" என்றார் திருவள்ளுவரும்.

(**53**) பின்னை தழுவுங் கணையேன் பெரும்பாந்தள்
மன்னு நெடுநாண் மலைவில்லே - னென்னே
பகைத்தவர்த முப்புரமோ பால்வண்ணா நீயே
நகைத்தெரிக்கப் போமே நமக்கு.

(இ - ள்.) பால்வண்ணா - பால்வண்ணனே, பகைத்தவர்தம்-பகைஞருடைய, முப்புரமோ - திரிபுரமோ, நீயேநகைத்து எரிக்கப் போமே - நீயேசிரித்து எரிக்க அழிந்துபோயினவே (அப்படியிருக்க) நமக்கு - உமக்கு, பின்னைதழுவும் கணைஏன்-திருமகளைத் தழுவுகின்ற பாணம் யாதுக்கு, பெரும்பாந்தள்-பெரும்பாம்பாகிய, மன்னு - நிலை பெற்ற,நெடு-பெரிய, நாண் - நாணும், மலைவில்-மலையாகிய வில்லும், ஏன்-யாதுக்கு, என் - இதென்னவிந்தை, எ - று.

நமக்கு-உயர்வுதோன்ற முன்னிலைப் பொருளில்வந்த உளப்பாட்டுத் தன்மைப்பன்மைப்பெயர். இவ்வாறு வருதலை "நாமனையாமத் தென்னேவந்து வைகிநயந்ததுவே" என்னும்திருக்கோவையாரானும்

அதன் உரையானும் "செங்கயல்போல் கருநெடுங்கட் டேமரு தாமரையுறையும் நங்கையிவனெ நெருளனடந்தவரோ நாமென்ன" என்னும் கம்பநாடர் செய்யுளானு முணர்க. திருப்பாற்கடலில் மூதேவிக்குப்பின் பிறந்தபடியால் இலக்குமி பின்னை எனப்பட்டாள். அன்றிக் கிருஷ்ணவதாரத்தில் கிருஷ்ணபகவானுடைய அஷ்டமகிஷிகளில் ஒருவராகிய நப்பின்னைப்பிராட்டி எனினுமாம். ஆயிரம் பணா மகுடங்களுடையவனாதலால் ஆதிசேஷன் பெரும்பாந்தள் எனப்பட்டான். "நகைத்தெரிக்கப்போம்" இயல்பினுல் இறந்தகாலம் எதிர்கால மாய்வந்த கால வழுவமைதி. திரிபுரங்களை எரிப்பதற்கு உன் புன்சிரிப்பேகாரணமா யிருந்தமையால் திருமாலைக் கணையாகவும் ஆதிசேஷனைநாணாகவும் மேருவை வில்லாகவும் கொண்டது திருவிளையாட்டே என்றபடி.

(54) நமரங்கா டென்கருவை நாதவடு வெஞ்சூர்க்
குமரனுக்கா ளாய்ப்பணிந்த கோமான் - றமரக்
கருங்கடனஞ் சுண்ட களவீச னென்றால்
மருங்கடரு மோதுயரும் வந்து.

(இ - ள்.) நமரங்காள் - நம்மவரே, தென்கருவைநாத - தென்கருவைநாயகனே, வெஞ்சூர் - கொடியசூரனை, அடு-கொன்ற, குமரனுக்கு - முருகக்கடவுளுக்கு, ஆள் ஆய்ப்பணிந்த-அடியானுகிவணங்கின, கோமான் - இறைவனே, தமரம்-ஓசையையுடைய, கடல்-பாற்கடலில்பிறந்த, கருநஞ்சுஉண்ட-கரியவிஷத்தைப்பருகின,களவீசன் - களவீசனே, என்றால் - என்றுதுதித்தால், (அப்படித் துதிப்பவர்களுக்கு) மருங்கு - பக்கத்தில், துயரும்வந்து அடருமோ - துன்பமும் வந்து நெருங்குமோ, எ - று.

நமரங்கள் - நமர்கள்என்னும் முறைப்பெயர் விளியேற்று, ஈற்றகரம் ஆகாரமாகி, இடையே அம்முச்சாரியை பெற்றது. அடுவினைத்தொகை வினைச்சொல் குமரன் என்னும் செய்பவனுகிய பெயர் கொண்டது. வாக்கின்தொழிலாகிய சொல்லினுலேயே துயர்நீங்கும் என்றமையால் மற்றமனம்,காயங்களால் தொண்டுசெய்வார்பேறடைவார் என்பதுசொல்லாமேயமையும். சிவபெருமான்குமரனைப்பணிந்த செய்தி:—ஒருகாலத்தில் பிரமன்முதலிய எல்லாத்தேவர்களும் சிவபெருமானைத் தரிசிக்கக் கைலாசத்திற்குப் போனபொழுது அங்கிருந்த முருகக்கடவுளைப் பிரமனொழிந்த எல்லாத்தேவரும் வணங்கிச் சென்றனர். பிரமன் மாத்திரம் இவரைச் சிறுபிள்ளையென்று அலட்சியஞ்செய்து வணங்காமற்போயினன். இதையறிந்த முருகக்கடவுள் அப்பிரமதேவன் திரும்பி வருகையில் அவனுக்குப் புத்திவருவிக்க

என்னிப்பிரணவத்துக்குப் பொருள் சொல்லும்படி கேட்கப் பிரமன் பொருள் கூறத்தெரியாது மயங்க, முருகக்கடவுள் பிரணவத்துக்குப் பொருள்கூறத் தெரியாதவன் சிருஷ்டித்தொழிலை நடத்தி வருவது தகுதியல்லவென்று அப்பிரமனைச்சிறையிலிட்டனர். அதையறிந்த பரமசிவன்முருகக்கடவுளையழைத்து நீபிரமனைச்சிறையிடவேண்டிய தென்னையெனா? பிரணவத்துக்குப் பொருள் கூறத்தெரியாதவன் சிருஷ்டித்தொழில் செய்வது தகுதியல்லவென்றுஅங்ஙனம் செய்தனன் என்றார். அதற்குச்சிவபெருமான்மகிழ்ந்து பிரணவத்துக்கு நீபொருள் கூற வல்லையோவென, முருகக்கடவுள் ஆம் என்றனர். அப்படியானால் பொருள்கூறு பார்ப்போமென்று சிவபெருமான் கேட்டபோது, முருகவேள்சிஷ்யன் இருக்கவேண்டிய கிரமப்படியிருந்து கேட்டால் சொல்வேனென, பரமசிவன் முருகக்கடவுளை உயர்ந்த ஆசனத்திலிருத்தித் தான் சிஷ்யனைப்போல் வணங்கியிருந்து கேட்க, முருகக்கடவுள் பிரணவத்துக்குச்சரியான பொருள்கூறினர் என்பது. சுப்ரமணியர் சூரனைச் சங்கரித்த செய்தி:—காசிபமுனிவர்க்குச் சுரசை என்பளிடமாகப் பிறந்த சூரபதுமன், சிங்கமுகன், தாருகன் முதலானபல அசுரர்கள் சிவபிரானைக்குறித்து யாகமும், தவமுஞ்செய்து அவரருளால் பலவரங்களைப்பெற்றுக் கர்வித்து, இந்திரன்முதலிய தேவர்களைப் போர்செய்து வென்று வருத்திவந்தமையால், அதனைப் பொறாது தேவர்கள் சிவபிரானை நோக்கித் தவஞ்செய்ய, சிவபிரான் அவர்கள் செய்யும் தவத்திற்கு மனமிரங்கி, குமாரக்கடவுளை யுண்டாக்கி அனுப்பியருள, அவர்அசுரர்களனைவர்களையும் அழித்துத் தேவர்களைக்காத்தனரென்பது.

(**55**) வந்தடர மாட்டாய் பிரிவை மனங்கொண்டு
நைந்து துயருழக்கு நல்குரவே - யைந்துதலை
நாக்கவைத்த பாம்பணியு நாதன்பால் வண்ணனமை
நீக்கவைத்தா லென்செய்வாய் நீ.

(இ - ள்.) மனங்கொண்டு-மனத்தை வசப்படுத்திக் கொண்டு, நைந்து - நைவித்து, துயர்உழக்கும் - துன்பத்தைச்செய்கிற, நல்குரவே-வறுமையே, ஐந்துதலை-ஐந்துதலைகளையுடைய, நா கவைத்த-நாக்கள் பிளவுபட்ட, பாம்பு - பாம்புகளை, அணியும் - அணிகின்ற, நாதன் - இறைவன், பால்வண்ணன் - பால்வண்ணன், (அவன்) நம்மை நீக்கவைத்தால் - நம்மைப் பிரியவைத்தால், (பிறகு) நீ என் செய்வாய் - நீயாதுசெய்யக்கடவை, வந்து அடரமாட்டாய்-என்னை வந்து நெருங்கமாட்டாயாகி, பிரிவை - பிரிவாய், எ - று.

நல்குரவை நோக்கிக்கூறியது இச்செய்யுள். இங்கு நல்குரவென்றது பேரின்பமல்லாதவைகளை. மனக்கொண்டு என்பதில் "நிலைமொழியின் மகரங்கெட்டு அத்துச்சாரியை பெறுமல்வந்தது. நல்குரவு-தொழிற்பெயர் - நல்கூர் பகுதி, அ சாரியை, வு விகுதி, பகுதியில் ஊகாரம் உகரமாகக் குறுகியது குறுக்கல். கவைத்த நா என்பது நாக் கவைத்த என முன்பின்னாகமாறி வந்தது. கவைத்த பெயரடியாகப் பிறந்தஇறந்தகாலப்பெயரெச்சம். பாம்பின் நா பிளவுபட்டிருத்தலால் "கவைத்தநா" என்றார். இச்செய்யுள்கொண்டுகூட்டுப்பொருள்கோள்.

(56) நீயேவந் துற்ற நெடுந்துயரந் தீர்த்திலையேல்
நாயேனை யார்புரந்து நாட்டுவார் - போயிருவர்
ஆங்களவா வண்ண மழலுருவாய் நீண்டுவளர்
பூங்களவி னாதா புகல்.

(இ - ள்.) இருவர்போய் - பிரமனும் திருமாலுமாகிய இருவரும் சென்று, ஆங்கு அளவாவண்ணம் - அவ்விடத்து அளவிடாத வகையாக, அழல் உருஆய் - நெருப்புருவமாகி, நீண்டுவளர் - நீண்டுயர்ந்த, பூ-அழகாகிய, களவின்நாதா-திருக்களா நிழலிலமர்ந்த இறைவனே, நீயேவந்து - நீயேயெழுந்தருளி, உற்ற - பொருந்திய, நெடுதுயரம் தீர்த்திலையேல் - என்பெருந்துன்பத்தை நீக்கியருளாயாயின், நாயேனை - நாயினேனை, புரந்துநாட்டுவார் - காத்துநிலைபெறச் செய்வார், யார் - யாவர், புகல் - (நீயே) சொல்வாய்; எ - று.

கடைப்பட்ட தீவினையுடைய அடியேனது பிறவித்துன்பங்களைப் பரமபிதாவாகிய தேவரீரே நீக்காவிட்டால் வேறேயார் என்னைக் கடாக்ஷித்து நிலைநிறுத்தவல்லர் என்பதுகருத்து. உற்ற நெடுந்துயரம் என்றது பிறவிக்கேதுவாகிய காமம்வெகுளி மயக்கங்களை மாற்ற மாட்டாமையால் பிறந்து அவற்றான் வந்ததுன்பங்களை. தீர்த்தாய் இலைஎன்பதுதீர்த்திலை எனவந்தது.ஏல்-எனின் என்பதன் மரூஉ. இறைவன் அடியார்க் கெளியனும், மற்றவர்க்கு அரியனும் என்பது தோன்ற "போயிருவர் ஆங்களவாவண்ண மழலுருவாய் நீண்டுவளர்-பூங்களவினாதா" என்றுகூறினர்.

(57) புகழ்ந்திடுவேன் யானோ புவியேழு மாயன்
அகழ்ந்திடவுங் காணா வடிக - ளுகந்தோறும்
தோற்றுமுக நான்காற் சுருதிக் கவிவிரிஞ்சன்
சாற்றுமுக ளிங்களா தா.

(இ - ள்.) உகம்தோறும் - யுகங்கள்தோறும், தோற்றும் - உண்டாகின்ற, சுருதிக்கவி - வேதக்கவிஞனாகிய, விரிஞ்சன் - பிரமன், முகம்நான்கால் - நான்குமுகத்தினால்,சாற்றும்-புகழ்கின்ற, முக

லிங்க - முகலிங்கனே, நாதா - இறைவனே, மாயன் - திருமாலானவன், புவியேழும் அகழ்ந்திடவும் - கீழேழுலகங்களையும் கிழித்துச் செல்லவும், காணு - காணாத, அடிகள் - திருவடிகளை, புகழ்ந்திடுவேன் - புகழ்ந்துசொல்லுதற்குரியேன், யானோ - நானோ, எ - று.

புவியேழும் என்றது அதலம், விதலம்முதலிய கீழேழுலகங்களை. மாயன் - விசித்திர சக்தியுடையவன். "உகந்தோறுந் தோற்றமுக நான்காற் சுருதிக்கவி விரிஞ்சன் சாற்றுமுகலிங்கநாதா" என்றமையால் யுகமுடிவில் பிரமன்முதல் எல்லாத்தேவர்களும் இறந்து மீண்டும் பிறப்பர்என்பதும்,வேதத்தில்சொல்லப்படும் இறைவன்பரமசிவன் என்பதும் பெற்றாம். அநாதியாகிய வேதங்களைப் பிரமன்தனது நான்குமுகங்களாலும் முதலில் சொல்லிய காரணத்தால் வேதாஎன்றும் மறையவன் என்றும் பேர்பெற்றனன்.

(58) முகலிங்க நாதா முழுதுங்காத் தோம்பும்
புகலிங் கடியனுக்குன் போலச் - சகதலத்தில்
காருண்ட சோலைக் கருவேச நீயன்றி
யாருண்டு சொல்வா யறிந்து.

(இ - ள்.) முகலிங்கநாதா - முகலிங்கநாதனே, கார்உண்டசோலை - மேகத்தைப்பொருந்திய சோலைசூழ்ந்த, கருவேச-திருக்கருவையீசனே, முழுதும் - முற்றிலும், காத்து ஓம்பும் - காத்து ரக்ஷிக்கிற, புகல் - அடைக்கலம், அடியனுக்கு உன்போல - அடியேனுக்கு உன்னைப்போல, சகதலத்தில்-பூதலத்தில், நீஅன்றி - நீயேயல்லது, யார் உண்டு - யாவர் உளர், அறிந்துசொல்வாய் - நீஉணர்ந்து சொல்வாயாக. எ - று.

அனைத்துலகையும் படைத்தலும், காத்தலும், அழித்தலும் அருளலும் நீயே ஆகையால் உன்னையன்றி என்னைக் காத்தருள யார் இறம் என்பதுகருத்து. "அனைத்துலகும் ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருடருவாய்" என்றார் திருவாதவூரடிகளும். சகதலம்-கானகம், மகிதலம் என்பனபோல ஒற்றுமைப் பொருளதாகிய ஆறாம் வேற்றுமைத தொகைநிலைத்தொடர். அன்றிச்சகமாகியதலம் என இருபெயரொட்டுப் பண்புத்தொகை எனினுமாம். சகம் - தோன்றியழிவது. கருவை + ஈசன் = கருவேசன் தீர்க்கசந்தி. சொல்வாய் ஏவலொருமைவினைமுற்று, வகரம் உடம்படுமெய்யல்லாத மெய்யென்பர். இடைநிலை யன்று.

(59) அறியேன்மற் றொன்று மரும்பொருளே யென்றும்
குறியே னெழுந்தைந்துங் கூறேன் - வறிதே
பிறந்தலுத்தேன் றென்கருவைப் பெம்மானே மீள
இறந்தலுத்தே னென்செய்தே னியான்.

(இ - ள்.) ஒன்றும் அறியேன் - ஒருநல்வழியையும் உணரேன், அரும்பொருளே என்றும் குறியேன் - அருமையாகிய பொருளேயென்றும் உன்னை நினையேன், எழுத்து ஐந்தும்கூறேன் - உன் ஐந்தெழுத்தையும் உச்சரியேன், வறிதேபிறந்து அலுத்தேன் - வீணேபிறந்துவிடாய்த்தேன், தென்கருவைப்பெம்மானே - தென்கருவைப்பெருமானே, மீள - மீளவும், இறந்து அலுத்தேன் - இறந்து இளைத்தேன், யான் என்செய்தேன் - நான் என்ன நற்கருமத்தைச்செய்தேன். எ - று.

அறியேன் மற்றொன்றும் என்றது இல்லறம் துறவறமாகிய எந்த நல்லவழியையும் அறியமாட்டேன் என்றபடி. அரும்பொருள் என்றது இறைவனை. எல்லாப்பொருளிலும் சிறந்து தனக்கு ஒப்பும் உயர்வும் சொல்லுதற்கு அரிதாயிருத்தலால் இறைவனை "அரும்பொருள்" என்றார். அவனைக்குறியாமையேயன்றி, ஜனனமரணங்களைப்போக்கி முத்தியளிப்பதையே சொரூபமாகவுடைய ஸ்ரீ பஞ்சாக்கரத்தையும் கூறேன் ஆகையால் "வறிதே பிறந்தலுத்தேன்" என்றும், "மீள இறந்தலுத்தேன்" என்றும் கூறினார். ஒன்று அறத்தை யுணர்த்தலால் பண்பாகுபெயர். வறிது குறிப்புவினையெச்சம். பிறந்து, இறந்து என்னும் வினையெச்சங்கள் காரணப்பொருளில் வந்தன. செய்தேனியான் என்பதில் இகரம் "தன்றொழி மெய்ம்மூன் யவ்வரினிகரந்துன்னுமென்று துணிநருமுளரே" என்பதனால் தோன்றியது.

(60) என்செயலுன் றாளி லினியமலர் சாத்துவதே
உன்செயலென் றுன்ப மொழிப்பதே - மின்புரையும்
வேணியாய் தென்கருவை வேந்தே யனலேந்தும்
பாணியாய் வேதாதி பா.

(இ - ள்.) மின்புரையும் - மின்னற்கொடியை நிகர்க்கின்ற, வேணியாய் - சடாபாரத்தை யுடையவனே, தென்கருவை வேந்தே - தென்கருவைக் கிறைவனே, அனல் ஏந்தும் பாணியாய் - தீயேந்துங்கையனே, வேதஅதிபா - வேதங்களுக்குத் தலைவனே, உன் தாளில் - உன்திருவடியில், இனியமலர்சாத்துவதே - உனக்கினிதாகிய மலர்களைச் சமர்ப்பிப்பதே, என்செயல் - என்தொழிலாகும், என் துன்பம் ஒழிப்பதே - என் துயரத்தை நீக்குவதே, உன்செயல் - உன்தொழிலாகும், எ - று.

நம்பிருவர்செயலில் என்துன்ப மொழிப்பதாகிய உன் செயலுக்கு உன்தாளில்மலர் சாத்துவதாகிய என்செயலால் உனக்குப் பயனில்லையாயினும் அன்பர் வலையிற் படுபவனாகையால் அதைப் பெரிதாக உவந்துஅங்ஙனஞ் செய்கின்றாய் என்பதுகருத்து. மலர் வினைமுதற்பொருள் விகுதியாகிய இசரம்புணர்ந்து கெட்ட தொழிலடியாகப் பிறந்தபெயர். வேந்து பண்பாகுபெயர். வேதாதிபன் தீர்க்கசந்தி. வேதத்திற் கூறப்பட்டஇறைவன் என்பதுபொருள். அனலேந்தியசெய்தி நான்காஞ்செய்யுளுரையிற்காண்க.

**(61)** பாகம் பழுத்த பவளக் குணக்குன்றே
மோகங் கடந்த முதல்வனே - யாகமநூல்
ஆய்கருவை யானே யமலா வடியேனைத்
தாய்கருவை யானே சரண்.

(இ - ள்.) பாகம்பழுத்த - பக்குவமுதிர்ந்த, குணம் - மங்கள குணத்தையுடைய, பவளக்குன்றே - பவளமலையே, மோகம்கடந்த முதல்வனே - பாசத்தை இயல்பாகவே கடந்து நின்றதலைவனே, ஆகமநூல் - ஆகமசாத்திரங்களால், ஆய் - ஆராயப்பட்ட, கருவையானே - கருவைப்பதியானே, அமலா - பரிசுத்தனே, அடியேனை - அடியேனாகிய என்னை, தாய்கருவையானே - தாயின்கருப்பத்தில் வையாதவனே, சரண் - (அடியேன்உன்) அடைக்கலம், எ - று.

சலியாமையும் பெருமையும் பற்றிக் குணங்களைக் குன்றாக உருவகஞ்செய்தார். குணம் சாதியொருமை. சாதியொருமையாவது ஒருசொல் ஒருமையீறு பெற்றும்பெறாதும் நின்று பன்மைப் பொருளுணர்த்துவது. இதனை வடநூலார் சாதியேகவசன மென்பர். சூத்திரம்:—"ஈறுதோன்றிய சாதியொருமையும், ஈறுதோன்றாச்சாதியொருமையும் என விருதிறப்படும் இருதிணைமருங்கினும்." "சிவிகைபொறுத்தானோ டூர்ந்தானிடை" அஞ்சுவது அஞ்சாமைபேதைமை" என்னுமிடத்து பொறுத்தான், அஞ்சுவதுஎன ஈறுதோன்றிய சாதியொருமையும், "தென்புலத்தார் தெய்வம்" குணமென்னும்குன்றேறிநின்றார்" என்னும் இடத்துதெய்வம் குணம் என ஈறுதோன்றாத சாதியொருமையும் வந்தனகாண்க. இயல்பாகவே பாசங்களினீங்கினவனாதலால் "மோகங்கடந்தமுதல்வனே" என்றும், தூய உடம்பினன் ஆதலால்"அமலன்"என்றும்கூறினார். ஆகமம்காமிகம்முதலிய 28. இவை சிவபெருமானால் அருளிச்செய்யப்பட்டவை யென்பதை "அழிவிலானுரையாகமம்" என்னும் திருவிளையாடற் புராணச்செய்யுளாலுமறிக. சிவபெருமானுடைய ஏற்றத்தை அறிதற்குரியநூலா

தலால்'' ''ஆகமநூலாய் கருவையானே'' என்றார். ''ஆகமமாகிநின் றண்ணிப்பான்றாள்வாழ்க'' என்றார் மாணிக்கவாசக சுவாமிகளும். பிர வாணம் என்னும் வடமொழி பவணம் எனத்திரிந்து நின்றது. இதனைத் தற்பவம் என்பர்.

(62) சரணம் விதியின் றலையழிவாக் கந்தீர்
பரம கதியருட்கண் பார்க்கிற் - றிருவடியார்
வன்பிறவித் துன்பமெல்லாம் மாற்றுமுக லிங்காவென்
புன்பிறவித் துன்பமெல்லாம் போம்.

(இ-ள்.) விதியின்தலை-பிரமனுடைய தலையானது, அழிவு ஆக- அழியும்படி, கந்து-கழுத்தினடியை, ஈர்-கிள்ளிய, பரம - மேலானவ னே, திரு அடியார்-(உனது) திருத்தொண்டர்களுடைய, வல் பிறவி துன்பம் எல்லாம் - வலிய பிறவித்துன்பங்கள் முற்றும், மாற்றும் - நீக்கியருள்கின்ற, முகலிங்கா - முகலிங்கனே, கதிஅருள் கண்பார்க் கில்-(தேவரீரது) மோட்சத்தைக்கொடுப்பதாகிய திருவருளையுடைய கண்பார்த்தால், என்புல் பிறவிதுன்பம் எல்லாம் - என் அற்பமாகிய பிறவித்துன்பம் முழுதும், போம் - ஒழியும் எ - று.

வாழ்நாளின் எல்லையை விதிப்பவன் ஆதலால் பிரமன் விதி என் னப்பட்டான். விதித்தல் அளவுசெய்தல். அழிவு என்னும் தொ ழிற்பெயரைச் சேர்ந்துவந்த ஆக என்னும் காரியப்பொருளதாகிய எதிர்காலச் செயவெனெச்சம் ஈறுகெட்டு அழிவா எனவந்தது. கந்து - கழுத்தடி. கந்தரம் - கழுத்து. போம்-ஈற்றுயிர் மெய்கெட்டு வந்த செய்யுமென் வாய்பாட்டு வினைமுற்று.

(63) போத மறியேன் புகன்றகவி விண்ணப்பம்
ஏதுந் திருச்செவியி லேறுமோ - சீதநிலாத்
திங்க ளணியுந் திருச்சடைமேற் புன்பூளை
தங்கவணி யுங்கருவே சா.

(இ - ள்.) சீதம் நிலா திங்கள் - குளிர்ச்சியாகிய சந்திரிகையை யுடைய இளம்பிறையை, அணியும்-தரித்த, திருச்சடைமேல் - திருச் சடையின்மீது, புல் - அற்பமாகிய, பூளை - பூளைப்பூவையும், தங்க அணியும் - நிலைபெறத் தரிக்கின்ற, கருவேசா-கருவேசனே, போதம் அறியேன் - அறிவென்பதை யறியாதஅடியேன், புகன்றகவிவிண்ண ப்பம்-சொல்லிய கவிவிண்ணப்பமானது, ஏதும்-சிறிதும், திருச்செவி யில் ஏறுமோ - உன் திருச்செவியில் நுழையுமோ, எ - று.

மேன்மையாகிய சந்திரனை அணிகின்ற திருமுடியில் அற்ப மாகிய பூளைமலரையும் அணிகின்றவ னாதலால் ஞானிகளுடைய

திருப்பாடல்களை ஏற்பதுபோல ஞானமில்லாத அடியேனுடைய பாடல்களையுஞ்சிறிது திருச்செவிசாத்தி யருளவேண்டுமென்பதுகருத்து. பூளைமிகவும் அற்பமானமலர் என்பதனை "மாருதமறைந்த பூளையாயின கண்டனை" என்பதினாலுமறிக.

(62) சாதன் முடுகிற் றனைமறந்து நாவிறங்கு
மாதுயரிற் சற்றும் வழுத்தறியே - னாதலினால்
அப்பொழுதைக் கிப்பொழுதே யன்பால் வழுத்துகின்றேன்
ஒப்பனையாள் பாகா வுனை.

(இ - ள்.) ஒப்பனையாள் பாகா - ஒப்பனையம்மையை யிடப்பாகத்தி லுடையானே, சாதல்முடுகின் - மரணகாலம் நேர்ந்தால், தனைமறந்து - என்னைமறந்து, நா இறங்கும் - நாவடங்குகின்ற, மா துயரின்-பெருந்துன்பத்தினால், சற்றும்-சிறிதும், வழுத்தஅறியேன்-உன்னைத் துதிக்கஅறியேன், ஆதலினால் - ஆதலால், அப்பொழுதைக்கு - அந்தக்காலதில் துதிந்தற்குப் பிரதியாக, இப்பொழுதே - இந்தக்காலத்திற்றானே, உனை-நின்னை, அன்பால்வழுத்துகின்றேன் - அன்பினால் துதிக்கின்றேன், எ - று.

மரணகாலத்து உரையாடாவண்ணம் நா அடங்கும் என்பதனை "நாச்செற்று விக்குண்மேல் வாராமுன்" என்னும் திருக்குறளாலுமறிக. பிறவித் துன்பத்தினும் மரணத்துன்பம் பெரிதாகலால் "மாத்துயர்" என்றார். "யானேதும் பிறப்பஞ்சேனிறப்பதனுக்கென் கடவேன்" என்றார் திருவாதவூரடிகளும். வழுத்த என்னும் செயவெனெச்சத்தின் ஈறுதொகுத்தல். பொழுதைக்கு என்பதில் ஐகாரம் சாரியை. "அப்போதைக்கிப்போதேசொல்லிவைத்தேனரங்கருளே" என்றார்பிறரும்.

(63) உனைத்துதித்த நாவா லுறுதியென்றோர் தெய்வம்
தனைத்துதியேன் சென்னியுறத் தாழேன் - றினைத்துணையும்
சிந்தியேன் வாழ்த்தேன் றிருக்களவி னாயகனை
வந்தியேன் பற்றேன் மனம்.

(இ - ள்.) திருக்களவில் நாயகனே - திருக்களாநிழலிலமர்ந்த இறைவனே, உன்னை துதித்த நாவால் - உன்னைத் துதிசெய்த நாவினால், உறுதியென்று - உறுதியாமென்று, ஓர் தெய்வம்தனை - வேறொரு தெய்வத்தை, துதியேன் - துதிசெய்யேன், சென்னி உறத் தாழேன் - தலைபொருந்தப்பணியேன், தினைத்துணையும் சிந்தியேன் - தினையளவாயினும் சிந்தனைபண்ணேன், வாழ்த்தேன்-வாழ்த்தேன், வந்தியேன் - வணங்கேன், மனம் பற்றேன் - மனத்தினாலும் பற்றேன், எ - று.

திருக்களவீசனே; உன்னையன்றிப் பிறதெய்வங்களைத் திரிகரணங்களாலும் வழிபடேன் என்பது கருத்து. "மற்றோர்தெய்வங் கனவிலுநினையாது" என்றார் திருவாதவூரரும். துதியேன், வாழ்த்தேன் என்றமையால் வாக்கும்; தாழேன், வந்தியேன் என்றமையால் காயமும்; சிந்தியேன், பற்றேன் என்றமையால் மனமும் அடங்கும். துதித்தல்-புகழ்தல். வாழ்த்தல் - மங்களாசாசனம்செய்தல். சிந்தித்தல்-மனனஞ்செய்தல். மனத்தால்பற்றல் - பாவனைசெய்தல். உறுதி தொழிலடியாகப் பிறந்தபெயர். உறுபகுதி, த் எழுத்துப்பேறு, இ செயப்படுபொருள்விகுதி. தினை-சிறுமையைக் குறிக்கும் குறிப்புச்சொல். "தினைத்துணை நன்றிசெயினும்" என்பது குறள்.

(66) பற்று தழற்சுடலை மன்றிற் பதமெடுத்துச்
சுற்று பவுரிகொளுந் தூயோனே - கொற்றவனே
மட்டொழுகும் பூங்களா வள்ளலே யென்றுரைக்கின்
விட்டொழிந்து போமே வினை.

(இ - ள்.) பற்று - மூள்கின்ற, தழல் - நெருப்புள்ள, சுடலை - மயானமாகிய, மன்றில் - சபையில், பதம் எடுத்து சுற்று - திருவடியைத்தூக்கிச் சுற்றுகிற, பவுரி - பவுரிக்கூத்தை, கொளும் - உனக்குரிமையாகக்கொண்ட, தூயோனே - பரிசுத்தனே, கொற்றவனே - அரசனே, மட்டொழுகும் - தேனொழுகுகின்ற, பூ - மலர்களையுடைய, களா - களாநிழலிலமர்ந்த, வள்ளலே - பெருங்கொடையாளனே, என்று உரைக்கின் - என்றுசொன்னால், வினை - இருவினைகள், விட்டு ஒழிந்துபோம் - நம்மைவிட்டு நீங்கிப்போம், எ - று.

அடியார் விரும்பியதை விரும்பியபடி வரையாது ஈவோனாகையால் "வள்ளலே" என்றார். போமே என்பதில் ஏகாரம் இரக்கப்பொருளது. இறைவர் பவுரிகொண்டாடுதல் சர்வசங்காரகாலத்தில். பவுரி - வலமிடமாகச் சுற்றியாடுவதோர் கூத்தின்விகற்பம். "நாற்றடந் தோடிசையெட்டினுந் தட்டநரகளிக்கும், கூற்றடுந்தாளெழு பாதலம்போய்ப் புகக்கொன்றைகளூ, றூற்றெழும்பொன்முடி யண்டகடாக மொளிக்கின்று, பாற்றிருமேனிக்களவீச னூடும் பவுரி கொண்டே" என்றார் கலித்துறை யந்தாதியினும்.

(67) வினைவிலங்கை வெட்டுமெநள் வீட்டின்பங் காட்டும்
நினையுநினை வெல்லா நிரப்பும் - கனவிதழிப்
பூமாலை யெண்டோட் புனிதன் களாவனத்துக்
காமாரி பொன்னங் கழல்.

(இ - ள்.) கனம் - பெருமைபொருந்திய, இதழி பூமாலை - கொன்றைப் பூமாலையையணிந்த, எண்தோள் - எட்டுத்தோள்களை யுடைய, புனிதன்-பரிசுத்தன், களாவனத்து - களாவனத்திலமர்ந்த, காம அரி-மன்மதனையெரித்தவன், (அவனது) பொன்னங்கழல்-பொன்னடியானது, வினைவிலங்கை வெட்டும்-இருவினைகளாகிய விலங்கை வெட்டிவிடும், அருள்வீட்டு இன்பம்காட்டும் - அருளோடு முத்திச் சுகத்தைக்காட்டும், நினையும் நினைவு எல்லாம் நிரப்பும்-எண்ணுகின்ற எண்ணங்களையெல்லாம் பூர்த்திசெய்யும், எ - று.

நல்வினை தீவினைகளிரண்டும் ஒருவனுக்குஞானத்தைத்தடுத்துப் பந்தம் அடைவிப்பதில் பொன்விலங்கும் இரும்புவிலங்கும்போலத் தம்முள் ஒப்பனவாதலால் அவ்விருவினைகளையும் விலங்காக உருவகஞ் செய்து அவற்றை வெட்டிஎறிந்து உச்சீவிக்கும் உபாயமும் குறித்தனர். உயிர்கள்மேல் அருளில்லாதவர்களுக்கு வீட்டுலகத்தின்பம் இல்லையாகையால், "அருள்வீட் டின்பங்காட்டும்" என்றார். காட்டும் இங்குக்கொடுத்தல். அருளைக்கொடுத்தலாவது அருளுடையவனாகச் செய்தல். இவ்வாறன்றி அருளுடையார் அடையும் வீட்டின்பம் எனினுமாம். "அருளில்லார்க் கவ்வுலகமில்லை பொருளில்லார்க்-கிவ் வுலகமில்லாகியாங்கு" என்பதுதிருக்குறள். இதழி-விரிந்த இதழ்கள் உள்ளது. இறைவன் சம்பூர்ணனாகையால், அடியார் "நினையும் நினைவெல்லாம் நிரப்பும்" என்றார். நிரப்பும் பிறவினைச் செய்யுமென் முற்று. தன்வினை நிரம்பும்.

(68) கழலாப் பிறவிக் கடற்சுழியிற் பட்டுச
சுழலா வறிவு தொலைந்தே - னிழல்சுளித்துக்
குன்றதிர்க்கு மாவுரிவைக் கோமானே பால்வண்ணா
என்றழைப்பேன் வேறறியே னே.

(இ - ள்.) கழலா - நீங்காத, பிறவிகடல் - பிறவியாகிய கடலின், சுழியில் பட்டு - சுழியிலகப்பட்டு, சுழலா - சுழன்று, அறிவு தொலைந்தேன் - அறிவழிந்தேன், நிழல்சுளித்து - தனது சாயையைக் கோவித்து, குன்று அதிர்க்கும் - மலையை நடுங்கச்செய்கிற, மா உரிவை - யானைத்தோலைப்போர்த்த, கோமானே - இறைவனே, [பால் வண்ணா-பால்வண்ணனே, என்றுஅழைப்பேன்-என்று சொல்வேன், வேறு அறியேன் - வேறொன்றையுஞ்செய்ய அறியேன், எ - று.

கழலாஎன்றது உலகியல்பை நினைத்து இறைவனடியை நினையாதவர்களுக்குநீங்காதஎன்றபடி. பிறவிக்கடற் சுழியிற்பட்டுச் சுழலலாவது - நீர்ச்சுழலில்பட்டவன் அதனினின்றும்மீளுதல் அரிதாய் அதனால் ஈர்க்கப்பட்டு அலக்கழிதல்போலமேலும்மேலும் பலபிறவி

களடைந்து துயருழந்துநிற்றல். யானைதன்னிழலைக்கண்டு சுளிக்கும் என்பதனை "தன்னிழல் கண்டு சீறுங்கருத்தது" என்பதனாலுமறிக. சுழலா - செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். உரிவை செயப்படுபொருள் விகுதியாகிய ஐகாரவீற்றுத் தொழிலடியாகப் பிறந்தபெயர்.

(69) ஏத மகற்றி யிருமை பெருமையெனும்
வாத மகற்றியெனை வாழ்வித்தான் - காதுபுலித்
தோலுடையான் பைங்களவின் றூறுடையான் கூற்றுதைத்த
காலுடையான் பஞ்சாக் கரன்.

(இ-ள்.) காது - கொல்லுந்தொழிலையுடைய, புலித்தோல் உடையான் - புலித்தோலையுடையவன், பை களவின் தூறு உடையான் - பசுமையாகிய களாச்செடியை யுடையவன், கூற்று உதைத்த கால் உடையான் - யமனையுதைத்த திருவடியையுடையவன், பஞ்ச அக்கரன் - ஐந்தெழுத்தையுடையவன், (அவன்) ஏதம்அகற்றி - என் துன்பத்தை நீக்கி, இருமை - இம்மை மறுமைகளும், பெருமை - மோட்சமும், எனும்-என்கின்ற, வாதம் அகற்றி-வாதங்களையும் நீக்கி, என்னை வாழ்வித்தான் - என்னை வாழ்வித்தனன், எ - று.

ஏதம்என்றது காமம், வெகுளி, மயக்கங்களாகிய முக்குற்றங்களை. இவைகளை அகற்றவே இவற்றின் காரியங்களாகிய வினைப்பயன்கள் உண்டாகா என்பதும் அவை உண்டாகாத நிலையே முத்தியென்பதும்பெற்றும். இருமை - இம்மை மறுமைப்பயன்களைஉணர்த்தலால் பண்பாகுபெயர். எல்லாப்பொருளினும் பெருமையுடையதாதலால்முத்தி பெருமையெனப்பட்டது. இது பண்பாகுபெயர். காமவெகுளிமயக்கங்களற்றுமுத்தியடைந்தபின்அவ்வான்மாஇருமை பெருமைகளைப்பற்றி விவகரிக்கநேராதாகையால் "இருமைபெருமையெனும்வாதமகற்றி" என்றார். பசுமைஎன்பது ஈறுபோதல் என்பதனால்மைகெட்டு, அடியகரமையாதல் என்பதனால் அகரம்ஐகாரமாய், இனையவும் என்றதனால் சு கெட்டு, பை என்றாய் வல்லினம்வந்து புணர இனவெழுத்துமிக்கு பைங்களவு என்றாயது. அக்ஷரம் - அக்கரம் எனத்தற்பவமாய்த்திரிந்தது. பஞ்சாக்ஷரம் தீர்க்கசந்தி.

(70) கரங்கொண் டலர்தூவார் கண்கொண்டு பாரார்
சிரங்கொண் டடியிறைஞ்சல் செய்யா - குரங்கொண்ட
வாற்றில்வருந் தென்கருவை யீசனுக்காட் செய்யாமல்
கூற்றுவற்காட் செய்வார் குணம்.

(இ - ள்.) கரம்கொண்டு - கையினால், அலர் தூவார் - மலர்களைச் சொரியார், கண்கொண்டுபாரார் - கண்ணினால்தரிசியார், சிரம் கொண்டு - சிரத்தினால், அடி - (சிவபிரானது) திருவடியை, இறைஞ்

சல்செய்யார் - வணங்கார், (இது) உரம்கொண்ட - வலிமையைக்கொண்ட, ஏற்றில்வரும் - இடபவாகநத்தின் மீதேறிவருகின்ற, தென்கருவை ஈசனுக்கு - தென்கருவைப்பிரானுக்கு, ஆள்செய்யாமல் - அடிமைசெய்யாமல், கூற்றுவற்கு-யமனுக்கு, ஆள்செய்வார்-அடிமைசெய்வாரது, குணம் - குணமாகும், எ - று.

தென்கருவை ஈசனுக்கு அடிமைப்படாமல்யமனுக்குஅடிமைப்படுவார் குணம் அலர்தூவாமை முதலியவாம் எனவே, கூற்றுவனுக்கு அடிமைப் படாதவர்களாய்த் தென்கருவையீசனுக்கு அடிமைப்பட்டவர்கள் அலர்தூவுதலும், தரிசித்தலும், இறைஞ்சுதலுமே குணமாகவுடையார் என்பதுகருத்து. கரம், கண், சிரம் என்பவற்றிலுள்ளகொண்டு என்பவைமூன்றும் வேற்றுமைச்சொல்லுருபுகள். இவை கருவிப்பொருளன. கூற்றுவற் காட்செய்தலாவது மரணவேதனையிலகப்படுதல்.

(71) குணக்குன்றே தென்கருவைக் கோவே நறும்பூ
மணக்குங் களாவனத்து வாழ்வே - கணப்பொழுதும்
அன்னை மறந்த வருங்குழவி யுய்ந்தாலும்
உன்னைமறந் துய்யா துயிர்.

(இ - ள்.) குணக்குன்றே - நற்குணமலையே, தென்கருவைக் கோவே - தென்கருவை இறைவனே, நறும்பூமணக்கும் - நல்லமலர்கள் பரிமளிக்கின்ற, களாவனத்துவாழ்வே - களாவனத்தில் வாழ்வோனே, அன்னைமறந்த - தாயைமறந்த, அருங்குழவி உய்ந்தாலும் - அருமையாகிய குழந்தை பிழைத்திருந்தாலும், கணப்பொழுதும் - க்ஷணகாலமும், உன்னைமறந்து-உன்னை மறந்து, உயிர் உய்யாது-என்னுயிர் பிழைத்திராது. எ - று.

அன்னை மறந்த என்பதற்கு அன்னையினால் மறக்கப்பட்ட என்றும், உன்னை மறந்து உய்யாது உயிர் என்பதற்கு உன்னால் மறக்கப்பட்டு உயிர்பிழைக்காது என்றும், உரைப்பினும் பொருந்தும். இப்பொருளில்மறந்தஎன்பதைச்செயப்பாட்டுப்பொரு‍ளெச்சமெனவும், உன்னை உருபு மயக்கமெனவும், மறந்து மறக்கப்பட என்னும் செயப்பாட்டுச் செயவெனெச்சத் திரிபு என்றும் கொள்க. இறைவனைக் குணக்குன்றே என்றுஉருவகஞ் செய்ததின் விவரத்தை 40 ஆம் செய்யுளுரையிற்காண்க. குன்றேஎன்னும் விளிப்பெயர்முன் வல்லினம் இயல்பானதற்குச் சூத்திரம்:—"ஈற்றியாவினாவிளிப்பெயர் முன்வலியியல்பே" என்பது. கோ-விகுதிபெறாத ஆண்பாற்பெயர். "நம்பியாடூஉ விடலை கோவேள்குரிசில்தோன்றலின்னனவாண் பெயராகுமென்ப".

என்பது சூத்திரம். மணக்கும் - மணம் என்னும் பெயரடியாகப்பிறந்த செய்யுமென் வாய்பாட்டுப் பெயரெச்சம். கணம் - க்ஷணம் என்னும்வடமொழியின் திரிபு

(72) உயிரிறந்த பொய்க்கூட்டை யுற்றா ரெடுத்து
வயிரவிற கிற்றீ மடுத்துப் - பெயரழியச்
சுட்டுநீ றாக்குமுன்னஞ் சொல்லீர் கருவைமன்றில்
நட்டமிடுங் காலினலம்.

(இ - ள்.) (உலகத்தாரே) உயிர்இறந்த - உயிர்நீங்கிய, பொய்கூட்டை - பொய்யாகிய சரீரத்தை, உற்றார்எடுத்து-உறவினர்எடுத்து, வயிரம்விறகில்-வயிரம்பற்றிய விறகினிடத்து, தீமடுத்து - நெருப்புப்பெய்து, பெயர்அழிய - பேர்நீங்க, சுட்டு - எரித்து, நீறுஆக்குமுன்னம்-சாம்பலாக்குதற்கு முன்பே, கருவை - திருக்கருவையிலுள்ள, மன்றில்நடம் இடும் - அம்பலத்தில் நடனஞ்செய்த, காலின்நலம் - திருவடியின் நன்மையை, சொல்லீர் - புகழ்ந்துசொல்லுவீர், எ - று.

சேதனமாய் அருவாய் நித்தியமாயுள்ளஉயிர்வினைவயத்தால் உடலோடுகூடி, அவ்வினைமுடிந்தவுடனே அவ்வுடலை விட்டுச்செல்ல, அவ்வுடல் அழிதலால் "பொய்க்கூடு" என்றார். மடுத்து இறந்தகால வினையெச்சம் - பகுதி மடு. சுட்டு நீறாக்கியபின் உடலென்கிறபெயரிட்டழைப்பதற்கும் இல்லாமல்மறைதலால் "பெயரழிய" என்றார். சொல்லீர் ஏவற்பன்மைமுற்று. பொன்னம்பலத்துத் திருநடனஞ்செய்த திருவடிகளை மன்னஞ்செய்பவராதலால் "கருவைமன்று" என்றார். சேதனர்களுடைய சன்மவிடாய்க்கு நிழலாய்இருப்பது இறைவனுடைய திருவடியாதலால் "நட்டமிடுங் காலினலம் சொல்லீர்" என்றார்.

(73) நலனழிந்து நல்வினைபோய் நாணழிந்து நல்ல
குலனழிந்து நல்குரவு கூர்ந்து - பலரிகழ
நிற்ப ரனைத்துயிராய் நின்றனைத் தென்கருவைத்
தற்பரனைத் தான்றுதியா தார்.

(இ - ள்.) அனைத்து உயிர்ஆய் நின்றனை - எல்லாச் சீவராசிகளுமாகி நின்றவனை, தென்கருவைத் தற்பரனை - தென்கருவாபுரித் தற்பரனை, துதியாதவர் - துதிசெய்யாதவர், நலன் அழிந்து - அழகழிந்து,நல்வினைபோய்-புண்ணியத்தையிழந்து, நாண் அழிந்து-நாணங்கெட்டு, நல்லகுலன் அழிந்து-நற்குலங்கெட்டு,நல்குரவுகூர்ந்து-வறுமைமிகுந்து,பலர்இகழநிற்பார்-பலரும் அவமதிக்கும்படி நிற்பர். எ-று.

தென்கருவைநாதனைத் துதியாதவர் இவ்வாறுவர் எனவே, துதிப்பவர் நல்னடைதல்முதலிய சிறப்புகளைப்பெற்று வாழ்வர் என்பது

கருத்து. பூவின்நாற்றம்போன்று உயர்ந்தெங்கும் ஒழிவறநிறைந்து மேவியபெருமையுடையவன் ஆதலால் "அனைத்துயிராய்நின்றானை" என்றார். தற்பரன்-தானே பரமாயிருப்பவன். நல்குரவுதொழிற்பெயர். பகுதிநல்கூர் வு விகுதி, அ சாரியை. கூர்ந்து-உரிச்சொலடியாகப்பிறந்த இறந்தகாலவினையெச்சம்.

(74) தாரமனை மட்டுந் தனையறிந்தோ ரூர்மட்டும்
சேருமுற வவ்வூர்த் தெருமட்டுஞ் - சார்வதன்றி
நங்கருவை யானென்ற நல்வினைபோற் செல்கதியின்
எங்குமுத வாரோ யிவர்.

(இ - ள்.) தாரம் மனைமட்டும் - மனைவியானவள் வீட்டளவும், தன்னைஅறிந்தோர் ஊர்மட்டும் - தன்னையறிந்தவர் ஊரினளவும், சேரும் உறவுஅவ்வூர் தெருமட்டும்-கூடுகின்ற உறவினர் அவ்வூரின் தெருவளவும், சார்வது அன்றி - தொடர்வதல்லது, நம்கருவையான் என்ற-நம்கருவாபுரியிறைவனேயென்று சொன்ன, நல்வினைபோல் - புண்ணியம்போல, செல்கதியில் - போகின்றகதிகளில், எங்கும் - எவ்விடத்தும், இவர்உதவார் - இவர்உதவமாட்டார், எ - று.

தாரம் - மங்கலியங்கோத்தநாண். அது இங்கு அதனை அணிந்த மனைவிக்காயிற்று. ஊர்த்தெரு - உறுப்புத்தற்கிழமைப் பொருளதாகிய ஆறாம்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். "மனையாளுமக்களும் வாழ்வுந்தனமும் தன்வாசன்மட்டே, இனமானசுற்ற மயானமட்டே வழிக்கேதுதுணை, தினையாமளவெள்ளவாகிலுமுன்பு செய்ததவம், தனையாளவென்றும் பரலோகஞ் சி,றிக்கும் சத்தியமே" என்றார் பட்டணத்தடிகளும்.

(75) இவருறவ ரென்ப ரிவர்பகைஞ ரென்பர்
அவரவராற் செய்வதொன்றங் காமோ - வெவரேனும்
தேனொழுகும் பூங்களவார் செய்விப்ப தன்றியிந்த
மானிடரா லுண்டோவசம்.

(இ - ள்.) இவர் உறவர்என்பர் - இவர் உறவினரென்பார்கள், இவர்பகைஞர் என்பர் - இவர் பகைவர்என்பார்கள், அவர் அவரால் செய்வது ஒன்றுஅங்குஆமோ - அவரவர்களாற் செய்யப்படுங் காரியம்ஒன்று அவ்விடத்துஇயலுமோ, எவரேனும் - யாவராயினும், தேன்ஒழுகும் - தேனொழுகுகின்ற, பூ - மலர்களையுடைய, களவார்- களாநிழலிலமர்ந்தவர், செய்விப்பது அன்றி, செய்விப்பதேயல்லாமல், இந்தமானிடரால்-இந்தமனிதரால், வசம் உண்டோ-(யாதொன்றும்) செய்யவசமோ. எ - று.

"தீமை நன்மைமுழுது நீ வேறோர் பரிசிங்கொன்றில்லை" என்றார் திருவாதவூரடிகளும். யாவும் சிவன்செயல் எனத்தேறவேண்டுமென்பதுகருத்து. இறைவன் உயிர்களுக்கு இருவினைப்பயன்களை உறவினர், பகைஞர்என்பவர் வாயிலாய் ஊட்டுவிப்பதன்றி, மனிதர்களால் செய்யக்கடவன ஒன்றுமில்லை என்பதாம்.

76 வசமறுகித் துன்பம் வருத்தமெலிந் தாலும்
அசையுறுநோய் கொண்டாலு மையா - இசையளிசேர்
தாமமறா வேணித் தமிழ்க்கருவை நாதாவுன்
நாமமற வாதடியே னா.

(இ - ள்.) ஐயா - ஐயனே, இசை - இசைபாடுகின்ற, அளிசேர் - வண்டுகள்மொய்க்கின்ற, தாமம்அறா - கொன்றைமலர் மாலை நீங்காத, வேணி - சடாபாரத்தையுடைய, தமிழ்க்கருவைநாதா-தமிழ்க்கருவாபுரி யிறைவனே, வசம்மறுகி - வசமயங்கி, துன்பம்வருத்த-துன்பமானதுவருத்த, மெலிந்தாலும் - மெலிவடைந்தாலும், அசை உறுநோய் கொண்டாலும் - வாட்டம் மிகுதற்கேதுவாகிய பிணி கொண் டிருந்தாலும், அடியேன்நா - அடியேனது நாவானது, உன் நாமம்மறவாது உன் திருநாமத்தைமறவாது, எ - று.

தமிழ் திரவிடம் என்னும் ஆரியமொழிச் சிதைவென்பர்சிலர். இனிமையென்னும் பொருள்தரும் தமிழ்ச்சொல்லென்றே சொல்வர் சிலர். "அடியேன் நா" நன்-மெய்-ஆம் "என்னுஞ் சூத்திரவிதியால் வருமொழிப்பொது நகரம் சிறப்பு ளகரமாகத்திரிக்தபோது நிலைமொழியீற்றுனகரம்கெட்டது. உன்னுமம்என்பதுகுறிலணைந்தமொழியாதலால் நிலைமொழியீற்றுனகரம் அவ்வாறுகெடாமற் புணர்ந்தது.

(77) நாவுக் கழகுனது நாம நயந்துரைக்கும்
பாவுக் கழகுனையே பாடுவது - தாவில்
கலைக்கழகு ஞானங் கருவையா னேயென்
தலைக்கழகு நின்கமலத் தாள்.

(இ - ள்.) கருவையானே - திருக்கருவையை யுடையானே, என்நாவுக்குஅழகு - எனது நாவுக்குஅழகாவது, உனதுநாமம் - உன் திருநாமமே, நயந்துஉரைக்கும் - விரும்பிச்சொல்லுகின்ற, பாவுக்கு அழகு - பாடலுக்குஅழகாவது, உன்னையேபாடுவது - உன்னைக்கீர்த்தித்துப்பாடுவதே, தாஇல் - கெடுதலில்லாத, கலைக்குஅழகு - நூலுணர்வுக்கு அழகாவது, ஞானம் - ஞானமே, என்தலைக்குஅழகு - என் சிரத்துக்கு அழகாவது, நின் கமலம்தாள் - உனதுதாமரை மலர்போன்ற திருவடியே, எ - று.

ஏகாரம் மனிதரையும், பிறதெய்வங்களையும் பிரித்தலால் பிரிநிலை தா முதனிலைத்தொழிற்பெயர். கலைக்கழகுஞானம் என்றமையால் ஞானமில்லாதான் கற்றகல்வி பயனில்லையென்றபடி. ஞானமாவது வீடுபெயர்க்கும் உணர்வு. அதனைத் திருவள்ளுவர் நிலையாமை துறவு, மெய்யுணர்தல், அவாவறுத்தல் என நான்கதிகாரங்களாற் கூறினார். "என்தலைக்கழகுநின்கமலத்தாள்" என்று ஞானத்தைச்சேர வைத்தது அந்தஞானமில்லாதவர்செய்யும்வணக்கம் சிலபோதிருந்து மாறும் என்றற்கு. என்தலைக்கழகுநின்கமலத்தாள்" என்பதனைத் திருவள்ளுவரும் "கோளில் பொறியிற்குணமிலவே யெண்குணத்தான்-தாளை வணங்காத்தலை" என்றார். "இடையுரி வடசொலி னியம்பியகொளாதவும்" என்றசூத்திரவிதிப்படி "வைவேற்றுமை யிற்றடவும் அல்வழியவற்றோடுறழ்வும் வலிவரினும்" எனஉறழாமல் இயல்பாய்வந்தது. இல்கலை-என்பது,

(78) தாளா லெனது தலையெழுத்தை யுஞ்சிதைத்து
மீளா வடிமை விலையெழுதி - யாளா
உளவருத்தந் தீர வுவந்தென்னைவந் தாண்டான்
களவனத்தி லொப்பனைபா கன்.

(இ - ள்.) களவனத்தில் - களாவனத்தி லெழுந்தருளிய, ஒப்பனைபாகன் - ஒப்பனையம்மைபங்கன், தாளால்-தன்திருவடியினால், எனது தலையெழுத்தையும் சிதைத்து - என்தலையெழுத்தையு மழித்து, மீளா - மீட்கவொண்ணாத, அடிமைவிலைஎழுதி - அடிமை விலைப் பத்திரத்தையுமெழுதி, ஆள் ஆ - அடிமையாக, உள்ளம்வருத்தம்தீர - மனவருத்தம் நீங்கும்படி, உவந்து - விரும்பி, என்னைவந்து ஆண்டான் - என்னைவந் தாண்டருளினான், எ - று.

இறைவன் வலியவந்து எனக்குத்திருவடிதீக்ஷைசெய்து ஜனனமரணங்களைநீக்கி என்னை அடிமைகொண்டனன் என்பது கருத்து. இக்கருத்தை நான்காஞ்செய்யுளாலும், அதன் உரையாலும் விரிவாய்க்காண்க.

(79) கன்னற் சிலைவளையக் கால்வளைய நேருருவ
அன்னமனை யார்கலவிக் காளாகி - முன்னித்
திரிந்ததெல்லாம் போதுமப்பா தென்கருவை வேந்தே
பரிந்தடிமை கொள்வாயிப் பால்.

(இ - ள்.) அப்பா - ஐயனே, தென்கருவைவேந்தே - தென்கருவைக்கிறைவனே, கன்னல் சிலை வளைய - (காமனது) கரும்புவில் வளையவும், கால்வளைய - அவ்வில்லின்குதைவளையவும், நேர்உருவ - அம்புகள்நேராகவந்து என்மீதுபட்டுருவவும், அன்னம் அனையார் - அன்னத்தை நிகர்ப்பவராகிய மாதரது, கலவிக்கு - புணர்ச்சிக்கு,

ஆள்ஆகி-அடிமையாகி, முன்னி - (அக்கலவியையே) நினைத்து, திரிந்ததுஎல்லாம் - உழன்றதெல்லாம், போதும் - அமையும், இப்பால் - இப்பொழுதாயினும், பரிந்து அடிமைகொள்வாய்-விரும்பி யென்னை அடிமைகொள்வாயாக, எ - று.

கன்னற்சிலை மூன்றும் வேற்றுமையுருபும் பயனுமுடன்றொக்க தொகை. அன்றிஇருபெயரொட்டுப் பண்புத்தொகையுமாம். கால் என்றது அதன்குதைகளை. (குதை - வில்லின்முனை.) கன்னற்சிலை வளைய, உருவ, என்றமையால் மலரம்பு என்பதுபெற்றாம். அறிவுடையாராலும் தடுக்கப்படாத வலிமையுடைமையால் "நேர்உருவ" என்றார். கொள்வாய்ஏவலொருமைவினைமுற்று. மன்மதனுக்கு வில்கரும்பும், நாண்வண்டும், அம்பு-தாமரை, அசோகு, குவளை, மா, முல்லை என்னும் ஐந்துமலர்களுமாம்.

**(80)** பாலன் பசிக்கிரங்கிப் பாற்கடலை யீந்தருளும்
நீல மணிமிடற்ற னீயன்றோ - சோலைதொறும்
தேனிரங்குந் தென்கருவைச் செல்வா கொடுந்துயரால்
யானிரங்க நீயிரங்கா யென்.

(இ - ள்.) சோலைதொறும் - சோலைகள்தோறும், தேன்இரங்கும் - வண்டுகளொலிக்கின்ற, தென்கருவைச்செல்வா - தென்கருவாபுரிச்சீமானே, பாலன் பசிக்குஇரங்கி - பாலகனது பசிக்கு இரக்கப்பட்டு, பால்கடலை - திருப்பாற்கடலை, ஈந்தருளும் - கொடுத்தருளிய, நீலமணிமிடற்றன் - நீலமணிபோலும் கண்டத்தை யுடையவன், நீ அன்றோ-நீயல்லவா, (அப்படியிருக்க) கொடுந்துயரால் - கொடிய துன்பத்தினால், யான்இரங்க-நான்முறையிட, நீஇரங்காய்-நீகிருபை செய்யாய், என் - (இதற்குக்காரணம்) யாது, எ - று.

பாலன் - பாலகன் எனவும் வழங்கும். குழந்தையின் பசித்துன்பத்துக்கு இரங்கித்திருமால் பள்ளிகொள்ளும் பாற்கடலை வருவித்ததேவரீர் அடியேன் படுந்துயரங்கண்டு இரங்காத காரணம் என்னென்பதுகருத்து. என் - எவன்என்னும் அஃறிணையிருபாற்கும் பொதுவாகிய குறிப்புவினைமுற்றின் மரூஉ. பாற்கடல் ஈந்தருளிய செய்தி:—வசிட்டராச்சிரமத்தில் காமதேனுவின் பாலைக் குறைவற உண்டு வளர்ந்து வந்த உபமந்யுவாகிய குழந்தையைப் பிதாவாகிய கௌதமர் சிதம்பரத்திலுள்ள தமதாச்சிரமத்திற் கொண்டுவந்து வளர்க்கையில் ஓர்நாள் அக்குழந்தை பசியால் பாலுக்கழுதபோது அதன்பசியைத் தீர்க்கும்பொருட்டுச் சிவபெருமான் திருப்பாற்கடலை அங்கு வரச்செய்தனர் என்பது. சிதம்பரத்தில் இப்போதும் திருப்

பாற்கடல் என ஓர் தீர்த்தத்திற்குப்பெயர்வழங்கி வருகின்றது. "பாலகனார்க்கன்று பாற்கடலீந்திட்ட கோலச்சடையற்கேயுந்தீபற" என்றார் திருவாதவூரடிகளும்.

(81) இரங்கா யெனினு மிரங்கினும்யான் வேண்டும்
பரங்காண் கருவைப் பரனே - நிரந்தரமும்
இற்கணவ னீத்தாலு நீங்கா திருக்குமொரு
பொற்புடைய கற்புடையாள் போல்.

(இ - ள்.) கருவைப்பரனே-திருக்கருவைச்சிவபெருமானே, நிரந்தரமும்-எப்பொழுதும், இல்-வீட்டில்நின்று, கணவன்நீத்தாலும்-நாயகன் நீக்கினாலும், நீங்காது இருக்கும் - நீங்காமலிருக்கிற, ஒரு பொற்பு உடைய-ஒப்பற்ற அழகையுடைய, கற்புடையாள்போல்-கற்புள்ளமனையாள்போல, இரங்காய் எனினும் - நீயிரங்காயாயினும், இரங்கினும் - இரங்கினாயாயினும், யான் வேண்டும்பரம் - நான் விரும்பும் பரம்பொருளே யாவாய், எ - று.

நாயகன் தன் மனைவியை ஆதரித்தாலும் ஆதரிக்காவிட்டாலும் அவனை அநுசரித்து அவனுழையில்நிற்றல்,கற்புடையாள் கடமையாயிருத்தல்போல, தேவரீர் இரங்காமல் பராமுகஞ்செய்து துன்பத்தில் வருந்தச்செய்தாலும், இரங்கித் துன்பத்தைநீக்கிக் களிக்கச்செய்தாலும் உன்னிடத்தன்பு நீங்காதிருத்தலே என்கடன் என்பதுகருத்து. முதலடியிலுள்ள உம்மைகளிரண்டில் முன்னது எதிரது தழீஇயது. பின்னது இறந்தது தழீஇயது. நிரந்தரமும் - முற்றுமை. நீத்தாலும் என்ற உம்மை எதிர்மறை இல் இடவாகுபெயர். யான்வேண்டும் பரம் என்பதற்குயான் உன்னைவிரும்பும் பட்சத்தினை யுடையாய், என்றும், என்னால்விரும்பப்படுவது உன்பாரம்என்றிருப்பதேயாம், என்றும் உரைப்பினும் பொருந்தும்.

(82) கற்பங் கடந்து கடவுளராய் வாழ்வரோ
பொற்பங் கயன்முதலாம் புத்தேளி - ரற்புதமே
தெவ்வடக்கு சூலத்தார் தென்கருவை நாதனார்
வெவ்விடத்தை யுண்ணா விடின்.

(இ - ள்.) தெவ் அடக்குசூலத்தார் - பகைவரை யடக்குகின்ற சூலத்தையுடையவரும், தென்கருவைநாதனார்-தென்கருவாபுரிஇறைவருமாகிய சிவபிரானார், வெவ்விடத்தை உண்ணாவிடின்-வெம்மையாகிய விஷத்தைப் பருகாவிட்டால், பொற்பு - அழகுள்ள, அயன் முதல்ஆம் புத்தேளிர் - பிரமன்முதலாகியதேவர்கள், கற்பம்கடந்து-கற்பங்களைத்தாண்டி, கடவுளர் ஆய்வாழ்வரோ - தேவர்களாய் வாழ்வரோ, அற்புதமே - ஆச்சரியமே, எ - று.

வித்தையால் ஏமாற்றினனென்று அவனை வெய்யிலில் நிற்கவைத்து வருத்தினன். அன்பரது வருத்தத்துக்கு இரங்கிச் சிவபெருமான் வையையாற்றைப் பட்டணத்தின்மீது பெருகிவரச்செய்தனர். அப்போது அரசன் வையையாற்றை அடைக்கும்படி நகரத்தாருக்குக் கட்டளையிட, அவ்வூரார் அரசனுணையை மேற்கொண்டு அடைத்துவருகையில், அவ்வூரில் தனக்குத்துணை ஒருவருமில்லாத வந்தியென்னும் ஒருபிட்டு வாணிச்சி சொக்கநாதக் கடவுளிடம் சென்று தன்பங்கை அடைப்பதற்குத் தனக்குத் துணையொருவருமில்லையென்றுசொல்லி முறையிட, பெருமான் ஒருசிற்றாளாய் அவளுக்குமுன் தோன்றி நீ உதிர்ந்தபிட்டையெல்லாம் எனக்குக் கூலியாகத்தருவாயாகில் யான் உன்பங்கையடைக்க இசைவேன் என்ன, அவ்வாறே கொடுக்க இசைந்த அவள்பங்கை அடைக்கப் புறப்பட்ட பெருமான் அவள்சுடும் பிட்டையெல்லாம் உதிரச்செய்து, ஏற்பாட்டின்படி அவ்வுதிர்ந்த பிட்டைவாங்கித் தின்றுகொண்டு தன்பங்கை யடையாமல் வைத்திருந்தமையால், சிற்றாளாய் வந்திருந்த அச்சிவபெருமானைப் பாண்டியன் பிரம்பாலடித்தனன் என்பது.

(85) பகர வருமெழுத்திற் பால்வண்ணு நின்னை
அகரமுத லைம்பத்தொன் ருக்கிப் - புகலாதே
அஞ்செழுத்தா னென்பதென் ஞதி மறைமுதனூல்
நெஞ்சழுத்தி வாழு நிலம்.

(இ - ள்.) பால்வண்ணு-பால்வண்ணனே, ஆதி-முதன்மையாகிய, மறை-வேதமென்கிற, முதல்நூல் - முதனூலை, நெஞ்சு அழுத்தி வாழும் - மனத்திற் பதித்துவாழ்கின்ற, நிலம் - நிலவுலகமானது, நின்னை-உன்னை, பகரவரும் எழுத்தில் - சொல்லவருகின்ற எழுத்துகளுள், அகரம்முதல் - அகரமுதலாகிய, ஐம்பத்தொன்று ஆக்கிபுகலாதே-ஐம்பத்தொன்ருக்கிச்சொல்லாமல், அஞ்செழுத்தான் என்பது என்-ஐந்தெழுத்தை யுடையவனென்று சொல்லுவதற்குக் காரணம் யாது. எ - று.

வேதம் எல்லா நூற்களுக்கும் முதலாய் இறைவனுற் செய்யப்பட்டதாகையால் முதனூல் என்னப்பட்டது. "முனைவன்கண்டது முதனூலாகும்" என்பது சூத்திரம்.வேதம் இறைவனைப்போல்அநாதியென்று சொல்வாருமுளர். நெஞ்சு நிலம் இடவாகுபெயர்கள்.

பால்வண்ணனே, அகரமுதலிய ஐம்பத்தோரக்ஷர ரூபியாகிய உன்னை உலகமானது ஐந்தெழுத்தை யுடையானென்று கூறுதற்குக் காரணம் யாதென்பதுகருத்து. அகரமுதலைம்பத்தொன்று என்றது எல்லாப்பாஷைகளுக்கும் முதலாகிய வடமொழி எழுத்துகளை. அந்த

வடவெழுத்துகளில் உயிர்பதினைந்து, மெய்முப்பத்தாறு ஆக ஐம்பத்தொன்றென அறிக. எல்லாமொழிகளுக்கும்முதலாகிய வடவெழுத்தைக்கூறவே மற்ற பாஷையெழுத்துக்களும் அமையும். ஐந்தெழுத்து - பஞ்சாக்கரம்.

(86) நிலத்திற் பிறந்துடனே நீர்தோய் பசுமட்
கலத்திற் சிதையுமிந்தக் காயம்-நலத்தின்
கடியேறு பூங்களவிற் கண்ணுதலே மீள
அடியேன் சுமவா தருள்.

(இ - ள்.) நலத்தின் - அழகோடு, கடிஏறு - மணமிகுந்த, பூ - மலர்களையுடைய, களவில்-களாநிழலி லெழுந்தருளிய, கண்ணுதலே- நெற்றிக்கண்ணனே, இந்தக்காயம் - இந்தச்சரீரமானது, நிலத்தில் பிறந்து - பூமியில்ஜநிமித்து, உடனே - உடனே, நீர்தோய் - நீர்தங்கிய, பசுமண்கலத்தின் - பச்சைமட்கலம்போல, சிதையும்-அழியும், (ஆதலால் இதனை) மீள - மீளவும், அடியேன்சுமவாது - அடியேன் சுமவாதவண்ணம், அருள் - கிருபைசெய்வாய். எ - று.

இந்தக்காயம் நிலத்திற்பிறந்து அழியும்எனமுடிக்க. நீருள்ளசுடாத மண்பாண்டம் விரைவில் அழியுமாதலாலும் தேகத்தில் பெரும் பாகம் பிருதிவிஆகிய மண்ணாற்செய்யப்பட்ட தாகையாலும் தேகத்தை "நீர்தோய்பசுமட்கலத்திற் சிதையும்" என்றார். கடி - பல்பொருள்குறித்த ஓர் உரிச்சொல். நன் - உரி - சூ 19. - கண்ணுதல் - கண்ணை நெற்றியில் உடையவன் எனவிரிதலால் இரண்டாம் வேற்றுமைத் தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக் காரணப் பெயர். துன்பம் இடைவிடாமலே வருவதை யுணர்ந்து பிறவியை நீக்கவேண்டுமென்கிறஎண்ணத்தைமேற்கொண்டவராகையால் "மீள அடியேன் சுமவாதருள்" என்றார்.

(87) அருளுதவுந் துன்ப மகற்றியறி வாக்கும்
தெருளுதவும் வீட்டின்பஞ் சேர்க்கும் - மருவார்
புனக்களவைக் கோயில்கொண்ட புண்ணியனென் றோத
மனக்களவைத் தீர்க்கு மருந்து.

(இ - ள்.) மனக்களவை - மனத்தின்வஞ்சகத்தை, தீர்க்கும்- நீக்கியருள்கின்ற, மருந்து - மருந்தாகிய சிவபிரான், மருஆர்-மணம் நிறைந்த, புனம்களவை - காட்டிக்களாமரத்தை, கோயில்கொண்ட- திருக்கோயில் கொண்டெழுந்தருளிய, புண்ணியன் - புண்ணியமே திருமேனியாகவுடையவர், என்றுஓத - என்றுசொல்லவே, அருள் உதவும்-அருளைத்தரும், துன்பம்அகற்றி - துயரத்தைஅகலப்பண்ணி

அறிவு ஆக்கும் - நல்லறிவைத்தரும், தெருள் உதவும் - மனத்தெளிவைத்தந்தருளும், வீடு இன்பம் சேர்க்கும் - முத்தியின்பத்தை யடைவிக்கும், எ - று.

அருளாவது தொடர்புபற்றாது இயல்பாகவே எல்லா வுயிர்கண் மேலும் செல்வதாகிய கருணை. அறிவாவது முத்திக்கு நிமித்தகாரணமாகிய இறைவனைக்காணுதல். இறைவனைக் காணுதலாவது உயிரானது தனது அஞ்ஞானங்கெட்டு, அதனோடு ஒன்றுபட்டிருக்க இடைவிடாமல் தியானித்தல். தெருளாவது போகஞானங்களில் முதிர்ந்து காமம், வெகுளி, மயக்கம்என்னும் இம்முக்குற்றங்களின் பெயருங்கெட்டு இறைவனிடத்து அறிவு ஒன்றிநிற்றல். வீடாவது நிரதிசய இன்பத்ததாகியமுத்தி. மனத்துக்கு நோய்போல்நின்று முத்திசேர வொட்டாது வஞ்சிக்கும் காம வெகுளி மயக்கங்களைப் போக்குதலால்சிவபிரானை "மருந்து" என்றார். கோயில்இலக்கணப் போலி.

(88) மருந்தா லொழியா மனத்துன்ப நோயாய்
இருந்தா லுனையெவ்வா றேத்தித் - திருந்துபுகழ்ச்
சொன்மாலை சாத்துவேன் சொற்கருவை யாய்கடுக்கைப்
பொன்மாலை மார்பா புகல்.

(இ - ள்.) சொல்கருவையாய் - புகழையுடைய கருவைப்பதியானே, பொன் - பொன்போன்ற, கடுக்கைமாலை - கொன்றைமலர் மாலையையணிந்த, மார்ப - திருமார்பை யுடையானே, மருந்தால் ஒழியா - மருந்தினால் நீங்காத, மனத்துன்பம் - மனோதுக்கமாகிய, நோய்ஆய் இருந்தால் - பிணியையுடையேனா யிருந்தால், உன்னை - நின்னை, எவ்வாறுஏத்தி - எப்படித்துதித்து, திருந்துபுகழ் - திருந்திய உன்புகழமைந்த, சொல்மாலை சாத்துவேன் - பாமாலையை உனக்குச் சமர்ப்பிப்பேன், எ - று.

உன் திருப்புகழைப் படித்துய்ய அடியேன் மனக்குற்றங்களைப்போக்கி யருளவேண்டும் என்பதுகருத்து, மனநோய், இறைவனருளாலன்றி, ஔஷதங்களால் நீங்காமையின் "மருந்தாலொழியா" என்றார். கடுக்கை-முதலாகுபெயர்.

(89) புகையுந் தழல்கண்ணிற் பொங்கு சினத்தாலே
பகைகொண்டு காலபடர் பற்றி - மிகவும்
தணவாத் துயர்தருமுன் றண்களா வீசன்
கணநாத னைமனமே காண்.

(இ - ள்.) புகையும்தழல் - புகைகின்ற நெருப்பானது, கண்ணில்பொங்கு - கண்களில் மிகுந்துண்டாகின்ற, சினத்தாலே - கோ

வத்தால், பகைகொண்டு - பகைமைகொண்டு, காலபடர் - யமபடர், பற்றி - பிடித்து, மிகவும் - மிகுதியும், தணவாதுயர் - நீங்காததுன்பத்தை, தருமுன் - உண்டாக்குவதற்குமுன்பே, மனமே - நெஞ்சே, தண்களாசன் - குளிர்ச்சியாகிய களாநிழலிலமர்ந்த சர்வேச்சரனுகிய, கணநாதனை - கணநாயகனை, காண் - தரிசிப்பாய், எ - று.

தணவா-ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சமாகையால் தணவாத்துயர் எனவல்லினம் மிக்கது. கணநாதன் - சிவகணங்கட்குத் தலைவன் எனக்கொள்ளுதலேயன்றி, பூதகணங்களுக்குத் தலைவன் என்னலுமாம். மனம் சிவத்தியானத்தழுந்தி யிருப்பவருக்கு மரணவேதனை யில்லையென்பதுகருத்து. இறைவன் பிறவித்தாபத்தால் வருந்தும் ஆன்மாக்களுக்குத் தன்திருவடிநிழலைத்தந்து, குளிரச்செய்பவனுகையால் தண்என்னும் அடைமொழியை களாவுக்கு ஆக்காமல்இறைவனுக்கு ஆக்கினுமாம்.

(90) காவென்றுஞ் சங்கென்றுங் கார்முகிலென் றங்கவர்மேல்
பாவென்றும் பாடப் பதந்தெரிந்த - நாவென்றும்
தன்னைப்பா விக்கத் தமிழ்க்கருவை நாதனூர்
என்னைப்பா வித்தாரிப் பால்.

(இ - ள்) தமிழ்க்கருவைநாதனூர் - தமிழ்க்கருவாபுரி நாயகர், காஎன்றும் - கற்பகச்சோலையென்றும், சங்குஎன்றும் - சங்கநிதியென்றும், கார்முகில்என்று-கார்கால மேகமென்றும், அங்கு-அங்கு, அவர்மேல் - அவர்மீது, பா-பாடல்களை, என்றும்பாட-எக்காலத்தும் பாட,பதம்தெரிந்த-நால்வகைப்பதங்களையுமறிந்த, நா-என்நாவானது, எக்காலத்தும், தன்னைப்பாவிக்க - தன்னைப் பாவனை பண்ணிப்பாடும்படி, இப்பால் - இப்பூமியில், என்னைப்பாவித்தார் - என்னைத் திருவுளம்பற்றினூர், எ - று.

கா என்றது அரிசந்தனம், கற்பகம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம்என்னும் பஞ்சதருக்களை. சங்கு - சங்கநிதி. இனம்பற்றி பதுமநிதியையுங்கொள்க. இவை தம்மை வந்தடைந்தவர்களுக்கு வேண்டியபொருள்களை வேண்டியவளவு தடையின்றிக் கொடுப்பவை. மனிதர்களைப் பாடித்திரிந்த என்னைத் தமிழ்க்கருவைநாதன் தன்னைப்பாடும்படி அருள்செய்தனர் என்பதுகருத்து. அவர் என்றது கா முதலியவாகச் சொல்லுதற் குரியரல்லாத மனிதரை. முகிலென்று என்பதில் உம்மைதொக்கது. பதமென்றது பெயர்முதலிய நால்வகைப்பதங்களை; அலங்காரமொழிகளை யென்னினுமாம். "ஒழிவொன்றில்லாதபல்லூழிதோறூழிநிலாவப்போம், வழியைத்த

ருநங்கள் வானவரீசனைநிற்கப்போய்க், கழியமிகுநல்லவான் கவிகொ ண்டு புலவீர்காள்,இழியக்கருதியோர் மானிடம்பாடலென்னாவதே'' என்றார்பிறரும்.

(91) பருவ மழைத்துளியைப் பார்ப்பதுபோ னாயேன்
உருகி யுணங்கி யுடைந்தேன் - அரிவையுமை
வல்லவனே தென்கருவை வள்ளலே நீயுதவும்
நல்லருளைப் பார்த்திருந்து நான்.

(இ - ள்.) அரிவை உமைவல்லவனே-உமாதேவி வல்லபனே தென்கருவை வள்ளலே - தென்கருவாபுரிவள்ளலே, பருவம் - அவ்வப்பருவத்தில் பெய்கின்ற, மழைத்துளியை - மழைத்துளியை, பார்ப்பதுபோல்-(பயிர்கள்) நோக்குவதுபோல, நான் - அடியேன், நீ உதவும் - நீகிருபைசெய்கிற, நல்அருளை - திருவருளை, பார்த்திருந்து - நோக்கியிருந்து, நாயேன் - நாயினேன்,உருகி - மனங்கரைந்து, உணங்கி உடைந்தேன்-உடல்வாடிமெலிந்தேன், எ - று.

''வான்பார்க்கும் பைங்கூழ்போல் வாளா வுனதருளே, யான்பார்க்க நீபார்த்திரங்கினாய்'' என்றார்பிறரும். இவ்வுவமையால் யான்செய்யக்கூடியமுயற்சி சிறிதும் இல்லையென்பது விளங்கிற்று. அரிவை-தெய்வப்பெண். வேறுஇடங்களில் இருபத்தைந்து வயதுப்பெண்ணையும், மகளிர்பொதுவையும் உணர்த்தும். உமாஎன்னும் வடமொழி உமை என்றாயிற்று. தன்னை வந்தடைந்த அடியார்களுக்குக் குறிப்பறிந்து அவர்விரும்பிய எதையும் கொடுப்பவனாகையால் ''வள்ளலே'' என்றார். வள்ளல்-வரையாது ஈவோர். இதுபண்பாகு பெயர். மக்களுள் வள்ளல்முதல், இடை, கடை எனமூவகையினர். முதல்வள்ளல்-குமுணன், சகரன்,சகாரன், செம்பியன், துந்துமாரி, நளன், நிருதி என்னுமெழுவர். இடைவள்ளல் - அக்குரன், அந்திமான், அரிச்சந்திரன், கர்ணன், சந்திமான், சிசுபாலன், தந்தவக்கிரன் என்னுமெழுவர். கடைவள்ளல் - எழிலி, ஓரி, காரி, நள்ளி, பாரி, பேகன், மலையன் என்னுமெழுவர்.

(92) இருக்கும் திருக்கோயி லேழையே னெஞ்சோ
மருக்கொள் கயிலை வரையோ - திருக்களவோ
சோதிமணி மன்றோ சுடர்விசும்போ பால்வண்ணா
ஓது மறையோ வுனக்கு.

(இ - ள்.) பால்வண்ணா - பால்வண்ணனே, உனக்கு - நினக்கு, இருக்கும் திருக்கோயில் - வீற்றிருக்குந் திருக்கோயிலானது, ஏழையேன் நெஞ்சோ - ஏழையேனது மனமோ, மருகொள் கயிலைவரை

யோ - மணத்தைக்கொண்ட கைலாயமலையோ, திருக்களவோ - திருக்களாநிழலோ, சோதிமணிமன்றோ - ஒளியுள்ள இரத்தினசபையோ, சுடர்விசும்போ - ஒளிபொருந்திய சிதாகாயமோ, மறையோ - வேதமோ, ஓது - சொல்வாய், எ - று,

சிவபெருமானுக்கு இருப்பிடம் அடியார்மனம் முதலியன என்பதுகருத்து. கோ - இறைவன், இல் - வீடு. கோவில்-இலக்கணமுடையது, கோயில்-இலக்கணப்போலி. சிதம்பரத்தில் சிவபெருமான் ஒளிரூபமாய்த் திருக்கோலங்கொண்டிருத்தலால் "சோதிமணி மன்றோ" என்றார். ஒற்றுமை நயங்கருதி, சோதிமணிமன்றோடு சுடர் விசும்பைச்சேரவைத்தார். ஓது - வேதம்படித்தலுக்கே உரியவினை. இந்தவினையடி முதனிலைதிரிந்து தொழிலாகுபெயராய் ஓத்தெனவழங்கும். சிவபெருமானுடைய அநந்த கலியாண குணங்களையும் சொல்வது வேதமாகையால், அதனைவேறுபிரித்து "பால்வண்ணா ஓதுமறையோ" என்றார்.

(93) உனக்கடிமை நானல்லா லுண்டுபல ரேனும்
எனக்குநீ யல்லாமல் யாரே - நினைக்கனிவால
நானழைத்தே னென்றாலு நற்கருவை யானேநீ
தானழைத்தா லன்றோ தரம.

(இ - ள்.) உனக்குஅடிமை - உனக்கு அடிமையாவார், நான் அல்லால் - நானன்றி, பலர்உண்டுஏனும் - பலர் உண்டாயிருப்பினும், எனக்கு நீ அல்லாமல்யார் - எனக்கு நீயன்றித் தலைவராயாருளர், நினை - உன்னை, கனிவால் - அன்பினால், நான் அழைத்தேன் என்றாலும் - நானழைத்தேனாயினும், நல்கருவையானே - அழகாகிய கருவைப்பதியானே, நீதான் அழைத்தால் அன்றோ - நீதானேயழைத்தாலல்லவோ, தரம் - உனக்குமேன்மையாவது, எ - று.

கருவைப்பதியானே உனக்குஎன்னையன்றிப்பல அடியார் உளர் எனினும், எனக்குஉன்னையன்றி இறைவர் வேறொருவருமில்லையாதலால் என்னை நீயேகூவி யாண்டருளவேண்டு மென்பது கருத்து.

(94) தரம்பிரித்துக் கொள்ளுந் தமிழ்ப்பாடல் கொண்டு
வரம்பிரித்து வாழ்வு வழங்கின் - விரிந்தநிலா
வேணிவைத்த தென்கருவை வெள்ளைவள்ள லேயுனக்கு
நீணிலத்தி லுண்டோ நிகர்.

(இ - ள்.) விரிந்தநிலா - ஒளிவிரிந்த பிறையை, வேணி வைத்த - சடாபாரத்திலமைத்தருளிய, தென்கருவை வெள்ளைவள்ளலே - பால்வண்ணனே, தரம்பிரித்துக்கொள்ளும் - வகைபிரித்துக்

காம் வேற்றுமைச் சொல்லுருபேற்றுவந்தது. ஆல்-அசை. வின்வது தொழிற்பெயர். உள்வது - வினையாலணையும் பெயர். கொண்டாய் விளிப்பெயர்.

**(98)** பார்முதலாய் வானப் பரப்பா யனைத்தினுக்கும்
கார்முதலா யுண்டியருள் காப்பாகிச் - சீர்முதலா
யார்க்குந் துணையாங் களவீச நின்னையன்றிப்
பார்க்கினுண்டோ வின்பம் பகர்.

(இ - ள்.) பார்முதல்ஆய் - பூமிமுதலாக, வானப்பரப்புஆய் - ஆகாயவிரிவாகி, அனைத்தினுக்கும் - எல்லாவுயிர்களுக்கும், கார்முதல் ஆய்-மேகம்முதலியவாகி, உண்டிஅருள்-உண்டியையுதவுகின்ற, காப்பு ஆகி - காவலாகி, சீர்முதல்ஆய் - மேன்மைக்குமுதல்வனாகி, யார்க்கும் துணைஆம் - யாவர்க்கும் துணையாகின்ற, களவீச - களவீசனே, நின்னைஅன்றி - உன்னையல்லாது, பார்க்கின் - நோக்குமிடத்து, இன்பம் உண்டோ - சுகமுண்டோ, பகர் - சொல்வாய், எ - று.

பார்முதலா வானப்பரப்பாய் என்றதனால் மக்கள் தேவராயுள்ளாருக்கும் என்பதும், அனைத்தினுக்கும் என்றமையால் ஈரேழு பதினன்கு லோகங்களிலுமுள்ள சகல சீவராசிகளுக்கும் என்பதும் பெற்றும். அவற்றுள் பூமியிலுள்ள சீவராசிகளுக்கு மழைதுணைக் காரணமாயும் இன்றியமையாததாயும் இருப்பதனால் கார்முதலா யுண்டியருள் என்றும் கூறினர். கார்உலகத்திற்குத் துணைக்காரணம் என்பதனை "கருவிமாமழை" என இந்நூலாசியர் கூறியிருக்கிறதைடதச் செய்யுளாலும், உலகம்மழை இன்றியமையாது என்பதனை "வானின்றுலகம் வழங்கிவருதலான்" என்னும்திருக்குறளாலுமறிக. உண்டியருள் காப்புஎனக்கூறினரேனும் "ஒருமொழி யொழிதன் இனங்கொளற்குரித்தே" என்றமையால் பிறகாப்பும் அமையும்.

**(99)** சங்கந் தொடருங் கழுமுட் படையுடைய
மங்கையுமை யொப்பனையாள் வாரணிந்த - கொங்கை
தழுவுந் திருமார்புந் தானுணரா நாயேன்
முழுவெந் துயரமும்போ மோ.

(இ - ள்.) சங்கம்தொடரும் - பருந்துகள்தொடர்கின்ற, கழு முள்படை உடைய - சூலாயுதத்தையுடையவனே, மங்கை உமை ஒப்பனையாள் - மங்கைப்பருவத்தையுடைய வுமாதேவியாராகிய ஒப்பனையம்மையின், வார்அணிந்த - கச்சையணிந்த, கொங்கை - தனத்தை, தழுவும் திருமார்பும் - தழுவுகின்ற திருமார்பையாயினும் - உணரா - அறியாத, நாயேன் - நாயினேனது, முழுவெம் துயரமும்போமோ - முழுமையாகிய கொடுந்துன்பமும் நீங்குமோ, எ - று.

பருந்துதொடர்தல் கழுமுட்படை தமக்குவிருந்து செய்தலா லென்க. உடைய என்பதை வினியடைந்த குறிப்பு வினையாலணையும்பெயராகக் கொள்ளுதலேயன்றிக் குறிப்புப்பெயரெச்சமாகக்கொண்டு உடைய, தழுவும்என்னும் பெயரெச்சங்கள் இரண்டடுக்கி மார்புஎன்னும் பெயர்கொண்டதெனினுமாம். அவ்வாறுகொள்ளும்போது கையிற்கொண்டசூலம் மார்பில் விளங்குதலால் ஒற்றுமை நயத்தால் மார்பைக்குறித்தார் என்னல்வேண்டும். உமாதேவியாருக்குச்சூலம் உண்டாதலால் ஒப்பனையாளுக்கு விசேஷண மாக்கினுமாம். வெண்பாவிலக்கணம் சிதையாமையால் "உடையாய்" என்றும் பாடமிருக்கவுங்கூடும். ஒப்பனையாளது தனந்தழுவும் திருக்களவீசனது திருமார்பையும் உணராத அடியேனது துயரமுழுதும் நீங்குமோ என்பதுகருத்து.

(100) மோன விரத முனிவர் விழித்துறங்கும்
ஞான துரியமுத னண்ணுவோர் - மானதத்தின்
உள்ளுவதுந் தன்னைமறந் தொன் றுவதும் பால்வண்ணா
தெள்ளுவது நின்மலர்த்தாட் சீர்.

(இ - ள்) மோனவிரதமுனிவர் - மௌந விரதத்தைப்படைத்த முனிவரும், விழித்து உறங்கும்-விழியாநின்றே உறங்குகின்ற, ஞான துரியமுதல் நண்ணுவோர் - ஞானதுரியமுதலாகிய பூமிகளை அடைவோரும்,மானதத்தின்உள்ளுவதும்-மனத்தினால்நினைப்பதும், தம்மை மறந்து ஒன்றுவதும் - தம்மைமறந்து கலப்பதும், தெள்ளுவதும் - தெளிவதும், பால்வண்ணா - பால்வண்ணனே, நின்மலர்த்தாள்சீர் - உன்தாமரை மலர்போன்ற திருவடியின்புகழையே, எ - று.

மௌநவிரதத்தையுடைய முனிவரும், ஞானதுரியமுதலாகிய ஞானபூமிகளையடைந்த ஞானிகளும், தம்மனத்தினால் நினைப்பதும் தம்மைமறந்து கலப்பதும் ஆராய்ந்து தெளிவதும் உன்தாமரைமலர் போன்ற சீர்பாதத்தின் புகழையேஎன்பதுகருத்து. விழித்துறங்கல்-நனவில் சுழுத்திநிலையை யடைந்திருத்தல். நனவு-சாக்கிராவத்தை. மனம் என்பது மானதம் என்றாயது.

துரிய முதலென்றாராயினும் சுபேட்சைமுதல் எனக்கொண்டு ஞானபூமிகள் ஏழையுங்கொள்க. அவை:—சுபேட்சை, விசாரணை - தநுமாநசி, சத்துவாபத்தி, அசம்சத்தி. பதார்த்தாபாவனை, துரியம் என்பன: இவற்றுள் துற்சங்கம்நீங்கி சிவஞானத்தை விரும்புவது சுபேட்சையென்றும், நற்சங்கத்தையடைந்துஅவர்சொல்லும் சொற்களைவிசாரித்து ஞானநூல்களிற்பழகுதல் விசாரணையென்றும், அவ்

விசாரணையால் வெளிப்படுவதாகிய பரம்பொருளைநம்பி, முன்னுள்ள இச்சைகளை விடுதல் தநுமாநசியென்றும், இந்தமூன்று பூமிகளின் பழக்கத்தால்,மெய்ஞ்ஞானம்பிறத்தல் சத்துவாபத்தியென்றும், உண்மையில்மனம் ஸ்திரப்பட்டு பொய்ம்மைகள் அனைத்தையும் மறந்து விடுதல் அசம்சத்தியென்றும், அத்துவிதாந்தம்உண்டாதலும் திரிபுடி நீங்குதலும் பதார்த்தாபாவனையென்றும், பிரமப்பொருளின் நிச்சயமிருந்தவண்ணமிருக்கின்ற மௌனசுபாவம் துரியம்என்றும் சொல்லப்படும். தநுமாநசி - மனம்சிறுகுதல். சத்துவாபத்தி - உண்மையிலே உறுதிப்பட்டுநிற்றல். அசம்சத்தி - சங்கற்பமற்றிருத்தல், திரிபுடி - காண்பான், காட்சி, காட்சிப்பொருள் என்பன. இவற்றை ஞாதுரு, ஞானம் - ஞேயம் என்றுங்கூறுவர். பதார்த்தாபாவனை - பதார்த்தங்களின் எண்ணம். இவற்றின் விரிவெல்லாம் கைவல்லிய நவநீதம் சந்தேகந்தெளிதற்படலம். 149ஆம் பாட்டுமுதலாகிய பாடல்களாற் கண்டுகொள்க.

திருக்கருவைவெண்பா வந்தாதிமூலமுமுரையும்

முற்றிற்று.

---